சத்ய விரத சாஸ்திரி

# ஸ்ரீ ராமகீர்த்தி மஹாகாவியம்

தமிழாக்கம்
ராஜலக்ஷ்மி சீனிவாசன்



உள் அட்டையில் காணும் சிற்பக் காட்சியில், பகவான் புத்தரின் அன்னை மாயாதேவி கண்ட கனவின் பலனை மன்னர் சுத்தோதனருக்கு நிமித்திகர் மூவர் விளக்குகின்றனர். அவர்களுக்குக் கீழே அமர்ந்து அந்த விளக்கத்தை எழுதுகிறார் ஓர் எழுத்தர். எழுதும் கலையைச் சித்திரிக்கும் முதல் இந்தியச் சிற்பம் இதுவாகவே இருக்கலாம்.

நாகார்ஜுன் மலைச்சிற்பம் கி.பி. இரண்டாம் நூற்றாண்டு. (பட உதவி: நேஷனல் மியூசியம், புதுதில்லி)

# ஸ்ரீ ராமகீர்த்தி மஹாகாவியம்

(தாய் ராமகீயனை தழுவி எழுதிய சம்ஸ்கிருத மகாகாவியம்)

சத்ய விரத சாஸ்திரி

தமிழாக்கம்

**ராஜலக்ஷ்மி சீனிவாசன்**

முன்னுரை

தாயிலாந்து அரசகுமாரி மதிப்பிற்குரிய

**மகாசக்ரீ சிரிந்தோன்**




**சாகித்திய அகாதெமி**

*Sree Ramakeerthi Mahakaviyam*
Tamil Translation by Rajalakshmi Srinivasan from *Samskrita Mahakaviyam*
by Satya Vrat Sastri based on Thai Ramayana New Delhi, 2012.



முதல் பதிப்பு: 2012
ISBN- 978-81-260-3360-7

சாகித்திய அகாதெமி
இரவீந்திர பவன், 35 பெரோஸ்ஷா சாலை,
புது தில்லி : 110001

விற்பனை:

'ஸ்வாதி' மந்திர் சாலை, புது தில்லி 110 001 ▫ மத்தியக் கல்லூரி வளாகம், பல்கலைக்கழக நூலகக் கட்டடம், டாக்டர் அம்பேத்கர் வீதி, பெங்களூரு 560 001 ▫ 4, டி.எல். கான் சாலை, கல்கத்தா 700 025 ▫ 172, மும்பய் மராத்தி கிரந்த சங்கிரகாலய சாலை, தாதர், மும்பய் 400 014 ▫ குணா பில்டிங்ஸ், 443, அண்ணாசாலை, தேனாம்பேட்டை, சென்னை 600 018.

Visit out website at http://www.sahitya-akademi.gov.in
E-mail:sahityaakademichennai@gmail.com

விலை: ரூ. 135/-
ஒளி அச்சு : Rameswari Graphics, Chennai -600 021, Ph: 044-25953315.
அச்சகம்: Shri Vignesh Printers, Chennai.

யாவத்ஸ்தாஸ்யந்தி கிரய: ஸரிதஸ்ச மஹீதலே
தாவத்ராமாயணகதா லோகேஷு ப்ரசரிஷ்யதி

*****

*இப்பூவுலகில் மலைகளும் நதிகளும் இருக்கும் வரை*
*இவ்வுலகில் ராமனின் கதையும் பிரசித்தி பெற்றிருக்கும்.*

## பொருளடக்கம்

### அத்தியாயம்

# முன்னுரை

பேராசிரியர் சத்தியவிரத சாஸ்திரியினால் சம்ஸ்கிருத மொழியில் எழுதப்பட்ட இதிகாச காவியமான ஸ்ரீராமகீர்த்தி மஹாகாவியத்தை வாசகர்களுக்கு அளிக்கும் பணி, எனக்கு மனமகிழ்ச்சி அளிப்பதாகும். இதுவோ இருபத்தைந்து அத்தியாயங்களைக் கொண்ட ராமகீயன் என்னும் தாயிலாந்து நாட்டிலுள்ள ராமகதையைத் தழுவிய மாபெரும் காப்பியமாகும். பேராசிரியர் சத்தியவிரத சாஸ்திரி தாயிலாந்து நாட்டின்மீது உள்ளத்தைத் தொடும் ஆழ்ந்த அன்பு பூண்டவர். இந்த அன்பே ஆயிரத்துத் தொள்ளாயிரத்து எழுபத்து ஒன்பதாம் ஆண்டு, அவரைத் தாயிலாந்து நாட்டைப் பற்றிய 'தாயீதேசிவிலாசம்' என்ற கவிதையை எழுதத் தூண்டியது. அதே அன்பு அவரை மற்றொரு கவிதை மஹாகாவியத்தைத் தாயீ ராமகீயனைத் தழுவி எழுதத் தூண்டியது.

இங்கு இந்நூலில் பேராசிரியர் சத்தியவிரத சாஸ்திரி ராமகீயன் என்னும் கதையைச் சம்ஸ்கிருதத்தில் புனைந்துள்ளார். ஏனெனில் இம்மொழியில் புனைவதால் பாரதத்தில் மாத்திரமின்றி உலகின் பல்வேறு நாடுகளிலுமுள்ள லக்ஷக்கணக்கான கற்றறிந்த மேன்மக்கள் எல்லோரும் படித்து இன்புற வேண்டும் என்றே நினைத்தார். இந்நூல் ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக தொடர்ச்சியான வரலாற்றைத் தன்னுள் அடக்கியதால் சம்ஸ்கிருத நூல்களஞ்சியத்திற்கு ஓர் அரும்பெரும் இணைப்பாகும்.

தாயிலாந்து நாட்டில் ராமகீயன் கதை, காவியம், கவின்கலைகள், ஒளிப்படக் கலைகள் எனப் பலவற்றில் பலவிதங்களாகக் கூறப்பட்டு வந்தன. சுகோதாய் நாட்களிலேயே அதாவது சுமார் எழுநூறு ஆண்டுகளுக்கும் முன்னரே இக்கதை தாயிலாந்தில் பிரபலமாக இருந்திருக்க வேண்டும். ஏனெனில் இக்கதையில் குறிப்பிடப்பட்டுள்ள 'ராமா கேவ்', 'சீதா கேவ்' என்ற பல இடங்களில் பெயர்கள் பழைய கல்வெட்டுகளில் காணப்படுகின்றன. 'அயுத்யா' காலத்தில் (கி.பி. 1350-1767) ராமகீயனை மூலமாகக்கொண்டு பல நூல்கள் கவிதைகளாக எழுதப்பட்டிருக்க வேண்டுமெனக் கருதப்படுகிறது. ஆனால் துரத்ருஷ்டவசமாக ஒரு சில நூல்களே கிடைக்கப்பெற்றன என்பது பல இதர சமகால நூல்களில் மேற்கோளாகக் காட்டப்பட்டிருப்பதிலிருந்து தெரிய வருகிறது. அதன்பிறகு தோன்புரியைச் சேர்ந்த 'டாஸ்கின்' என்னும் மன்னன் (1767-1782) கவிதை வடிவில் எழுதிய இக்கதையின் சில பகுதிகள் இன்றும் தாய்லாந்து முழுவதும் பிரபலமாகப் படிக்கப்படுகிறது.

'ரத்தன்னகோசின்' சகாப்தத்தின் துவக்கத்தில் முதலாவது மன்னன் ராமன் (1782-1809) இப்பொழுது இருக்கும் அரசவம்சத்தின் முதல் மன்னனாக விளங்கினான். அம்மன்னன் ராமகீயனின் அநேகமாக முழுவதுமான நூலை விவரமாகச் சேகரித்துக் கவிதை வடிவில் அளித்தான். இரண்டாவது மன்னன் ராமன் (1809-1824) அரசு புரிந்தவன் சுருக்கமாக மேடையில் நடித்துக்காட்டும் வகையில் பதிப்புரு ஒன்றைப் புனைந்தான். அவ்வம்சத்தில் வந்த ஆறாவது மன்னன் ராமன் (1910-1925 அரசு புரிந்தவன்) கற்றறிந்தவர்கள் உணர்ந்து படிக்கும் வகையில் ராமகீயன் கதையின் தோற்றுவாய், வளர்ந்த முறை இவைகளைச் சேகரித்து ஒரு உன்னத நூலை வெளியிட்டான். ராமகீயன் நூலின் பிரதிகள் பல இருப்பதற்குப் பல தோற்றுவாய்கள் இருப்பதே காரணம் என்பதே அவரது கூற்றாகும். வங்காளத்திலிருந்த சமஸ்கிருத மொழியிலமைந்த பிரதி, விஷ்ணு புராணம், ஹநூமந்நாடகம் முதலிய

பழங்குடியைச்சார்ந்த நூல்களே ராமகியனின் தோற்றுவாயாகக் கருதப்படுகின்றன. தாய்லாந்தின் வடக்கு, வடகிழக்கு, தெற்கு மாகாணங்களில் நாட்டுப்புறப் பாடல்களாக அமைந்திருந்தன. அவைகள் இன்றும் உள்நாட்டு மக்களால் போற்றி வரவேற்கப்படுகின்றன.

நுண்கலைக் கூடங்களில் ராமகியன் கதை பிரத்யேகமாக 'நாங்கு' எனப்படும் நிழற்படங்களாகவும், 'கோன்' எனப்படும் முகமூடியுடன் கூடிய நடனங்களாகவும் பயன்படுத்தப்படுகிறது.

'நாங்கு' எனப்படும் நிழற்படங்களில் கால்நடைகளின் தோல்களினால் பாத்திரங்களின் உருவங்கள் செதுக்கப்பட்டுக் கலையுணர்வுடன் சீலையின் பின்புறமிருந்து ஆட்டிவைக்கப் படுகின்றன. அதன் நிழல்களே வெளியில் நல்ல ஒளியுடன் கூடிய சீலையில் பார்க்கப்படுகின்றன. 'நாங்கு' எனப்படுவது 'நாங்குயாய்' யின் சுருக்கச் சொல்லாகும். (தாய் நாட்டின் மொழியில் 'யாய் என்றால் பெரியது என்பது பொருளாகும்) 'நாங்கு தலுங்கு' என்பது பிறிதொரு பிரபலமான நாடக முறையாகும். அது தாய்லாந்தின் தென்மாகாணங்களில் பிரசித்தி பெற்றதாகும். இதில் பாத்திரங்கள் எல்லாம் சித்தரிக்கப்படுவதைவிட பல மடங்கு பிரம்மாண்டமாக 'நாங்கு' முறையில் அமைக்கப்படுகின்றன.

கோன் எனப்படும் முகமூடியணியும் நாடகத்தில் கதாபாத்திரங்கள் தங்களது எண்ணங்களையும், உள்ளுணர்வு களையும் உடலசைவுகளினாலும், சைகைகளினாலும் வெளிப் படுத்துகின்றனர். அக்கலையில் கதாபாத்திரங்கள் மேடையில் பேசவேண்டிய அவசியம் இருப்பதில்லை. ஏனெனில் ஒரு பிரத்யேகமான குழுவினர் பின்னணி வாத்தியங்களுடன் இதற்கேற்ற பாடல்களை இசைக்கின்றனர்.

தாய்லாந்தில் 'பிரசாத் ப்னோம் ரங்கு', 'பிரசாத் ஹின் பிமை' போன்ற சமயங்களைச் சார்ந்த பல நினைவுச்சின்னங்கள் உள்ளன. அங்கு ராம கதையிலிருந்து பல நிகழ்ச்சிகள்

ஓவியங்களாகச் செதுக்கப்பட்டுள்ளன. மாணிக்கக் கற்களினால் செதுக்கப்பட்ட புத்தர் கோயிலில் 'வாட் ப்ரா கேவ்யூ' என்னும் ஓவியக் கலைகாட்சிக் கூடத்திலுள்ள 'மூரல் பெயின்டிங்', 'வாட் பிரா சேடுபோன்' என்னும் இடத்தில் செதுக்கப்பட்டுள்ள் சிலைகளிலும் ராமகீயன் கதை நிகழ்ச்சிகளை கண்ணாரக் காணமுடிகிறது.

மற்ற ராமகதைகளினின்றும் பல மாற்றங்களைத் தன்னகத்தே கொண்ட தாயீ ராமகீயன் எனப்படும் ராம கதையைத் தாய்லாந்தை விட்டு வெளியுலகில் உள்ளவர்களும் படித்துத் தெரிந்து கொள்வது என்பது நல்லதொரு கருத்தாகும். இப்பணியைத்தான் பேராசிரியர் சத்திய விரத சாஸ்திரி அவர்கள் சமஸ்கிருத மொழியில் அழகிய சொல்நயத்துடன் செய்திருக்கிறார். காவியப்பற்றுள்ளோர் மிகவும் போற்றிடும் வண்ணம் இந்நூல் அமைந்துள்ளதென்பதைத் திண்ணமாக நம்புகிறேன்.

...மகாசக்ரீ சிரிந்தோன்

# என்னுரை

அநேகமாக நான் எழுதிய நூல்கள் எல்லாம் ஒரு அசாதாரணமான சூழ்நிலையிலேயே எழுதப்பட்டவையாகும். இந்த நூலும் அதற்கு விதிவிலக்கல்ல. என்னுடைய சம்ஸ்கிருத மொழியறிந்த நண்பர்களுக்குப் பிரத்யேகமாக சம்ஸ்கிருதத்திலேயே தங்களுடைய நூல்களைப் புனைபவர்களுக்கு நான் பொதுவாக சம்ஸ்கிருத மொழியிலேயே கடிதம் எழுதுவது வழக்கம்.

அக்கடிதங்களில் அவர்களது நலனைக் குறித்து எழுதுவதுடன், பல இதர செய்திகளைப் பற்றியும் ஆய்வு செய்து எழுதுவது வழக்கம். அவர்களில், சிலர் சாத்திரங்களில் கலந்துரையாடுவதில் ஈடுபட்டவர்கள்; சிலர் பற்பல புதிய புதிய தலைப்புகளைப் பற்றி ஆராய்வதில் ஆர்வங்கொண்டவர்கள்; சிலர் பயணக்கதைகளைப் பற்றி படித்தறிவதில் வல்லுநர்களாவர்; இம்முறையில் தான் எனது நண்பரும் மாணாக்கருமான ஸ்ரீ கிருஷ்ணலால் அவர்களுக்கு பாங்காக் நகரிலிருந்து கடிதம் ஒன்று எழுதினேன். நான் இங்கு வந்து ஒரு மாதகாலமே ஆயிற்று. அக்கடிதத்தில் தாயி மொழியில் கடவுள் வசிக்குமிடம் என்னும் பொருள்பட கிருந்ததேவ் என்னும் சொல்லைச் சக்ரி வம்சத்தை ஸ்தாபகம் செய்த மன்னர் பேங்காக் நகரத்திற்கு பெயர் சூட்டினார் என்பது பற்றி விவரிக்கப்பட்டிருந்தது. அம்மன்னர் பெருமானே ராமகீர்த்தி என்னும் பெயரில் ராமகதையை தனது மொழில்

பாடியுள்ளார் என்றும் குறிப்பிடப் பட்டிருந்தது. அவருக்குப்பிறகு அவரை அனுசரித்து வந்த மாமன்னர்களும் இந்த விஷயத்தை ஏற்றுக்கொண்டனர் என்றும் குறிப்பிடப்பட்டிருந்தது. அதற்குப் பிறகும் டாக்டர் கிருஷ்ணலால் அவர்களுக்கு அவருடைய வேண்டுகோளுக்கிணங்கி இரண்டு கடிதங்களில் ராமகீர்த்தியில் வரும் சில நிகழ்ச்சிகள் பற்றி விவரமாக எழுதியிருந்தேன். இதுதான் இக்காவியத்தின் துவக்கமாகும். மழைத் தாரையைப் போல் கவிதைத் தாரையும் தானாகவே வெளிவந்தன. தன் மனநிறைவன்றி இதைப் புனைய பயன் வேறேதுமில்லை.

இக்காவியம் குருபூர்ணிமா தினத்திற்கு முதல்நாள் நிறைவு செய்யப்பட்டது. இந்த வாக்கியங்கள் மிகவும் புண்ணிய தினமான அன்று தான் என்னால் எழுதப்பட்டது.

உண்மையில் ஆசியாக் கண்டத்தின் பொதுவாக அமைந்த காவியம் ஒன்று உண்டென்றால் அது ராமாயணமே என்று கூறப்படுகிறது. அது தவறல்ல. இங்குள்ள மக்களுக்கு இது நன்கு பரிசயமானதே. அவர்களும் ராமகதையில் பல கதைகளை இணைத்துள்ளனர். இதுவே அவர்கள் ராமகதையைத் தங்களுடையதாக நினைக்கிறார்கள் என்பதற்கோர் எடுத்துக் காட்டாகும். எனக்கோ ராமாயணத்தில் ஒரு சிறப்பான ஈடுபாடுண்டு. பலமுறை வால்மீகியின் ராமாயணத்தை முதலிலிருந்து அடிவரை நான் ஆராய்ந்து படித்ததுண்டு.

நான் சாகித்ய அகாதெமியின் விருதைப் பெற்றதும் மாண்பும் மரியாதையும் கொண்ட எனது தந்தையார் ஒரு மேடையில் நான் தாயின் கருப்பையிலிருந்த பொழுது எனது தாயாருக்கும் மற்றும் அங்கு கூடியிருந்த பலருக்கும் வால்மீகி ராமாயணத்தைப் படித்து செவியுறச் செய்தார் என்ற முன்பு நடந்ததொரு நிகழ்ச்சியை எடுத்துரைத்தார். அதனால் நான் இவ்வாறு மொழியியல் ஆராய்ச்சியில் ஈடுபட்டு ராமாயணத்தை

விவரமாக படித்தது எதிர்பார்க்க முடியாததொன்றல்ல. இப்பொழுதும் பணியில் ஈடுபட்டு இலக்கியம் படைப்பவனாகவே ராமகீர்த்தி என்னும் பெயர்பெற்ற தாயீ ராமாயணம் எழுத முற்பட்டுள்ளேன். ஸ்ரீமத்ராமாயணத்திலும் பொதுவாக பாரதத்திலும் மற்ற புகழ்பெற்ற ராமாயணங்களிலும் கிடைக்காத பல உபகதைகள் தாயீ ராமாயணத்தில் பிரத்யேகமாகக் காணப்படுகின்றன. தாயீ ராமாயணத்தின் சிறப்பை வெளிப்படுத்த வேண்டி அந்த உபகதைகள் நான் இயற்றிய தாயீ ராமாயணத்தில் விவரமாக எடுத்தாளப்பட்டுள்ளன.

ராமகீர்த்தியிலுள்ள ராமகதையை நான் ஒரு கருவாகவே கொண்டேன்; அக்கருவைக்கொண்டு நானோ என் வழிப்படி என் மொழித்திறன் ஒட்டி அதை ஒரு காவியமாக புனைந்துள்ளேன்.

எந்த ஒரு விவரத்தையும் தேவமொழியாம் சம்ஸ்கிருத மொழியில் புனைவதில் ஒரு பிரத்யேகமான விவரிக்கவொண்ணா மகிழ்ச்சி ஏற்படுகிறது. இக்காவியத்தை இயற்றிய நானும் அம்மகிழ்ச்சியை எல்லையின்றி அடைந்தேன். முழுவதும் மகிழ்ச்சியைப் பருகினேன். என் வாழ்நாள் முழுவதுமே சம்ஸ்கிருத காவியானந்தத்திலேயே கழித்திடுவேன். அவ்வழியைத் தொடர்ந்தே இம்முயற்சியையும் ஏற்கிறேன்.

இப்பொழுது ராமகீர்த்தி காவியத்தின் கதாபாத்திரங்களைப் பற்றி சிறிது புகல முற்படுகிறேன். இருவிதமான பாத்திரங்கள் ராமகீர்த்தியில் காணக்கிடைக்கின்றன. ஒன்று வால்மீகி ராமாயணத்தில் காணப்படும் பாத்திரங்கள். அவர்களின் பெயர்களும் அப்படியே எடுத்தாளப்பட்டுள்ளன. உச்சரிப்பில் வேற்றுமை காணப்படும். மற்ற அப்பெயர்களையும் வால்மீகியில் உள்ளபடியே நான் கையாண்டுள்ளேன். சம்ஸ்கிருத காவியத்தினின்னும் வேறு

வித்தியாசமாக ஏற்கப்படவேண்டாம் என்றே நினைக்கிறேன். தசரதன் என்னும் பெயரை அகற்றி தோத்ஸரோத் என்ற பெயரை ஏற்கவில்லை. மேலும் லக்ஷ்மண பரத சத்ருக்னன் என்னும் பெயர்களே ஏற்கப்பட்டுள்ளன. லக்ப்ரோத்சத்ருத் என்ற பெயர்களல்ல. விபீஷணன் என்ற பெயருக்கு பதிலாகப் பிபேக் என்று ஏற்கவில்லை. ஆனால் மற்ற ராமாயணங்களில் காணக்கிடைக்காத ராமகீர்த்தியிலேயே படைக்கப்பட்ட பாத்திரங்களின் பெயர்கள் ராமகீர்த்தியில் கூறப்பட்டமுறையிலேயே என்னால் ஏற்கப்பட்டுள்ளன. அவைகளைச் சம்ஸ்கிருத மொழியில் மாற்றிக் கையாளவில்லை. அவ்வாறு செய்வதால் ராமகீர்த்தியின் மூல உருவமே தெரியாமல் போய்விடும். மேலும் அப்பெயர்களின் சிறப்பான குறிப்புகளை சம்ஸ்கிருதத்தில் வகைப்படுத்திக் கொடுப்பதும் சாத்தியமாகாததாகும். இதற்கு எடுத்துக்காட்டாக மச்சானு, பேஞ்ஜகயீ, வீரக்வனா, மலிவக் ப்ரும்ம முதலிய பெயர்களை எடுத்துக்கொள்ளலாம். இங்கும் சில பெயர்கள் சம்ஸ்கிருத பெயர்கள் போல் தோன்றினாலும் அவைகள் சீரான சம்ஸ்கிருத மொழியில் அமைவதில்லை. அவ்வாறே அசுரபத் என்ற பெயர் அசுரபத என்றோ அல்லது அசுரபத்ர என்ற சொல்லின் அபப்ரம்ச ரூபமோ என்றெண்ணத் தோன்றுகிறது. அது ஆய்வு செய்ய வேண்டியதாகும்.

அதனால் அவைகளை அப்படியே கையாள்வதே சிறந்தது என்று நினைத்து மூலத்தில் உள்ளபடியே எடுத்தாளப்பட்டுள்ளது.

தாய்லாந்தில் சிவபெருமானின் பெயர் 'இஸூவன்' என்று 'ஈஸ்வரன்' போலவும் கடவுளான விஷ்ணு என்னும் பெயர் 'நராய' என்பது நாராயணன் என்பது போலவும் அமைந்துள்ளன. இப்பெயர்கள் இன்றும் அங்கு பயன்படுத்துகின்றனர். அப்பெயர்களையே காவியங்களிலும் உபயோகப்படுத்துகின்றனர்.

தென்னாசிய ராமாயணங்களில் ராமகீர்த்தி மகாகாவியம் என்னும் ராமாயணமே சம்ஸ்கிருதத்தில் எழுதப்படும் என் முதல் முயற்சியாகும். தாயீ நாட்டின் சம்பந்தப்பட்ட நூல்களில் இது இரண்டாவது நூலாகும். முதலாவது தாயீதேச விலாஸம் எனப்படும் காவியம். அதுவும் என்னால் புனையப்பட்டதே. இது தாயீ தேச வரலாறாகும். இது கண்டகாவியம் எனப்படும் சிறு காப்பியமாகும். இதில் தாய்லாந்து நாட்டின் வரலாறு, பண்பாடு, கலாசாரம் முதலிய விவரங்களும் முக்கிய இடங்களும் பேசப்படுகின்றன.

இந்நூலை வெளியிட நிதியுதவியளித்த பாங்காக் நகரிலுள்ள மூலாமல சச்தேவ், அமலநாத சச்தேவ் எனப்படும் இரு ஸ்தாபனங்களுமாகும். அத்தர்மகர்த்தாக்களுக்கு நான் மிகவும் கடமைப்பட்டுள்ளேன். இவர்களைத் தவிரவும் பிறிதொரு விதத்தில் பரமபாகவதரும் தவத்தையே உருவாகக் கொண்டவரும் பெரும் மரியாதைக்குரிய மண்டலேச்வரஸ்ரீ 1008 ஸ்வாமி லோகேசாநந்தகிரி என்ற பெரியவருக்கும் நான் எனது நன்றிகளைத் தெரிவித்துக் கொள்கிறேன். இந்த மூல நூலை தட்டெழுத்தில் அடித்து அவ்வாறு அடித்தை அச்சிட அளித்து வெளியிடவும் நிதியுதவிகளை மேற்கூறிய ஸ்தாபனங்கள் அளிக்க வேண்டு மென்பதில் அவர் மிகவும் கருத்துக் கொண்டும் ஈடுபட்டிருந்தார். அவருடைய சிறப்பான ஆசிகளுக்கு நான் என்றும் கடமைப் பட்டுள்ளேன். ஸ்ரீஜயகிருஷ்ண பிப்பலானி அவர்கள் குறிப்பிட்ட காலத்திற்குள் தட்டெழுத்திலிட்டு மிக உதவிகளைச் செய்தார். அவருக்கும் எனது நல்வாழ்த்துக்களை தெரிவிக்கிறேன்.

தாயிலாந்து நாட்டிலுள்ள மகா ராஜகுமாரி மகாசக்ரீ சிரிந்தௌர்ன் சம்ஸ்கிருதத்தில் மிகப்புலமை பெற்றவள் என்பது தாய்லாந்திற்கும் பாரதத்திற்கும் மிகப்பெருமைகொள்ளும் கௌரவம் அளிக்கும் விஷயமாகும். பல ஆண்டுகள் சம்ஸ்கிருத காவ்யங்களை கற்றறிந்தவள். அதன் உட்கருத்துக்களையும்

அறிந்தவள். பல பணிகளில் ஈடுபட்டிருந்த போதிலும் இந்நூலிற்கு முன்னுரை வரைந்துகொடுத்ததை நினைத்து அவருக்கு நான் மிகவும் கடமைபட்டுள்ளேன். அவரது முன்னோர்கள் தங்கள் தங்களுடைய சொற்களினால் ராமகாதையைப் புனைந்தார்கள் என்பதை இந்நூலின் முன்னுரையில் சிறப்பாக எடுத்துக் கூறியுள்ளார். ராமகீர்த்தி என்னும் பெயர்கொண்ட இந்த ராமாயணம் இந்த தேசத்தினுடையதே.

என்னுடன் இங்கு வசித்து வந்த என்னுடைய சகதர்மிணியாம் மனைவியுடன் நான் இக்காவியத்தை எழுதி முடிக்கும் காலம்வரை நேரம் ஒதுக்கிட முடியவில்லை. அதற்கு அவளிடம் மன்னிப்புக் கோருகிறேன். நமக்கெல்லாம் இவர்கள் நம் நல்வினைப்பயனால் கிடைத்தவர்கள் ஆரியப் பெண்மணிகள் எதையும் சகிக்கக் கூடியவர்கள் அதனாலேயே சர்வம்சஹா என்றழைக்கப் படுகின்றனர்.

இந்நூல் என்னுடன் இணைந்தே பணிபுரியும் தில்லி பல்கலைக் கழகத்தைச் சார்ந்த ஹிந்து மகா வித்யாலயாவின் சம்ஸ்கிருதப் பேராசிரியர் முனைவர் ஜியாலால கம்போஜன் அவர்களால் ஆங்கிலத்தில் மொழியாக்கம் செய்யப்பட்டது. மிகவும் முயற்சி எடுத்துக் கவனத்துடன் அவரே அச்சுப்பார்வைப் படிதிருத்தமும் செய்துள்ளார். தில்லியில் நான் இருக்க முடியாததால் அச்சிட்டு வெளியிடும் பணிகளை மிகவும் ஈடுபாட்டுடனும் கவனத்துடனும் செய்திருக்கிறார். இந்நூல் தாயீ மொழியிலும் பாங்காக்கிலுள்ள சில்பாகோன் விஸ்வ வித்யாலயத்தின் கீழைநாட்டு மொழித் துறையிலுள்ள சம்ஸ்கிருதப் பேராசிரியர் முனைவர் சமலெங் ஸரபத்ருக் என்பவரால் மொழிபெயர்க்கப்பட்டுள்ளது. என்னிடம் மிகுந்த அன்பு பூண்டவர்களும் கற்றறிந்தவர்களுமான அவ்விருவர் களுக்கும் எனது மேலான நன்றிகளைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

பாரதமும் தாய்லாந்தும் அண்டை நாடுகளே; அதுபோலவே அவைகளின் வரலாறுகளும் பண்பாடும் பண்டைகாலத்திலிருந்தே ஒருங்கிணைந்து வெகு அண்மையிலமைந்தவைகளே. அவைகளை மேலும் வலுப்படுத்துவது எல்லோருக்கும் நன்மை பயப்பதாகும். அதைக் கருத்தில் கொண்டே இந்நூல் எழுதப்பட்டது.

குரு பூர்ணிமா

*18-7-1989*

சத்ய விரத சாஸ்திரி

தாயிலாந்தின் பேங்காக் நகரிலுள்ள சில்பகோன்
பல்கலைக்கழகத்தின் பேராசிரியர் தில்லிப்
பல்கலைகழகத்தின் சம்ஸ்கிருத மொழித்துறையின்
விரிவுரையாளர்

# மொழிபெயர்பாளர் உரை

ராமகதை நம் புனித பாரதநாட்டின் பண்பாடு, கலாசாரம், கலை இவைகளை தந்நகத்தே நிறைத்து விளங்கும் ஓர் கலைக்கூடமாகும். வால்மீகி முனிவர் ஸ்ரீமத்ராமாயணம் என்னும் பெயரில் அழகாகவும், நம் மனதைக் கவர்ந்து அக்கதையின்கண் கூறப்பட்டவைகளை நம் மனதில் ஆழப்பதியும் வண்ணம் எளிமையான நடையில் எழுதியுள்ளார். இக்காப்பியமோ பல ஆயிரக்கனக்கான ஆண்டுகளுக்குப் பின்னரும் இன்றும் போற்றப்பட்டு நம்மிடையில் நிலவிவருகிது.

ராமாயணம் எனப்படும் இக்காப்பியம் நமக்கு வாழ்க்கை நெறிமுறைகளை விளக்கமாகவும் தெளிவாகவும் எடுத்துக்காட்டி நம்மை வழிநடத்திச் செல்கிறது. அதை அனுஸரித்து காலக்கிரமத்தில் பல ராமகதைகள் பல காலங்களில் பல இடங்களில் காலத்திற்கும் தேசத்திற்கும் ஏற்ற கோட்பாடுகளை ஏற்று புனையப்பட்டுள்ளன. பாரதநாட்டின் பன்மொழிகளில் பலதரப்பட்ட ராமாயணங்கள் இருப்பது மாத்திரமன்றி கடல் கடந்த பல அயல் நாடுகளிலும் இக்கதை பரவியிருப்பது நம்மை வியப்பில் ஆழ்த்துவதாக உள்ளது.

இச்சூழலில் 'ராம்கியன்' என்ற தலைப்பில் அமைந்த தாய்லாந்து ராமாயணம் மிகவும் சிறப்பு வாய்ந்தது, இது முதன்முதலாக தாய்லாந்து நாட்டை ஆண்டு வந்த சக்ரீ வம்சத்து அரசரால் இயற்றப்பட்ட தென்று கூறப்படுகிறது. இதை வடமொழியில் 'ராமகீர்த்தி மஹாகாவியம்' என்ற தல்லைப்பில் பத்மபூஷண் ஸ்ரீசத்யவ்ரத சாஸ்த்ரீ அவர்கள் இயற்றியுள்ளார். இதில் வால்மீகியின் ராமகதையுடன் பற்பல புதிய கதைகளும் நிகழ்ச்சிகளும் இடம் பெற்றுள்ளன. இவை மூலக்கதையின்

அழகையும் வளமையையும் பன்மடங்கு அதிகரிக்கச் செய்கின்றன.

இக்காப்பியத்தை தமிழில் மொழிபெயர்த்து தமிழ் மொழி அறிந்தவர்களுக்கு அளிக்கும் ஓரரிய வாய்ப்பை சாஸ்திரி அவர்கள் எனக்களித்தது என் பெரும் பாக்கியமே. மேலும் அதை சாகித்திய அகாதமி வெளியிட முன்வந்தது எனது மகிழ்ச்சியை பன்மடங்கு விரிவடையச் செய்கிறது. இவர்களுக்கு என் மனமார்ந்த நன்றியைத் தெருவித்தக்கொள்கிறேன்.

இந்நூலில் பல நிகழ்ச்சிகள் மிகவும் மனைதத் தொடுவதாக உள்ளன. முதலாவதாக ஆன்மாவை உடலிலிருந்து பிரித்தெடுக்க முடியும் என்றொரு செய்தி வியப்பிலாழ்த்துவதாக அமைகிறது. எந்த அரக்கனுடன் போரிடும்பொழுதும், தனித்து வைக்கப்பட்ட அவனது ஆன்மாவை கொன்ற பின்னரே அரக்கனை கொல்ல இயலும் என்பது சின்தனையைத் தூண்டும் ஒரு முக்கியமான விஷயமாகும். மற்றும் கூனி என்னும் மந்தரைக்கு ராமனிடம் ஏற்பட்ட பகைமைக்குக் காரணம், சீதையின் பிறப்பு, வளர்ப்பு. அனுமனுக்கு பிறந்த மகன்கள், அனுமனுக்கு பல நேரங்களில் உதவியளித்தல், மற்றும் பல அரிய கதையம்சங்கள் அழகாக அமைந்துள்ளன. இவைகளை நான் முதன்முறையாக படித்த நேரம் நானடைந்த இன்பம் சொற்களினால் விவரிக்க இயலாத ஒன்றாகும். அவ்வின்பத்தை தமிழ்சான்றோர்கள் மாத்திரமன்றி உலகின் கண் காணும் ஓரளவு தமிழ்மொழி அறிந்தவர்களும் படித்தறிந்து இன்பத்தை நுகர்ந்து பயன்பெற வேண்டுமென்று எண்ணியே மிகவும் எளிய தமிழ் நடையில் பாடலாக எழுத முற்பட்டேன். வாசகர்கள் பயன்பெறுவார்களாக.

மீண்டும் எனக்கிந்த அரிய வாய்ப்பளித்த சாகித்திய அகாதமிக்கு என் ஆழ்ந்த நன்றிகளைத் தெருவித்துக்கொள்கிறேன்.

ராஜலக்ஷ்மி சீனிவாசன்.

# மூன்றாம் பதிப்பு வெளியீட்டுரை

இந்நூலின் தாயீமொழியின் மொழியாக்கம் முன்னர் வெளிவந்த இரண்டு பதிப்புகளிலும் அச்சிட்டு வெளிவந்தது. பெங்களூர் நகரிலுள்ள என்.எம். கே. ஆர்.வீ பெண்கள் கல்லூரியின் சம்ஸ்கிருதப் பேராசிரியரான முனைவர் எஸ். ரங்கநாதன் அவர்களால் கன்னட மொழியில் மொழிபெயர்க்கப்பட்டுத் தற்சமயம் வெளிவருகிறது. முனைவர் எஸ். ரங்கநாதன் அவர்களுக்கு என் ஆசிகள்

தில்லி                    சத்ய விரத சாஸ்திரி

20.08.95

# பொருளடக்கம் - விவரணை

## முதல் அத்தியாயம்

*(முன்னுரை)*

தாயீ தேசத்தின் தலைநகரம் பாங்காக்கின் வருணனை - தாயீ மக்களிடை க்ருந்ததேவ என வழங்கிவரும் சொல்லிற்கான பொருள் விளக்கம் - அந்நகரத்தின் சரித்திர வரலாறு - ராமகீர்த்தி என்ற புகழ்பெற்ற ராமகதையின் கதைத் தொகுப்பு - அவ்விஷயத்தில் தாயீநாட்டவர்கள் தனதென்று கொண்டாடுவதில் சர்ச்சை.

## இரண்டாவது அத்தியாயம்

*(அநோமதனின் கதை)*

தாயீராமாயணத்தை ஒட்டி அனோமதன் என்னும் பெயருடைய முதல் மன்னனின் பிறப்பை வருணித்தல் - ஹிரந்தயக்ஷன் என்னும் அரக்கனால் ஏற்பட்ட தொல்லைகள் - அதைத் தடுத்திட தேவர்கள் ஈசனை அணுகுதல் - ஈசன் நாராயணனை நினைத்தல் - அவர்களது விருப்பத்தை நிறைவேற்றிட ஹிரந்தயக்ஷனை வதைத்தல் - பிறகு பாற்கடலில் பள்ளிகொண்ட நாராயணன் தாமரையில் தவழ்ந்திட்ட சிசுவைக் காணல் - அதை ஈசனுக்கு வெகுமதியாக அளித்தல் - ஈசன் அதற்கு அநோமதன் எனப்பெயரிடுதல் - பூமியில் அவன் முதற் கடவுள்

என ஆணையிடுதல் - அவ்வாணையை அநுசரித்து மகேந்திரன் அயோத்தி நகருக்கு வருதல் - தசரதனின் பிறப்பு; தொடர்ந்து ராமனின் பிறப்பு.

## மூன்றாவது அத்தியாயம்
### *(ராமன் பிறந்த கதை)*

பிள்ளைப்பேறு பெறாததால் தசரதன் மனதில் விசனம் - கலைகோடி முனிவரின் உதவியுடன் புத்திரகாமேஷ்டி யாகம் செய்ய விரும்புதல் - ஈசன் நாராயணனை மனதில் நினைத்தல் - நாராயணன் லக்ஷ்மி, சங்கு, சக்கரம், கதை, ஆதிசேஷ நாகம் முதலியவைகளுடன் பூமியில் அவதரிக்க நிச்சயித்தல் - ஈசன் யாகத்தை நடத்திட முனிவரை அனுப்புதல் - யாகத்தீயிலிருந்து நான்கு அன்ன பிண்டங்களுடன் புருஷன் ஒருவன் தோன்றுதல் - அந்நேரம் யாரோவொருவர் அன்னபிண்டத்தில் பாதி அபகரித்துச் செல்லுதல் - மீதமுள்ள பிண்டங்களை ஏற்றதால் தசரதன் மனைவிகள் கர்ப்பம் தரித்தல் - ராம லக்ஷ்மண பரத சத்ருக்னன் பிறவி.

## நான்காவது அத்தியாயம்
### *(நந்தகன் கதை, சீதை பிறந்த கதை, சீதையின் திருமணக் கதை, ராமாசுரரின் கதை)*

தேவர்களின் பிறப்பில் நந்தகன் என்றொருவன் ஈசனின் பணியாளன் - ஈசனைக் காண வந்தவர்கள் அவனது தலை முடியைப் பற்றி இழுத்தல் - அதற்குப் பரிகாரமாகக் 'கைவிரலைக் காட்டியதும் உடனே மரணம் அடைய வேண்டும்' என்ற வரத்தை ஈசனிடம் வேண்டுதல் - ஈசன் வரம் அளித்தல் - அதனால் ஏற்பட்ட தேவர்களின் மரணம் - அதிலிருந்து மீள தேவர்கள் ஈசனை வேண்டுதல் - ஈசன் நாராயணனை

நினைத்தல்; நந்தகனை வெல்ல உபாயம் வேண்டுதல் - நாராயணன் அப்ஸர உருவந்தாங்கி நந்தகனுடன் விளையாட்டாக நடனம் புரிதல் - நடன மத்தியில் யுக்தியுடன் தன்விரலால் தன்னுடலின் கீழ் பாகத்தை குறித்துக் காட்டல் - நந்தகனும் அவ்வாறே செய்தல் - அதனால் அவனது உடலின் கீழ்பாகம் துண்டித்தல் - அவன் நாராயணனை நிந்தித்தல் - மறுபிறவியில் இருகைகளும் ஒரு தலையும் கொண்ட உருவத்தில் நாராயணன் அவதரித்து பத்துத் தலைகளும் இருபது கைகளுமாக பிறந்த அவனை கொல்வேனென்று வாக்களித்தல் - நந்தகன் ராவணனாகவும் நாராயணன் ராமனாகவும் பூமியில் பிறத்தல் - மந்தோதரீ அன்னபிண்டங்களின் வாசனையை நுகர்ந்து உண்ண விரும்புதல் - காகனா என்னும் அசுரப்பெண் ராவணனால் அனுப்பப்பட்டவளாய்க் காக்கையின் உருவெடுத்து அன்ன பிண்டத்தில் பாதியை அபகரித்து வருதல் - அதை உண்ட மந்தோதரி கருவுறுதல் - காலக்கிரமத்தில் பெண் பிறத்தல் - ஜோதிடர்கள் அவளது ஜாதகத்தைக் கணிக்க அவளால் ராவண குலமும் இலங்கையும் நாசமடையும் என்று கூறல் - அதைக்கேட்டுப் பீதியடைந்த ராவணன், விபீஷணனிடம் அவனது விருப்பம் போல் நடவடிக்கை எடுக்கக் கூறல் - விபீஷணனால் ஏவப்பட்ட சேவகன் கன்னிகையைக் குடத்தில் வைத்து நதிப்பிரவாகத்தில் இடுதல் - கும்பம் தவமிருக்கும் சனகன் இருக்குமிடத்தை அடைதல் - சனகன் கும்பத்தில் அப்பொழுது பிறந்த சிசுவைக் கண்டு வியப்படைதல் - கும்பத்தை மூடி ஏதோ ஒரு மரத்தினடியில் பள்ளம் தோண்டி வைத்துப் பதினாறு ஆண்டுகளுக்குப் பிறகு தலைநகரம் திரும்ப விரும்பி கலப்பையினால் மரத்தினடியைத் தோண்டிக் கும்பத்தைக் கண்டெடுத்தல்; கும்பத்திலிருந்து கன்னிகை வெளித்தோன்றல் அவளுடன் தலைநகரம்

திரும்பிச் சென்று சுயம்வர ஏற்பாடுகள் - ராமர் வில்லை ஒடிக்கச், சீதையை அடைந்து அவளது திருமணம் - அயோத்திக்குத் திரும்பி வருகையில் ராமாசுரனுடன் சண்டையும் அவனது தோல்வியும் - தோல்வியடைந்த அவர் ராமனுக்குத் தன்னுடைய வில்லைக் கொடுத்தல் - ராமர் அவைகளை வருணனிடம் ஒப்படைத்தல் - அயோத்திக்குத் திரும்பிச் செல்லுதல்.

## ஐந்தாவது அத்தியாயம்

### *(ராமரின் வனவாசக்கதையும், ஜிஹ்வனின்கதையும்)*

அயோத்தியை அடைந்ததும் தசரதன் முடிசூட்ட விரும்புதல் - குழந்தைப் பருவத்தில் விளையாட்டாக ஏளனம் செய்ததினால் ராமனிடம் சினங்கொண்டு பகைமையை மனதில் வளர்த்துக் கொண்ட குப்ஜா என்னும் தாதியினால் தூண்டப்பட்ட கைகேயி தான் பெற்ற இரண்டு வரங்களினால் ராமனுக்கு வனவாசமும், பரதனுக்கு அரசையும் வேண்டுதல் - தசரதனின் இறப்பு - சீதை இலக்குவனுடன் ராமன் கானகம் செல்லுதல் - ஒரு சமயம் காட்டிற்குச் செல்ல விரும்பிய ராவணன், சூர்ப்பணகையின் கணவன் ஜிஹ்வனிடம் அரசைக் காக்கும்படி ஆணையிடல் - ஏழு இரவுகள் விழித்திருந்து பின்னர் நித்திரையின் வசப்பட்ட அவன் தந்நாவில் லங்கையைக் கட்டி மறைத்து வைத்து உறங்குதல் - இதற்குள் திரும்பி வந்த ராவணன் வழியறியாமல் நாக்கை வெட்டி உள்ளே செல்ல ஜிஹ்வன் இறந்தான்.

## ஆறாவது அத்தியாயம்

### *(சீதையை அபகரிக்கும்கதை, ஜடாயு இறந்தகதை)*

தன் மகனுடன் வசிக்கவிரும்பும் எண்ணத்துடன் சூர்ப்பணகை காட்டிற்குச் செல்ல, அங்கு யதேச்சையாக ராமனைச் சந்திக்க, அவனிடம் தன்னை மணக்கும்படி வேண்டிக்கொள்ளுதல். ராமன் மறுக்க இதற்குக் காரணம் சீதையே எனக்கருதி அவளைக் கொல்லமுயற்ச்சித்தல்- இலக்குவன் அவளது காதுகளையும் மூக்கையும் அறுத்தல் அவளும் கரன் தூஷணன் என்னும் அரக்கர்களை நாட ராமனுடன் பெரும் போர் நடந்து இருவரும் உயிரிழத்தல், சூர்ப்பணகை ராவணனை அடைந்து தன் அவமானத்தையும், சீதையின் அழகையும் எடுத்துக்கூறி ராவணனை சீதையை கவர்ந்துவரத் தூண்டுதல் - காமவெறிபிடித்த ராவணன் மாரீசனைப் பொன்மான்வடிவெடுத்து ராமனின் குடிலின் அருகில் குதித்துச் செல்லவைத்தல் - சீதையின் விருப்பத்தை நிறைவேற்றிட ராமன் அம்மானைப் பிடிக்கத் தொடர்ந்திட வெகுதூரம் அழைத்துச் சென்றதும் ராமனது அம்பினால் தைக்கப்பட்ட மாரீசன் ஹா! சீதே! என்று கூக்குரலிட்டு உயிர்நீத்தல் - சந்தேகம் கொண்ட சீதை அண்ணனைக் காக்க இலக்குவனை அனுப்புதல் - துறவி வேடம் தாங்கிய ராவணன் சீதையை அபகரித்தல் - ஜடாயு அதைத் தடுத்தல், சீதை கையிலணிந்துள்ள சிவபெருமான் மோதிரத்தாலேயே தன்னைக் கொல்ல முடியுமென்ற ஜடாயுவின் சொல்லை ஏற்று ராவணன் அதை உபயோகித்து ஜடாயுவை கொல்லுதல் - சீதையைத் தேடிவரும் ராமரும் இலக்குவனும் ஜடாயுவினிடமிருந்து ராவணன் சீதையை எடுத்துச் சென்ற செய்திகேட்டு அம்மோதிரத்தைப் பெற்றுக்கொள்ளல்; ஜடாயுவின் மரணம் - ராமர் தன்னம்பினால் சிதை மூட்டி

விநோதமான முறையில் அதற்கு இறுதிச் சடங்குகளைச் செய்தல்.

## ஏழாவது அத்தியம்

### *(அனுமனைச் சந்தித்த கதை)*

சீதையைத் தேடிச் செல்லுகையில் நடுவழியில் ராமர் சோர்வடைந்து ஓர் மரத்தடியில் ஓய்வெடுத்துப் படுத்தல் - ஏதோவொரு குரங்கு அம்மரத்தின் கிளையை நன்கசைத்தல் - அதைக்கொல்ல முயன்ற லக்ஷ்மணனது அம்புகள் சக்தியிழத்தல் - விழித்துக்கொண்ட ராமனும் லக்ஷ்மணனும் குரங்கைக் கூர்ந்து கவனித்தல் - குரங்கும் ராமனை ஸ்ரீமந்நாராயணனாக அறிதல், அவருக்குச் சேவைசெய்யத் தன்னை அர்ப்பணித்தல், சீதையை மீண்டும் அடைந்திட உதவி கோரிய ராமனுக்குச் சீதையை மீண்டும் அடைந்திட வாக்குக்கொடுத்துச் சுக்ரீவனருகில் அவனை அழைத்துச் செல்லுதல் - ராம சுக்ரீவ நட்பு அந்நட்பை ஒட்டி வாலிவதம்.

## எட்டாவது அத்தியாகம்

### *(தோரபின் கதை, வாலிவதக்கதை, இலங்கையை எரித்த கதை)*

கைலாசத்தில் அரக்கர் குலத்துதித்தவனும் துவாரபாலகர்களுக்குள் ஒருவனுமான நந்தகன் காமவெறியுந்த சிவபெருமானின் மனைவியின் உள்ளங்கவர அவள்மேல் மலரெடுத்தெறிதல் - மனைவி இதை சிவபெருமானுக்கறிவிக்க அவனை தரபீதி என்னும் பெயருடைய எருமையுருக்கொள்ளும்படிச் சாபம் - தன் மகன் முத்தைப் பார்த்தால் சாபவிமோசனம் என்றறிந்து பிறந்த உடனேயே தன் குழந்தைகளைக் கொல்லுதல்

அக்கொடிய செயலைக் காணத்தாங்காமல் ஒரு எருமை, குகைக்குள் சிசுவை ஈன்று அங்கேயே வளர்த்தல், தன்தந்தையின் கொடிய செயல்களைக் கண்டும் கேட்டும் உள்ளேயே வளர்ந்து வாலிப வயதடைந்ததும் தந்தையை கொல்லுதல் - அதனால் கர்வமடைந்து ஈச்வரனைப் போருக்கழைத்தல் அவர் அனுப்பிய வாலியுடன் கடும் போர் - அவனுடன் மலைக்குகையில் கடும் போர் - குகைக்குள் செல்லும் முன்னர் தன் தம்பி சுக்ரீவனை வாயிலில் காக்க நிற்கவைத்தல் (சிவப்புவண்ணக் குருதி வெளிவருமாகில் எருமை இறந்தது மாறிடின் வாலியிறந்தான்) - இறந்த செய்தியை அறியும் குறிப்புகள் அறிவித்து சுக்ரீவனை வாயிலில் இருக்க வைத்தல் - வாலி எருமையைக் கொன்றான் - ஆண்டுக்காலம் கடந்ததால் குருதியின் நிறம் மாறிட, வாலி இறந்துவிட்டான் என்ற பிரமையடைந்து, சுக்ரீவன் பெரிய பாறையினால் குகைவாயிலை மூடிட, வாலி சிரமப்பட்டுப் பாறையை நீக்கிக் குகையை விட்டு வெளிவர, மதிமயக்கத்தினால் சுக்ரீவன் தன்னை வெறுக்கிறான். தன் ராச்சியத்தை அடைய விரும்புகிறான் என்று நினைத்து ராச்சியத்தை விட்டு வெளியேற்றிடல் - அவனைக் கொல்ல சுக்ரீவன் ராமனைப் பிரார்த்தித்தல் - மரத்தின் பின்னால் மறைந்து நின்று சுக்ரீவனுடன் சண்டையிடும் அவனைக் கொல்வது - ராமன் சுக்ரீவனை ராச்சியத்தில் அரசனாக முடிசூட்டல் - சீதையை அடைய உதவி செய்ய வாக்குக்கொடுத்தல் - அவனுடைய சேனைகள் கடற்கரையைச் சென்றடைதல் - ஹநூமான் லங்கையை அடைதல், சீதையைப் பார்த்தல், அடையாள மோதிரம் அளித்தல், இலங்கையை எரித்தல்.

## ஒன்பதாம் அத்தியாயம்

### (ராவணன் கண்ட கனவின் கதை. ராமரின் கூடாரத்திற்கு மறைமுகச் சாரணனை அனுப்புதல்)

ராவணன் இலங்கையை முன்னைவிட அதிக அழகுடன் விளங்கச் செய்தல் - ஒருநாள் இரவில் கனவில் ஒரு வெள்ளை நிறக் கழுகையும் ஒரு கருப்புநிறக் கழுகையும் காணல், வெள்ளை நிறக்கழுகு, கருப்பு வண்ணக் கழுகைக் கொன்றிடல், கொட்டாங்கச்சியில் எண்ணைவிட்டுத் திரியையிட, பெண்ணொருத்தி வந்து அதை தீப்பற்ற வைக்க, அத்தீ தன் கைக்குள் புகுதல் - கனவின் பலனைக் கேட்க விபீஷணன் கெட்ட பலனையே குறிக்கிறது என்று கூறிச் சீதையைத் திருப்பி அனுப்ப வேண்டல், ராவணன் மறுத்து விபீஷணனை நிந்தித்து நாட்டை விட்டுக் கடத்திட அவனும் ராமனை வந்தடைதல் - ராம விபீஷண நட்பு - அரக்கர்களுடன் போரிட வானர சேனையினால் முடியுமா என்று ஐயங்கொள்ள அதை நீக்கிடச் சுக்ரீவனால் அனுப்பப்பட்ட வானரங்கள் தங்கள் வலிமையைக் காட்டிட விபீஷணனும் குரங்குகளின் வலிமையறிதல் - தங்களது சக்தியை எடுத்துக்காட்டச் செய்த மலைகுன்றுகளைப் பெயர்த்தெழுப்பிய சத்தம் கேட்டு நடுங்கிய ராவணன், ராமனது சேனையின் வலிமையறிய சுக்ரசாரர் என்னும் மாறுவேடங்கொண்ட வீரர்களைக் கழுகு உருவெடுத்து ராம சேனையை அணுகி, குரங்கு உருவத்தில் நுழைய, அதையறிந்த விபீஷணன் அனுமனுக்கு அதைத் தெரிவிக்க அனுமன் யுக்தியால் நன்கு சாட்டையடிகொடுத்து அத்தழும்புகள் உடல் முழுவதும் அடையாளங்காட்டிட இருவரையும் விட்டுவிடல் - பிறகு ராவணன் தானே துறவி உருவந்தாங்கி ராமனிருப்பிடம் வந்து அவனைப் போரிலிருந்து பின்வாங்க வேண்டுதல் - ராமன் அதை

ஒத்துக் கொள்ளாததால் முயற்சி பலனடையாமல் ராவணன் திரும்பிச் செல்லுதல்

## பத்தாவது அத்தியாயம்

*(பேஞ்சகயீயின் கதை)*

ராவணனால் அனுப்பப்பட்ட பேஞ்சகயீ என்னும் அரக்கப் பெண்ணொருத்தி இறந்த சீதையின் சடலத்தை நதிக்கரையில் கொண்டுவரல் - நீராட வந்த ராமன் அதைக்கண்டு மனம்மிக வருந்துதல் - தாமதமாகிவிட்டதே என்று கவலைகொண்டு வந்த லக்ஷ்மணனுக்கும் அதே நிலைமை - சுக்ரீவனும் அனுமனும் அவர்களைத் தேடி அவ்விடம் வருதல் - சீதை இறந்தாளென்று அனுமான் நம்பவில்லை - அதனால் தீமூட்டி அதில் சவத்தையிடல் - கதறிக்கொண்டு பேஞ்சகயீ வெளிவந்தோடால் - அனுமன் ஆகாயத்தில் கிளம்பி அவளைப் பிடித்திழுத்துக் கீழே கொண்டு வருதல் - அதைக்கண்ட விபீஷணன் மரணதண்டனை கொடுக்கும்படி கூறிட, ராமனோ நண்பனின் மகள் என்பதால் அதை மறுத்து அனுமனிடம் அவளை லங்கைக்கு அனுப்பி வைக்கும்படிக் கூறல் - வழியில் இருவரிடையில் காதல் மலருதல் - பேஞ்சகயீ அசுரபத் என்னும் மகவைப் பெற்றெடுத்து அவனை லங்கையில் வளர்த்தல் - அனுமன் ராமனிடம் திரும்பி வருதல் - எல்லா முயற்சிகளும் வீணாகிட ராவணன் ராமனுடன் போருக்கான ஏற்பாடுகளைச் செய்தல்

## பதினொன்றாம் அத்தியாயம்

*(நீலன் அனுமன் கலகக்கதை)*

சேனையைக் கடலின் மத்தியில் இருத்தல் - சேது கட்டுவதால் இலங்கையை அடையமுடியுமென

நினைத்து அதைக் கட்ட ராமர் நீலனையும் அனுமனையும் கட்டளையிடல் - நீலன் பாறைகளைக் கடலில் எறிந்திட, அனுமன் அவைகளை வகைபடுத்த வேண்டுமென்பது அவர்களுக்குள் உடன்பாடு - அனுமன் முன்பொரு சமயம் நீலனின் தந்தையிடம் நன்கு நடந்து கொள்ளாததால் சினங்கொண்ட நீலன் பாறைகளை மிக வேகமாகக் கொண்டு வந்து எறிந்தான் அதனால் அனுமனால் எவ்வளவு முயற்சிசெய்தும் அவைகளை உடனுக்குடன் சீர்ப்படுத்த முடியாத நிலைமை - நேரங்கழித்து ராமர் ஆணையினால் அவ்விருவர்களின் பணிமாற்றம் - பழிவாங்கவிரும்பிய அனுமன் தன் ஒவ்வொரு உரோமக்காலிலும் கல்லைக் கட்டிக் கொண்டு வந்து அவர்களைக் காட்டிலும் அதிவிரைவாகப் பாறைகளைக் கொண்டு வீழ்த்தல் நீலனால் சீர் செய்ய முடியாத நிலைமை - அதைக் கண்டு ராமர் மனக்கலக்கமடைதல், அதனால் நீலன் கிஷ்கிந்தைக்குச் சென்று சுக்ரீவனுக்கு பிரதிநிதியாக அரசாளட்டும், சேனைக்காக அனுமன் தானே சேதுவை ஏழுநாட்களில் கட்டி முடிக்க வேண்டும் என்ற தண்டனை யளித்தல் - நீலன் கிஷ்கிந்தைக்குச் செல்லுதல், அனுமன் முழுமூச்சுடன் சேதுவைக் கட்டி முடித்தல்

## பனிரெண்டாம் அத்தியாயம்
### *(சுவர்ணமத்ஸ்யையின் கதை)*

வானரசேனையின் உதவியினால் அனுமன் நாள் முழுவதும் பாறைகளைக் கடலில் எறிதல் - மறுநாள் அவைகள் காணாமல் போதல் - அதற்கு மறுநாளும் அவ்வாறே - இரவில் நடப்பது என்ன என்றறியும் அவாவினால் உறங்காமல் கடலில் இறங்கிப் பார்க்கையில் ஆயிரக்கணக்கான ஆண் பெண் மீன்கள் பாறைகளை அகற்றுதலைக் கண்டு வியத்தல் -

அவர்களிடம் காரணத்தை வினவ, அவர்களது தலைவனின் ஆணை அது என்றறிதல் - அனுமன் ராணி சுவர்ணமத்ஸ்யையை அணுகுதல் - அவளைக் காரணம் வினவ தந்தை ராவணனின் ஆணைக்கடிபணிந்து தன்னைக் காப்பாற்றிடவே செய்யப்படுகிறது என்றுரைத்தல் - சீதையை அபகரித்துச் சென்ற மிக இழிவான செயலைச் செய்த தந்தைக்கு உதவிசெய்தல் உசிதமல்ல என்று அனுமன் எடுத்துக்கூறுதல் - சுவர்ணமத்ஸ்யையும் ஒப்புக்கொள்ளல் - அவள் தன் பணியை விட்டுவிடுதல் இதர மீன்சேனைகளையும் பணியிலிருந்து ஒய்வெடுக்கச் செய்தல் -அனுமனும் சுவர்ணமத்ஸ்யையும் ஒருவரையொருவர் கண்டதும் காதல் வயப்படுதல் - அவர்களின் காம லீலைகள் - சுவர்ணமத்ஸ்யை மச்சானு என்னும் மகனைப் பெறுதல் ஆனால் தந்தை ராவணனைக் காணப் பயந்து கடற்கரையிலேயே சிசுவை விட்டுவிட்டு இலங்கைக்குச் செல்லுதல் -அனுமனும் தன்னிருப்பிடம் திரும்புதல்

## பதிமூன்றாம் அத்தியாயம்

### *(மைராவணனின் கதை)*

அனுமன் சேதுவை வானர சேனைகளின் உதவியினால் கட்டி முடித்தல் - சேது வழி இலங்கை சென்று முற்றுகையிடல் -போரிடாமலே வெற்றிகாண விரும்பிய ராவணன் ராமரைக் கொல்ல வழி செய்தல் - தனது நண்பன் மைராவணனை அப்பணியில் ஏவுதல் - மைராவணன் ராமசைன்யத்தில் நுழைந்து சூர்ணப்பொடி தூவி எல்லோரையும் உறக்கத்திலாழ்த்தி ராமனை அங்கிருந்து தூக்கிச் சென்று தன்னிருப்பிடத்தில் வைத்தல் - சூர்ணத்தின் வலிமை குறைந்ததும் எல்லோரும் விழித்தெழுந்திடக் கவலைக்

கொண்டவர்களாய் ராமருக்கு உதவி செய்ய விரும்புபவர்களுக்கு 'ராமன் மைராவணனால் கட்டியிழுத்துப் பாதாளத்தில் வைக்கப்பட்டுள்ளான்' என்ற சேதியை விபீஷணன் கூறி உடனேயே அங்கு செல்லவேண்டுமென்று கூறியதைக் கேட்டு அனுமன் உடனே பாதாளதேசம் விரைந்திட நடு வழியில் வட்டமான வடிவம் கொண்டதும் தாமரைகள் நிறைந்ததுமான பெரிய தடாகம் காணல். அதிலிருந்து ஒரு தாமரைத் தண்டை எடுத்து அதற்குள் புகுந்து கொள்ளுதல், கிரமமாக மற்றைய தடாகத்தையடைய அங்கு சுவர்ணமத்ஸ்யையுடன் முன்பு பிறந்த மச்சானுவினால் அது காக்கப்படுவதை யறிதல் - மச்சானுவை முன் கண்டிராததால் இருவரும் ஒருவருடன் ஒருவர் சண்டையிடல் - இருவருமே சளைக்காததால் சற்று நின்று ஒருவரையொருவர் பார்த்தல் - அனுமன் அவன் யாரென வினவ தான் அனுமனின் மகன் என்று கூறிட அனுமன் எல்லையில்லா மகிழ்ச்சியடைதல் - தந்தை மகன் சந்திப்பு - பாதாளநகரை அடைவது எப்படி என்று அனுமன் கேட்க மைராவணனால் கனவிற் கண்டு கடற்கரையில் இடப்பட்ட அவனை எடுத்துச் சென்று தன் மகனைப் போல வளர்க்கப்பட்டதை நினைந்து தர்மசங்கடத்தை அடைந்தவனாய் மிக்க யுக்தியுடன் 'நீர் எந்த வழி வந்தீர்களோ அவ்வழி செல்ல முடியுமா' என்றுரைத்ததைக் கேட்டறிந்துகொண்ட அனுமன் தாமரை ஒன்றை எடுத்து அதன் தண்டில் புகுதல்.

## பதிநான்காம் அத்தியாயம்

### *(மைராவணன் கதைத் தொடர்ச்சி)*

தனது வழியை மறந்து விலகிச்செல்ல மலைபோன்றதும் யானைபோன்றதுமான அமைப்பில்

கொசுக்களின் கூட்டம் தடுத்திட அதை எதிர்த்துச் சென்று பாதாளத்தை அடைதல் - அங்கு அழுதுகொண்டிருக்கும் மாதைக் காணல் - அவளை யார் என வினவ அவளோ தான் பாதாள உலக மன்னன் வீரக்வனனின் தங்கை, வையவிக் எனப்பெயர்கொண்ட என் மகனைக் குறித்து புலம்புகிறேன் என்றுரைத்தல் - அப்பாபி காய்ந்த எண்ணையில் தன் மகனையும், ராமனையும் இட்டுக் கொல்ல முயற்சிப்பதை எடுத்துக் கூறல் - அவ்விடத்திற்கு தன்னை அழைத்துச் செல் என அனுமன் பிடிவாதமாகக் கூறல் - அரக்கவீரர்களால் காக்கப்பட்ட தோரணத்தின் வழி சென்று அங்கு வைத்திருக்கும் தராசில் ஏறி தன் சுமையை கணக்கெடுத்த பின்னரே அங்கு நுழையமுடியுமென்று கூறிட அனுமன் தாமரைத் தண்டின் உருவில் மாறி அவ்விடத்தில் உட்புகுதல் - ஸ்ரீராமனை அங்கு கண்ட பின்னர் மைராவணனைப் போருக்கழைத்தல் - அவனுடைய ஆத்மாவை முதலில் கொன்றாலொழிய அவனைக் கொல்ல முடியாது என்ற ரகசியத்தை வீரக்வனை மூலமறிந்து திரிகூட மலையில் வண்டு உருவிலிருந்த அவன் ஆத்மாவைக் கசக்குதல் - கசக்கிட மைராவணன் மூர்ச்சித்துப் பூமியில் விழுதல் - அனுமன் ராமனைப் பாதாள தேசத்திலிருந்து அழைத்து வந்து சிபிரத்தில் சேர்த்தல்.

## பதினைந்தாவது அத்தியாயம்

### *(கும்பகர்ணனைக் கொன்ற கதை)*

மைராவணன் இறந்ததும் ராமனைக் கொன்றிட ராவணன் கும்பகர்ணனை அணுகுதல் - தருமத்திற்குப் பயந்த கும்பகர்ணன் சீதையை அபகரித்து வந்தது தவறென எடுத்துரைக்க ராணவன் கூரிய அம்பொத்த சொற்களால் மிரட்டுதல் - அதனால் கும்பகர்ணன்

பெரும் படையுடன் போருக்குப் புறப்படல் - விபீஷணன் கும்பகர்ணன் மூலம் ராவணன் மனம் மாற்ற முயற்சி - அதனால் சினமடைந்த கும்பகர்ணன் விபீஷணனைத் தாக்குதல் - விபீஷணன், ராமன் நாராயணன் என்றறிந்தே அவனை அணுகியதாகக் கூறுதல் - ராமன் கடவுளானால் தன் நான்கு கேள்விகளுக்கு பதிலுரைக்கும்படி கூறல் முட்டாள் துறவியார், நேரான பல்லுடைய யானை எது, கபடஞ்செய்யும் பெண் யார், போக்கிரி மனிதன் யார் - அங்கதன் கும்பகர்ணனை அணுகி என் தலைவன் பதில்களை அறிவான் அவை சரிதானா என்றறிய உன் பதில்களை முதலில் கொடு எனக்கூறிடக் கும்பகர்ணனும் முட்டாள் துறவி ராமன், நேரான பல்லுடையானை ராவணன், கபடஞ் செய்யும் பெண் சூர்பணகை, போக்கிரி விபீஷணன் என்ற பதிலுரைத்தல் - ராமன் சேனைகளை எதிர்த்துச் செல்ல சுக்ரீவன் எதிர்த்தல் - இமாலயத்திலிருந்து ரங்கமென்னும் மரம் எடுத்துவந்து சண்டையிடு என அப்பணியிலேயே சக்தியிழந்த சுக்ரீவனைப் பிடித்து கும்பகர்ணன் அக்குளில் அடைத்துச் செல்லுதல் (இது கும்பகர்ணனின் சூழ்ச்சி) - அதைக் கண்ணுற்ற அனுமன் கும்கர்ணனை பிடித்துத்தள்ளி சுக்ரீவனை மீட்டு கும்பகர்ணனது மூக்கு காதுகளை கடித்து இம்சித்தல் - வெட்கங்கொண்டவன் அப்படியே இலங்கையை அடைதல் - தன் அவமானத்திற்குப் பழி வாங்க மோக்ஷசக்தியென்னும் அஸ்திரத்தைப் பயன்படுத்த விரும்பி அதற்கான பூசை விதிகளை மேற்கொள்ளல் - இறந்த நாய் உருவெடுத்து அனுமன் கிடக்க காக்கை உருவமெடுத்து அங்கதன் அதை அலகால் குத்தி அவனது பூசைக்கு தடை செய்தல் - பூசையை முழுவதுமாக முடிக்காமலே கும்பகர்ணன் போருக்குச் செல்லுதல் லக்ஷ்மணனின் மேல் மோக்ஷசக்தியைப் பயன்படுத்தி அவனை

மூர்ச்சையடையச் செய்தல் - விபீஷணன் சொற்களுக்கிணங்கி சர்வ மலையிலிருந்து மூலிகைகள் கொண்டு வந்து சூரியன் உதிப்பதற்குள் பயன்படுத்திட அதன் மூலம் லக்ஷ்மணன் மீண்டும் உயிர் பெற, ராம சேனைகள் அகமகிழ்தல் - அதனால் வெகுண்ட கும்பகர்ணன் ராம சேனைகளை அழித்தல் - ராமர் பிரம்மாஸ்திரத்தால் கும்பகர்ணனைக் கொல்லுதல்

## பதினாறாவது அத்தியாயம்

*(மலிவக்பிரம்மனின் கதை)*

கும்பகர்ணன் இறந்ததும் ராவணன் தன் மகன் இந்திரஜித்தை சேனைத் தலைவனாக நியமித்தல் - இந்திரஜித் நாகபாசத்தினால் ராம சைனியத்தை கட்டுதல் - ராமன் ப்லைவன் என்ற அம்பை எறிந்து கருடனை வரவழைத்தல் கருடன் வந்ததால் பாம்புகள் விட்டகலுதல் - இந்திரஜித்தைக் கொல்லுதல் - ராமன் ராவணனுடைய சேனையை அழித்தல் - ராவணன் ராமனிடமிருந்து தன்னை விடுவித்துக் கொள்ளும் உபாயத்தில் நான்யவிக், வாயுவேக என்ற இரு தூதர்களை நேர்மையை விரும்புவனும் மிகவும் புகழ் பெற்றவனாக மலிவக் பிரம்மா என்னும் அந்தணரிடம் ராமன் என் நாட்டை ஆக்கிரமித்துவிட்டான் ராவணனிடம் மோசமாக நடந்து கொள்கிறான் என்று கூறி நேர்மையை விரும்புபவன் ராமனை சபிப்பான் என்றும் நினைத்தல் - மலிவராசா என்றழைக்கப்படும் மலிவக் பிரும்மன் பட்சபாதமின்றி விவரங்களை யறியத் தேவர்களை அழைத்து ராமராவண சேனையின் மத்தியில் கூட்டமொன்று கூட்டுதல் - ராமனுடையவும் சீதையினுடையவும் வார்த்தைகளைத் தேவர்கள் முன்னிலையில் கேட்காதவரையில் தான் சரியான முடிவெடுக்க முடியாது என்று பிதாமகர் கூறுதல் -

அவருடைய வாக்குப்படி ராமனையும் சீதையையும் அங்கு அழைத்துவர இருவர் பேச்சுக்களையும் கேட்டுத் தேவர்களின் கூற்றையும் கேட்டு பின்னர் ராவணனே குற்றம் செய்தவன் - தண்டிக்கப்பட வேண்டியவன் ராமபாணத்திற்கு ராவணன் இரையாக வேண்டுமென்று ராவணன் மேல் மலிவக்பிரும்மனின் சாபம் - தன் எண்ணம் நிறைவேறாததால் ராவணன் மனமுடைதல்.

## பதினேழாம் அத்தியாயம்

## *(ராவணன் ஆன்மாவின் கதை)*

ராம ராவணப் போர் - ராமன் சக்திகொண்ட அம்புகளை வீசியும் ராவணனுக்கு உடலில் ஒருவிதமான காயங்களும் ஏற்படாததைக் கண்டு கோபுத்திரனென்னும் பெயர்கொண்ட முனிவரின் குடிலில் கூண்டிலடைக்கப்பட்ட ராவணனது ஆன்மா கொல்லப்படாதவரை ராவணனைக் கொல்லமுடியாது என்கிற விபீஷணனின் வார்த்தைக் கிணங்கி கபடமாக வஞ்சித்து, அனுமனின் உபாயத்தை மேற் கொள்தாகவும் அதனால் அவனது நம்பிக்கை எந்தவிதத்திலும் பாதிக்கப்படாதென்றும் ராமரிடம் கூறுதல் - பின்னர் அங்கதனுடன் கோபுத்திரன் குடிலடைதல் ராமன் தன்னிடம் நன்கு நடந்து கொள்வதில்லை அதனால் ராவணனையே புகலடைய நிச்சயித்துள்ளதாகவும் அது அவருக்குச் சம்மதமானால் ராவணனிடம் அழைத்துச் செல்ல வேண்டும் - தானே நேராக அங்கு சென்றால் பகைவனிடமிருந்து வந்தவன் என்று சினங்கொண்டு தன்னையும் அங்கதனையும் கொன்றுவிடுவான் என்று கூறல் - அதனால் கோபுத்திரன் அவர்களுடன் கூட இலங்கை நகரத்திற்கு புறப்படல் - புறப்படும் முன்னர் ராவணனது ஆன்மாவின் கூண்டை தன்னுடன் எடுத்துவரும்படியும்

இல்லாவிடில் ராமனே வந்து அவனைக் கொன்றிட வாய்ப்புள்ளது - ஆனால் லங்கையின் எல்லையை அடைந்திட ஆங்கு உட்புகந்தாலோ ராவணன் ஆன்மா அவனிடம் சென்றுவிடும் அதனால் அவனைக் கொல்வது சாத்தியமாகிவிடும் - இது முனிவரை துக்கத்திற்காளாக்குதல் - அனுமானோ அக்கூண்டை அங்கதன் காவலில் அங்கேயே வைத்துவிட்டுத் தானும் முனிவரும் ராவணனை அணுகலாமெனக் கூறல் - கோபுத்திரன் அனுமன் சொற்களையேற்றல் - இருவரும் பயணத்தை மேற்கொள்ளல் - வழியினில் தான் அங்கதனிடம் முக்கியமானதொரு செய்தியை எடுத்துரைக்க மறந்துவிட்டதாகக் கூறி அனுமன் திரும்பிவருதல் - வந்து அங்கதனை அணுகி கூட்டிலிருந்த ராவணனின் ஆன்மாவை எடுத்து விட்டு வேறு ஒரு செயற்கை ஆன்மாவை அதனுள் வைத்தல் பிறகு அங்கதனிடம் ராவணனது ஆன்மாவைக் கடற்கரைக்கு எடுத்துச் சென்று அங்கு அதை மண்ணில் புதைக்கும்படி கூறல் - அங்கதனும் அப்படியே செய்தல் - ராவணனைக் கொல்வது சாத்தியமாயிற்று - ராமனது அம்பிற்கிரையானான் ராவணன்.

## பதினெட்டாம் அத்தியாயம்

### *(மஹீபாலதேவாசுரனின் கதை)*

ராவணனை வெகுகாலமாகக் காணவில்லையே என்றெண்ணிச் சக்ரவாலமென்னும் நாட்டை ஆண்டுவந்த அவனது நண்பன் அவனைக் காண இலங்கைக்கு வரவும் நடந்ததையெல்லாமறிந்து உறவினனுக்குத் துரோகம் செய்த விபீஷணனே அவன் இறப்பிற்குக் காரணமென நினைத்து இலங்கையை முற்றுகையிட விபீஷணன் கலக்கமடைதல் - முன்னரே வெற்றியடைந்த ராமன் தன்நாட்டிற்குத் திரும்பும்

நேரம் விபிஷணனின் பலமற்ற தன்மையைக் கண்டு அவனைக் காத்திட வாரந்தோறும் தான் ஒரு சலாகையை* அனுப்புவதாகவும் சிக்கலேதேனும் இருந்தால் அவன் நிலைமைபற்றிக் கடித உருவில் அதில் எழுதும்படி கூறியிருந்ததால் விபீஷணனும் கடிதம் மூலம் சிக்கலைத் தெரிவிக்க ராமரும் அவனுக்கு உதவிசெய்ய அனுமனை அனுப்புதல் - அனுமன் மஹீபாலதேவனுடன் போரிட்டு அவனைக் கொன்றுவிடுதல்.

## பதினொன்பதாம் அத்தியாயம்

### *(இலங்கையில் குழப்பக் கதை)*

ராவணன் இறந்த பிறகு மந்தோதரிக்குக் குழந்தை பிறத்தல் - வரணீசுவரன் என்னும் ராவணனின் சேவகன் அக்குழந்தை வைணாசுரனுக்குச் சேவை செய்தல் - ஒரு சமயம் அவனுடைய தந்தைக்குத் தம்பி விபீஷணன் செய்த செயல்களை எல்லாம் எடுத்துக் கூற அவனும் வாலிபப் பருவமடைந்ததும் தந்தந்தையைக் கொன்றவனைப் பழிவாங்க எண்ணி விபீஷணனைக் கொன்றிட நினைத்தல் - அதனால் மலீவந்நாட்டு மன்னன் சக்ரவர்த்தியை அணுகி உதவி கேட்டல் அவனும் ஒத்துக் கொண்டு அவனுடன் கிளம்பி வருதல் - இதை எவ்வாறோ கேட்டிறிந்து இதற்கொரு பரிகாரம் செய்ய எண்ணி அனுமனுக்கும் பேஞ்சகயீக்கும் பிறந்த அசுரபத் தன் தந்தை இமயமலையில் தவம் செய்து கொண்டிருப்பதாகக் கேள்விப்பட்டு அவரைத் தேடிக்கொண்டு மலையிலிருந்து மலைக்குத் தாவி குதித்துச் சென்று கொண்டிருத்தல் -அதற்கு முன் ஒரு காட்டில் அனுமன் மாங்கனிகள் நிறைந்திருப்பதைக்

* சலாகை- அம்பு; ஈட்டி

கண்டு அவைகளை பறித்து உண்ணல். குரங்கின் சேட்டைக்கொப்ப மாம்பழச் சாறு முழுவதும் வாயினின்றும் வழிந்து உடல் பூராவும் பரவிட அதைத் துடைத்துக் கொள்வதைக் கண்ட பெண்கள் அவனைக் கண்டு கேலிசெய்தல் - அதனால் வெட்கமடைந்தவன் அக்குற்றத்தை நீக்கிக்கொள்ளத் தவம் செய்ய நிச்சயிக்க, திஷ்பைல் என்னும் முனிவர் அங்குவர அவரும் வானர உருவில் தவம் செய்வதும் எப்படியென்றெண்ணி அவனுக்கு மனித உருவம் தந்திட அவனும் தவம் மேற்கொள்ளல் - அங்கு அசுரபத்தின் வருகை ஏ துஷ்டா! நீ அனுமனைக் கண்டாயா என வினவுதல் - நானே அனுமன் என்றவன் கூறல் - அசுரபத்தின் ஐயம் குரங்கான தந்தை மனித உருவில் எப்படி தவம் செய்வது என்பதை அனுமன் தன் வலிமையைக் காட்டி நிரூபித்தல் - தந்தை மகன் மீண்டும் சந்தித்தல் - அசுரபத் அனுமனிடம் இலங்கையில் நடக்கும் நிகழ்ச்சிகளை எடுத்துக்கூறிட அதைக்கேட்ட அனுமன் 'கித்கின்' எனப்படும் கிஷ்கிந்தைக்குச் சென்று சேனைகளைத் திரட்டி அயோத்திக்குச் சென்று பரதன் சத்ருக்னனுடன் இலங்கை நகருக்குச் செல்லுதல் - வானரன் தன்னுடலை நீட்டிட அதுவே பாலமாகப் பயன்படுதல் - இருவருக்குமிடை பயங்கர யுத்தம் - வைணாசுரவம்ச வதம் - விபீஷணனை மீட்டல் - அங்கிருந்து சைனியங்கள் மலிவந்நகரம் செல்லுதல் - பிரம்மாஸ்திரத்தைப் பயன்படுத்திப் பரதன் மலீவனைக் கொல்லுதல் - பரதன் அனுமனுக்கும் சுவர்ண மத்ஸ்யைக்கும் பிறந்த மகனான மச்சானுவை அங்கு முடிசூட்டுதல் - சக்ரவர்த்தியின் பெண்ணான இரத்திரனமால்யையைப் பட்டத்து மகாராணியாகச் செய்தல்.

# இருபதாம் அத்தியாயம்

## *(சீதையைக் காட்டிற்கனுப்பிய கதை)*

ராமனும் சீதையும் அயோத்தியில் மகிழ்ச்சியுடன் வசித்தல் - ஒரு சமயம் ராமர் காட்டிற்குச் செல்லுதல். ஊடலின் வெப்பத்தைக் குறைக்க வேண்டி சீதை நதியினில் நீராடச் செல்லுதல் - தகுந்த அந்நேரம் சூர்ப்பணகையின் மகள் அதுல்யா தன் தாய்க்கு முன்னர் அவர்கள் செய்த கெட்டவினைக்குப் பழிவாங்க எண்ணியே சீதைக்கு போலிப் பணிப்பெண்ணாக அமைந்து பணிவிடை செய்யும் நேரம் அவளை ராவணனின் அழகைத் தான் காண விரும்புவதாகக் கூறி அவனது உருவத்தை ஒரு கல்லில் வரைந்திடக் கூறிட, சீதை மறுக்க தன் பணிவிடையினால் மனம் மகிழ்ந்த அவள் தன் வேண்டுகொளை ஏற்கவேண்டுமென வேண்டிட ராவணின் சித்திரத்தை வரைதல் - அந்நேரம் பார்த்து ராமன் திரும்பி வருதல் - ராமனின் பார்வையிலிருந்து மறைக்க அதை அழிக்க விரும்புதல், ஆனால் அதுல்யா அப்படத்திற்குள் நுழைந்ததால் அழிக்க முடியாமல் போதல், அதனால் சித்திரம் மேலும் வண்ணத்துடன் தெரிய சீதை அதைப் படுக்கைக்கடியில் வைத்து மறைத்தல் - படுக்கையில் அமர்ந்த ராமன் சூட்டை உணருதல் - அதன் காரணத்தை அறிய லக்ஷ்மணனை ஏவிட, அவனும் படுக்கையை உதறிட, அப்படம் கிழே விழுந்தது - யாரிதை வரைந்தது என்று ராமனும் வினவிட பணிப்பெண்ணின் வேண்டுகோளுக்குச் செவி சாய்த்தே தானிதை வரைந்ததாக சீதை பதிலளித்தல் - ஒருவேளை இவள் மனது ராவணனிடம் ஈடுபட்டுள்ளதோ என்ற ஐயத்தை ராமன் அடைதல், கோபமடைதல், - அவளைக் கொல்லவேண்டுமென்று இலக்குவனை ஆணையிடுதல், அவளைக் கொன்றதற்குச் சான்றாக அவளது

இதயத்தைத் திருப்பிக் கொண்டுவரவும் ஆணையிடல், அதை ஏற்று சீதையுடன் இலக்குவன் காடு செல்லுதல் - அங்கொரு மரத்தினடியில் ராமன் வசனத்தை சீதை காப்பாற்றட்டுமென்று நினைத்தல் - இலக்குவன் கொடிய பணியைச் செய்ய மறுக்க சீதை தகாத வார்த்தைகளால் அவனை ஏசுதல், இலக்குவனும், சீதை தூண்ட வாளால் அவளது கழுத்தை வெட்ட முயற்சித்தல், அவனது இலக்கு தவறுதல் - ஏதோ கருணையினால் என்று நினைத்துக் கண்களை இறுக மூடி வெகு விசையுடன் வாளை வீசுதல், சீதைக்கு ஒரு பாதிப்பும் ஏற்படாமல் இலக்குவன் மீண்டும் உணர்வற்றுத் தரையில் விழுதல் - அதைக் கண்டு சீதை புலம்புதல் - மீண்டும் உணர்வு பெற்ற இலக்குவன் நடப்பதெல்லாம் சீதையின் நற்பண்பினால் என்றறிந்து அங்கிருந்து திரும்பிச் செல்லல், வழியில் இறந்ததொரு மானின் இதயத்தை எடுத்துச் சென்று சீதையினுடையதென்று ராமனிடம் கொடுத்தல் - இது மிருகத்தினுடைய இதயம் போன்றுள்ளது அதனால் கொல்லத் தகுந்ததே என்று ராமன் கூறுதல்.

## இருபத்தொன்றாம் அத்தியாயம்

### *(லவன் பிறந்த கதை)*

இலக்குவன் திரும்பிவர சீதையின் புலம்பல் - அப்புலம்பலைக் கேட்டு இந்திரன் எருமைவடிவில் அங்கு வருதல், அதன் கண்களில் சிறப்பானதொரு ஒளியைக் கண்டு சீதை அதைத் தொடர்ந்து செல்லுதல் - எருமையோ வஜ்ரமிருக் என்னும் துறவியின் குடிலின் அருகில் நிற்றல் - அவளது அழும் குரல் கேட்டு துறவி சீதையின் அருகில் வந்து அவளைத் தன் குடிலுக்கு அழைத்துச் செல்லுதல், அங்கவளைத் தங்கும்படிப் பணித்தல் - காலம் செல்ல சீதை மகனை ஈன்றெடுத்தல் - சிசுவை என்ற நேரம் இந்திரனின்

மனைவி தானே அங்கு வந்து அவளுக்குத் தாதியாக உதவுதல், குழந்தைக்கு முனிவர் மங்குடன் எனப் பெயரிடுதல், பிறந்ததும் செய்ய வேண்டிய சடங்குகளைச் செய்தல் - சீதையிடம் இருந்ததோ ஓரேவொரு மோதிரம் தான். அதனால் தன் கையிலிருந்த மோதிரத்தை அவிழ்த்துக் குழந்தைக்கு அணிவித்தல் - ஒரு சமயம் தியானத்தில் அமர்ந்திருந்த முனிவர் அருகில் குழந்தையை விட்டுவிட்டு நீராடச் செல்லுதல், போகும் வழியில் பிறந்த தங்கள் குட்டிகளை எடுத்துக்கொண்டு மரங்களிலிருந்து மற்ற மரங்களில் தாவிக் குதித்துச் செல்லும் மந்திகளைக் கண்டு இவைகள் தன் குட்டிகளிடம் சிறிதும் கவனமாக இருப்பதில்லை என்று நினைத்து அவைகளை கவனமாக இருக்கும்படிக் கூறிட, அவைகளோ நாங்கள் ஒருபொழுதும் எங்களுடைய குட்டிகளை உன்னைப்போல் தியானத்திலமரும் துறவியிடம் விடுவதில்லை. எங்களது கண்காணிப்பிலிருந்து ஒருபொழுதும் அகல விடுவதில்லை. அதனால் நாங்களே மிகக் கவனமாகக் குழந்தைகளைப் பராமரிக்கிறோமென்று கூறல் - அந்தக் கேலி செய்யும் வார்த்தைகளைக் கேட்டவள் திரும்பி வந்து முனிவரின் அருகிலிருக்கும் தன் குழந்தையை எடுத்துக் கொண்டு நீராடச் செல்லுதல் - தியானத்திலிருந்து விழித்த முனிவரோ சீதையின் குழந்தையைக் காணதவராய் நடந்ததும் அறியாதவராய் மிக்க கவலையிலாழ்ந்தார் சீதை மகனை இழப்பது அவளுக்கு அளவில்லாச் சோகத்தை உண்டுபண்ணிடுமே என்று நினைத்தவராய் ஒரு புதிய குழந்தையை உருவாக்குதல் - அதனால் பாறையொன்றில் குழந்தை வடிவைச் செதுக்கல் - இதற்குள் சீதையும் அங்கு வர பாறையிலெழுதிய குழந்தைக்கு அவர் உயிர் கொடுத்திருப்பதைக் கண்டு தற்பொழுது முனிவரும் அக்குழந்தையின் அவசியம்

இல்லையென்பதை உணர்ந்து கூறிட, சீதையோ அக்குழந்தை இச்சிசுவற்குத் துணையாக இருக்குமென்று கூறி அச்சிசுவையும் ஏற்றுக் கொள்ளல் - துறவியும் அவளது வார்த்தையை ஏற்று அதற்கு உயிரளித்தல் - சீதை இரு குழந்தைகளையும் பரிவுடன் வளர்த்தல்.

## இருபத்திரண்டாம் அத்தியாயம்

### (லவனும் மங்குடனும் ராமரைச் சந்தித்தல்)

வஜ்ரம்ருக் முனிவரின் குடிலில் வசிக்கும் குழந்தைகளுக்குப் பத்து ஆண்டுகள் நிறைந்தன- ஒரு சமயம் தன் தாயின் ஒப்புதலில் வெகு தூரத்திலுள்ள காட்டிற்குச் செல்லுதல், அங்கு தன் இலக்குவன்மையை பரிசோதித்திட எண்ணி ஒரு பெரிய மரத்தில் மங்குடன் அம்பெய்துதல் அது இரண்டாய் பிளந்து விழப் பெரும் ஒலி எழல் - நான் நாராயணன் பூமியில் இங்கிருக்க இப் போரொலியை எழுப்பியது யார் என்றறிய ராமன் அஸ்வமேத வேள்வி காத்திட நிச்சயித்தல் - குதிரையின் கழுத்தில் அதில் ஏறுபவனோ அல்லது தடுத்து நிறுத்துபவனோ அரசத் துரோகி அரச தண்டைக்குரியவன் என எழுதப்பட்டிருத்தல் - அவ்வெழுத்து மங்குடன் பார்வையில் விழுதல் - ஆணவங் கொண்டவன் அதை எழுதியுள்ளானென்று மங்குடன் கொதித்தெழல் - அவன் குதிரையிலேறிக் காட்டில் அலைய விடுதல் - அனுமன் அதைப் பொறுக்காமை - அப்பணியைத் தடுக்க முயன்ற அனுமன் மங்குடனது அம்பினால் மூர்ச்சையிழந்து விழல் - நினைவடைந்ததும் அனுமன் சிறு குழந்தை உருவமேற்று மங்குடன் அருகில் சென்று அவனைக் கொல்ல நினைத்தல் மங்குடன் அவனை நன்கு அடித்து நொறுக்குதல் - குரங்காயினும்

ஆடை அணிந்துள்ளதால் மங்குடன் அவனை நன்கு இறுகக் கட்டிவைத்து அவனது தலைவன் ஒருவனே அவனை அவிழ்த்துவிடும்படி செய்தல் - அனுமன் புலம்புதல் - பரதனும் சத்ருக்னனும் கூட அவனது சங்கிலிகளை அறுத்து விடுவிக்க இயலாமை. - அனுமன் அயோத்தி ராமனை அணுகுதல் - அவனது வருந்தத்தக்க நிலை கண்டு வருந்திய ராமன் கட்டியவனைத் தண்டிக்கக் காட்டிற்கு வருதல் - மங்குடனை நிந்தித்தல் - இருவரும் வில்லெடுத்துச் சண்டையிடல் - ஆனால் இருவர் எய்த அம்புகளும் இலக்கை அடையவில்லை - மங்குடன் எய்த அம்போ மலர்க் குவியலாய் மாறி ராமனின் அடிகளை அலங்கரித்தல் - ராமன் மங்குடனை யார் என்றறிய விரும்புதல் - அவனோ தான் வஜ்ரமிருக் முனிவரின் குடிலில் வசிக்கும் சீதையின் மகன் என்றுரைத்தல் - ராமன் மங்குடன் தன் மகன் என்றறிதல் - மனதில் அன்பு பெருகுதல் - சீதை உயிருடனிருக்கும் செய்தியறிந்து மிக்க மகிழ்ச்சியடைதல் - தான் சீதையைப் பார்க்க விரும்புவதாகக் கூறல் - குழந்தைகளுடன் ராமர் சீதையிடம் செல்லுதல் - குழந்தைகள் நடந்த விவரங்களை சீதைக்கு எடுத்துரைத்தல்

## இருபத்துமூன்றாம் அத்தியாயம்

### *(சீதை பாதாள உலகிற்குச் சென்ற கதை)*

ராமரைக் கண்ட சீதையின் மனதில் இருவித எண்ணங்கள் தோன்றுதல் ஒன்று வெகுகாலமாகக் கண்டிராத ராமனைக் கண்ட மகிழ்ச்சி; மற்றொன்றோ தன்னைக் கொல்லும்படி ஆணை யிட்டதாலும், பத்து ஆண்டுகளாகக் காட்டில் தனிமையில் தான் பட்ட துன்பங்களை நினைந்தும், பின்னர் தான் பல இன்னல் களுக்குள்ளாகி வளர்த்து ஆளாக்கிய குழந்தைகளைத்

தொல்லை படுத்துவே வந்துள்ளானோ என்ற ஐயமும் - ராமனோ தான் முன் செய்த குற்றங்களை மன்னிக்கும்படிக் கோறல், அவளை மீண்டும் அயோத்திக்கு வரும்படி அழைத்தல் - அவள் வருவதற்கு மறுத்திடக் குழந்தைகளைத் தன்னுடன் அனுப்பும்படி வற்புறுத்தல் - குழந்தைகளை அனுப்புவதால் தான் சொல்லவொண்ணாத் துயரத்திற்கு ஆளாவோம் என்றறிந்தும் சீதை குழந்தைகளின் நலம் பேணி அவர்களை ராமனுடன் அனுப்புதல் - இருவரும் ராமருடன் அயோத்திக்குப் புறப்படுதல்

## இருபத்துநான்காம் அத்தியாம்

### *(சீதை பாதாள உலகிற்குச் சென்ற கதை தொடர்ச்சி)*

குழந்தைகளைக் கண்டு அயோத்தி மக்கள் குதூகலித்தல் - அங்கு சில காலம் கடத்திய பிறகு தாயின் நினைவு அரும்புதல் - அவர்கள் அவளைக் காணச் செல்லுதல் - குழந்தைகளுடன் ராமன் அவளுக்கொரு சேதியனுப்புதல் 'நீ இங்கு வரவில்லையெனில் தன் கண்ணீரே தன்னைக் கொன்றிடும்' - இதைக் கேட்ட சீதை அவனுக்கு மறுபதில் அளிக்கிறாள் 'இப்படி நடக்குமேயாகில் நான் உனது கடைசி நேரத்திற்கு அங்கு வருவதாக' - தாயுடன் சில காலம் வசித்தபின்பு ராமரிடம் சென்ற குழந்தைகள் தங்களது தாய் சொல்லியனுப்பிய சேதியைத் தெரிவிக்கின்றனர்; அதைக் கேட்ட ராமன் மனம் மிக வருந்துதல் - சீதையுடன் சேர்க்கையை மிகவும் விரும்பிய ராமன் அவளது பதிலையே சாதகமாகப் பயன்படுத்துதல் - அவளுடைய பிரிவுத்துன்பத்தைத் தாங்கமுடியாமல் ராமன் உயிர் துறந்தான் என்ற சேதியை அனுமன் மூலம் சீதைக்கு அனுப்பிட சீதையும் அயோத்திக்கு வருதல்; புலம்புதல்

- அவள் அவ்வாறு புலம்பிக்கொண்டிருக்கையில் ராமன் அவள் முன் தோன்றுதல், முதலில் அவளுக்கது வியப்பளித்தாலும் உடனேயே புதிய வஞ்சகன் இவன் என்னைக் கபடமாக வஞ்சித்தான் என நினைத்து ராமன் எவ்வளவு வேண்டியும் தான் அங்கு தங்கப் போவதில்லை எனத் தீர்மானித்து அங்கிருந்து புறப்படுதல் - எல்லாப்புறங்களிலும் கதவு தாளடைக்கப்பட்டிருப்பதை ராமன் தெரிவிக்கச் சீதை தன் அன்புக்குப் பாத்திரமான தேவதையைப் பிரார்த்திக்க பூமி தானே பிளந்திட்ட அதிசயமான காட்சி நிகழ்தல் - நாகவிருண் என்னும் பெயர் கொண்ட பாதாள உலகை ஆளும் மன்னனின் தலைநகரைச் சீதை அடைதல் - இக்காட்சியைக் கண்ணுற்ற ராமன் தன் நினைவிழந்து சீதையின் பிரிவைத் தாங்கமுடியாமல் பூமியில் விழுதல்

## இருபத்தைந்தாம் அத்தியாயம்

### *(சீதையும் ராமனும் ஒன்று சேரும் கதை)*

காலம் கடக்க ராமன் தன் நினைவடைந்து முறைப்படி அரசாளுதல் - சங்கரனின் ஆணைப்படி நூறு ஆண்டுகளுக்கொரு முறை எல்லாத் தேவதைகளும் கூடிப் பூமியில் நடக்கும் நிகழ்ச்சிகளைப் பற்றி எடுத்துக்கூறி ஆராய வேண்டும் எனப் பணித்த கூட்டம் கூடுதல் - அச்சபையில் இந்திரன் பூமியில் இருந்த எல்லா அரக்கர்களையும் ராமன் அழித்துவிட்டான் என்றும், அரக்கர்கள் எல்லோரும் எலிகளைப் போல் வளைகளிலும் பொந்துகளில் நுழைந்திட்டனரென்றும், பயமோ துன்பமோ ஒன்றும் இப்பொழுது காணக்கிடைப்பதில்லை என்று எடுத்துக் கூறல் - இப்படி எல்லாத் துயரங்களையும் தீர்த்த ராமன் இரவும் பகலும் சீதையின் பிரிவினால்

அவதிப்படுகிறான் என்னும் செய்தியைத் தெரிவித்தல் - ராமனின் துயர் துடைக்கும் வழி தேட கடவுளை வேண்டுதல் - சங்கரனின் ஆணைப்படி சீதையும் ராமனும் சபைக்கு அழைத்து வரச்செய்தல் - சபைக்கு அழைத்து வந்திடவும் சீதையைத் தேற்றிடச் சங்கரன் ராமன் இழைத்த மூன்று குற்றச்சாட்டுகளையும் எடுத்துரைத்து ராமனை மிரட்டுதல் - முழுவதும் உண்மையை நன்கு ஆலோசித்தறியாமல் சீதையைக் கொல்ல ஆணையிட்டது முதல் குற்றம், தான் உயிர் துறந்து விட்டதாக அனுமன் மூலம் அவளுக்குச் செய்தி அனுப்பி ஏமாற்றியது இரண்டாவது குற்றமாகும். அவள் வந்திருக்கும் நேரம் வெளிச்செல்ல முடியாமல் எல்லாக் கதவுகளையும் தாளடைத்திருந்தது மூன்றாம் குற்றமாகும் - அதனால் அக்குற்றங்களுக்காக அவளிடம் மன்னிப்புக் கோறும்படிக் கூறுதல் - ராமர் சீதையிடம் மன்னிப்புக் கோறுதல் - அதன் பிறகு சீதை ராமன் ஏற்றுக் கொள்ள வேண்டுமெனச் சிவன் உரைத்திட சீதையோ ராமன் திடமனங்கொண்டவன் அல்லன் என்று கூறி மறுத்தல் - சிவனோ தன் ஆணைக்கடிப்பணிந்து அவனை ஏற்றுக்கொள் எனக்கூறிட சீதையும் ராமனுடன் ஒன்று சேருதல் - ராமன் மட்டற்ற மகிழ்ச்சியடைதல் - சீதையுடன் ராமர் அயோத்தி திரும்புதல் - மக்களும் அளவுகடந்த இன்பமுறுதல் - ராமன் பல வேள்விகளைச் செய்தல், அப்பழுக்கற்ற புகழையும் கீர்த்தியையும் அடைதல்

# 1

# முன்னுரை

பாரினில் புகழ்பெற்ற ஆசியா எனப்பெயர்கொண்ட
பரந்த தீவினில் உயர்க்கீர்த்தியும் புகழும் பெற்றே
தென்கிழக்கு நாடுகளின் தலையணியெனத்திகழும்
தேசம் இப்புவியில் அழகுமிக்க தாய்லாந்தாகுமே 1

மிகப்பழமையான சிறந்த இத்தேசத்தையன்றோ
புராணங்கள் புகல்கின்றன 'சியாமா' என்னும் பெயருடன்
தாயீயென்னும் பெயரிய பழங்குடிமக்கள் நிறைந்ததால்
தாய்லாந்தென்றழைத்தனர் பின்னர் மக்கள் அத்தேசத்தை 2

அந்நாட்டு மக்களையெல்லாம் மிகமகிழ்ச்சியுடனிருத்திட
சீர்குணங்கொண்ட புத்தபிரான் வழியேற்றே என்றும்
பூமிபாலன் என்னும் மன்னன் மாட்சியுடன் ஆண்டனன்
மதியொளியும் ஒப்பில்லா உடல்வலியும் பொருந்தியே 3

முதிர்ந்த பொன்கதிர்கள் நிறைந்திட்ட நன்செய் நிலமும்
பசுமை பரந்து பொலிவுற நீர் பொங்கும் வயல்களும்
மென்மையோடெங்கும் வீசும் தென்றலின் தண்மையும் சேர
அம்மண் காண்போர் மனம் கவர்வதில் விந்தையுமுண்டோ 4

# 1

# முன்னுரை

பாரினில் புகழ்பெற்ற ஆசியா எனப்பெயர்கொண்ட
பரந்த தீவினில் உயர்க்கீர்த்தியும் புகழும் பெற்றே
தென்கிழக்கு நாடுகளின் தலையணியெனத்திகழும்
தேசம் இப்புவியில் அழகுமிக்க தாய்லாந்தாகுமே 1

மிகப்பழமையான சிறந்த இத்தேசத்தையன்றோ
புராணங்கள் புகல்கின்றன 'சியாமா' என்னும் பெயருடன்
தாயீயென்னும் பெயரிய பழங்குடிமக்கள் நிறைந்ததால்
தாய்லாந்தென்றழைத்தனர் பின்னர் மக்கள் அத்தேசத்தை 2

அந்நாட்டு மக்களையெல்லாம் மிகமகிழ்ச்சியுடனிருத்திட
சீர்குணங்கொண்ட புத்தபிரான் வழியேற்றே என்றும்
பூமிபாலன் என்னும் மன்னன் மாட்சியுடன் ஆண்டனன்
மதியொளியும் ஒப்பில்லா உடல்வலியும் பொருந்தியே 3

முதிர்ந்த பொன்கதிர்கள் நிறைந்திட்ட நன்செய் நிலமும்
பசுமை பரந்து பொலிவுற நீர் பொங்கும் வயல்களும்
மென்மையோடெங்கும் வீசும் தென்றலின் தண்மையும் சேர
அம்மண் காண்போர் மனம் கவர்வதில் விந்தையுமுண்டோ 4

புகழ்பெற்ற பாங்காக் அந்நாட்டின் தலைநகரதனில்
அழகும் சீர் சிறப்பு செல்வம் பொங்கித் ததும்பிடும்
வெண்ணொளி வீசும் வானுயர் மாடமாளிகைகள்
வரிவரியாய் விளங்கியதே அதன் கழுத்தணியென[1] 5

அந்நகர் பண்டு பேங்காக் என்றே பிரசித்தி பெற்ற அதனை
அப்பெயருடன் அழைப்பதில்லையின்று தாய்லாந்தவர் 6

'க்ருந்ததேவ்' எனப்பெயரிட்டு தாய்லாந்தவர் தம்நகரை
அன்புடன் அழைத்தனர் 'பேங்காக்' என்றில்லையே 7

'க்ருந்த' இருப்பிடம் என்னும் தாயீசொல்லுடன் வடமொழி
'தேவ' தேவன் சொல்லிணைந்தே 'க்ருந்ததேவ்' ஆயிற்றே 8

'த்தேவ' என்னும் அபப்ரம்ச சொல் 'தேவ' என்றாகுமே
தேவமொழிச்சொல் 'தேவ' 'த்தேவ'[2] என மறுவியதே 9

'க்ருந்ததேவ' கடவுளிருப்பிடம் எனப் பொருள்பட அமைந்தது
கருத்திலொத்ததே சான்றோருக்கு அப்பெயர் உண்மையிலந்தோ 10

---

1. இக்காப்பியத்தின் முதல் ஐந்து பாடல்கள் இக்காப்பியத்தை இயற்றியவருடைய பிறிதொரு நூலான தாயீ தேசத்தின் பெருமைகளைக் கூறும் நூலிலிருந்து மேற்கோளாக எடுக்கப்பட்டன.

2. 'த்தேவ' என்னும் சொல் வடமொழியின் இரண்டாவது தகரத்தை ஏற்ற தேவ என்னும் சொல்லாகும். தமிழில் நான்கு தகரங்கள் இல்லாமையினால் இக்குறிப்பிங்கு கொடுக்கப்பட்டது.

இந்நகர் நிர்மாணித்து ஆண்டுகளோ இருநூறுகள் ஓடின
செல்வச்செழிப்பும் வளமையும் குறைவின்றி கொண்டதே 11

ஆண்டனர் சக்ரீவம்சத்தவர் தாயீதேசத்தைப் பலகாலம்
அக்குலமுதலரசனே இந்நகரமைத்து பெயரிட்டனனே 12

கல்விகேள்விகளில் சிறந்த கவிக்கோன் 'புத்தயோத்பரன்'
சான்றோன் தன் வாயினால் இராமகதையைப் பாடினனே 13

புனைந்தனனே இராமகீர்த்தி என்னும் பெருங்காப்பியமொன்றை
பல்லாயிரம் வரிகளில் மெச்சத்தக்க அழகிய கவிதைகளாய் 14

செய்யுள்வடிவ அக்காதையில் உபகதைகள் தான் எத்தனை?
மேவிப்பரந்த பாரினில் அவை பெயர் பெற்று விளங்கியதே 15

இதுபோல் நூல் கண்டதும் கேட்டதுமில்லை என்கின்றனர்
இங்குள்ளோர் மனதை இராமகுணக்காதை ஈர்ப்பதன்றோ 16

படிக்கத்தெவிட்டாததும் பருகச்சுவை மிகுந்ததும்
காப்பியத்தேன்சுவை நுகர திகட்டுவதுமில்லையே. 17

'புத்த நாயீ லர்த் லா' என்னும் பின் வந்த அரசன்
இராமகதையை இராமநாடகமாக உரைத்தனனே. 18

இராமகாதையின் சாரத்தைப் பிழிந்தெடுத்துச் சுருங்க
நாடகத்திற்கேற்ப அந்நூலைத் தெளிவாக அமைத்தனனே 19

அக்காதையை நல்லுச்சரிப்புடன் திறம்பட நடித்து
அரங்கில் பாங்காய் ஏற்றுகின்றனர் நடிகவேந்தர்களின்றும் 20

ஒப்பனையும் உகந்த உயர் ஆடை அணிகலன்களுடன்
முகமூடிகளையும் ஏற்று மக்கள் மனம் கவர்கின்றனரே 21

திறம்பட நடித்துக் பாத்திர வசனங்கள் நன்கு புகல்வதுடன்
உள்ளுரைக் கருத்தையும் உணர்த்துகின்றனரே நன்கு 22

இன்று காணும் இராமநாடகக் கதைக்காட்சிகளில்
இவ்வரசன் புனைந்த வரிகள் மேற்கோளாகக் கொண்டன 23

மங்குடன் என்னும் மன்னன் கல்விகேள்விகளில் சிறந்து
தன்மதிக்கேற்றபடியே இராமகாதையை சித்தரித்தனன் 24

இராமகுணங்களை ஆய்வுசெய்தே பலபடி விவரமாக
திறத்துடன் எழுத நல்லறிவை வளர்ப்பதாயிற்றே 25

நுணுக்கமாய் ஆழ்ந்தறிய வேண்டிய பல விளக்கங்களை
நன்மதியால் சிந்தித்து முனைவன் தெளிய வரைந்தனனே 26

முன்னர் தாயீநாட்டவர் அறிந்திலரன்றோ! ஆதியில்
இராமகதை அளித்தவர் முதற்கவி வால்மீகியென்றே 27

மங்குட தாயிராமகதையை கண்டும் கேட்டும் மகிழ்ந்தோர்
இராமகதை தோன்றியது திண்ணம் அம்மண்ணிலென்றனர் 28

அம்மன்னன் தம்மக்களுக்கு நன்கறிய வைத்தான் தெய்வீக
இராமகதை தோன்றியது இப்பரந்த பாரத மண்ணிலென்றே 29

அறிஞர்களோ இதைத் திண்ணமாக அறிந்தொப்புவர்
அறிவிலிகளோ ஒப்ப இன்றும் தயங்குகின்றனரே 30

அம்மக்களோ இராமன் சீதை பிறந்தமண் அதென்றனர்
இராமராவணபோர் மூண்டதும் அம்மண்ணிலென்பர் 31

ஆயோத்தி என்னும் நகரமும் அச்தேசத்திலுண்டு: இன்றும்
மூலிகை எடுத்தசஞ்ஜீவினி மலைப்பிரதேசமும் அங்குண்டு 32

இராமனின் மகன் லவனை குறிக்கும் லோபபுரி
நகரமும் அங்குள்ளதென்பது வியப்பிலாழ்த்திடுமே 33

இன்றும் உளதே அந்நகரின் நடுவே பச்சை மலையொன்று
இராமபாணத்திற்கு இலக்கானதென போற்றுகின்றனதனை 34

வாழையடிவாழையாய் நம்பிய கருத்தை மனதிலிருத்தியே
பொற்றுகின்றனர் இராமகதை பிறந்தது தாயீமண்ணிலென்றே. 35

இராமகதை தனது என்றெண்ணம் மிகுந்திடவே
இதை வேறிடம் காண்பதும் அறிதென்றெண்ணியே
சிற்பிகள் பலரதை காரணமாகக் கொண்டன்றோ
சிற்பங்களாக வரைந்துள்ளனர் பற்பல இடங்களிலே 36

இவ்வாறு தனதென்றெண்ணியே மிக்க அன்புடன்
இராமனின் கதையை தத்தம் மதிப்படி வரைந்தனனே
பற்பல கதைகள் புனைந்து புகுத்தியதாலன்றோ
இராமகதையின் உருவம் மாறியது போலாயிற்று 37

கதைக்கருவில் மாற்றமேதும் இல்லையே
கதையில் மாற்றம் ஏற்படும் நிலையுமில்லையே
பல புதிய புதினங்கள் புனைந்திட்டே புவியில்
காணாக் கதைகளும் தன்னுள் சில கொண்டனவே 38

தெளிவாகத் தெளிந்திட்ட பற்பல புதிய
கதைகள் யாவும் சிறப்பாய் அமைந்திடவே
நவீனக் கதைகள் இணைந்தும் தெளிந்தே
இராமககதை ராமாயணத்திலுள்ளபடி அமைந்ததே 39

# 2

# அநோமதனின் கதை

மறைகளில் பிரணவம் போன்றே அரசர்களில் உயர்ந்தவன்
மன்னன் அனோமதன் புகழ்ச்சியைப் பெற்றிருந்தானே 1

தாயீலாந்து இராமகதையில் புகழோங்கிய அம்மன்னன்
தான்தோன்றியென இத்தரணியில் தெள்ளுபுகழ் பெற்றனனே 2

மாயாவிகளில் சிறந்தவனாம்; அரக்கர்களில்முதல்வனாம்;
பாரிதனில் ஹிரந்தயக்ஷன் என்னும் பெயருடையோன்
மாபெரும் சக்ரவாலமென்னும் மலையினில் நெடுங்காலம்
தேவர்களின் முதல் எதிரியாய்த் திகழ்ந்து வாழ்ந்தனனே 3

அக்கொடிய அரக்கனால் பீடிக்கப்பட்டே, மீண்டிடவே
அல்லல்தீர்க்கும் ஒருபாயம் காணாமல் தேவர்களோ
தேவதேவன் காக்கும் தெய்வம் கைலாயநாதனை
தம்மைக் காக்கக் கோரி தஞ்சம் அடைந்தனரே 4

ஒப்பனையும் உகந்த உயர் ஆடை அணிகலன்களுடன்
முகமூடிகளையும் ஏற்று மக்கள் மனம் கவர்கின்றனரே 21

திறம்பட நடித்துக் பாத்திர வசனங்கள் நன்கு புகல்வதுடன்
உள்ளுரைக் கருத்தையும் உணர்த்துகின்றனரே நன்கு 22

.இன்று காணும் இராமநாடகக் கதைக்காட்சிகளில்
இவ்வரசன் புனைந்த வரிகள் மேற்கோளாகக் கொண்டன 23

மங்குடன் என்னும் மன்னன் கல்விகேள்விகளில் சிறந்து
தன்மதிக்கேற்றபடியே இராமகாதையை சித்தரித்தனன் 24

இராமகுணங்களை ஆய்வுசெய்தே பலபடி விவரமாக
திறத்துடன் எழுத நல்லறிவை வளர்ப்பதாயிற்றே 25

நுணுக்கமாய் ஆழ்ந்தறிய வேண்டிய பல விளக்கங்களை
நன்மதியால் சிந்தித்து முனைவன் தெளிய வரைந்தனனே 26

முன்னர் தாயீநாட்டவர் அறிந்திலரன்றோ! ஆதியில்
இராமகதை அளித்தவர் முதற்கவி வால்மீகியென்றே 27

மங்குட தாயீராமகதையை கண்டும் கேட்டும் மகிழ்ந்தோர்
இராமகதை தோன்றியது திண்ணம் அம்மண்ணிலென்றனர் 28

அம்மன்னன் தம்மக்களுக்கு நன்கறிய வைத்தான் தெய்வீக
இராமகதை தோன்றியது இப்பரந்த பாரத மண்ணிலென்றே 29

அறிஞர்களோ இதைத் திண்ணமாக அறிந்தொப்புவர்
அறிவிலிகளோ ஒப்ப இன்றும் தயங்குகின்றனரே 30

அம்மக்களோ இராமன் சீதை பிறந்தமண் அதென்றனர்
இராமராவணபோர் மூண்டதும் அம்மண்ணிலென்பர் 31

ஆயோத்தி என்னும் நகரமும் அச்தேசத்திலுண்டு: இன்றும்
மூலிகை எடுத்தசஞ்ஜீவினி மலைப்பிரதேசமும் அங்குண்டு 32

இராமனின் மகன் லவனை குறிக்கும் லோபபுரி
நகரமும் அங்குள்ளதென்பது வியப்பிலாழ்த்திடுமே 33

இன்றும் உளதே அந்நகரின் நடுவே பச்சை மலையொன்று
இராமபாணத்திற்கு இலக்கானதென போற்றுகின்றனதனை 34

வாழையடிவாழையாய் நம்பிய கருத்தை மனதிலிருத்தியே
பொற்றுகின்றனர் இராமகதை பிறந்தது தாயிமண்ணிலென்றே.
35

இராமகதை தனது என்றெண்ணம் மிகுந்திடவே
இதை வேறிடம் காண்பதும் அறிதென்றெண்ணியே
சிற்பிகள் பலரதை காரணமாகக் கொண்டன்றோ
சிற்பங்களாக வரைந்துள்ளனர் பற்பல இடங்களிலே 36

இவ்வாறு தனதென்றெண்ணியே மிக்க அன்புடன்
இராமனின் கதையை தத்தம் மதிப்படி வரைந்தனனே
பற்பல கதைகள் புனைந்து புகுத்தியதாலன்றோ
இராமகதையின் உருவம் மாறியது போலாயிற்று 37

கதைக்கருவில் மாற்றமேதும் இல்லையே
கதையில் மாற்றம் ஏற்படும் நிலையுமில்லையே
பல புதிய புதினங்கள் புனைந்திட்டே புவியில்
காணாக் கதைகளும் தன்னுள் சில கொண்டனவே 38

தெளிவாகத் தெளிந்திட்ட பற்பல புதிய
கதைகள் யாவும் சிறப்பாய் அமைந்திடவே
நவீனக் கதைகள் இணைந்தும் தெளிந்தே
இராமககதை ராமாயணத்திலுள்ளபடி அமைந்ததே 39

# 2

# அநோமதனின் கதை

மறைகளில் பிரணவம் போன்றே அரசர்களில் உயர்ந்தவன்
மன்னன் அனோமதன் புகழ்ச்சியைப் பெற்றிருந்தானே 1

தாயீலாந்து இராமகதையில் புகழோங்கிய அம்மன்னன்
தான்தோன்றியென இத்தரணியில் தெள்ளுபுகழ் பெற்றனனே 2

மாயாவிகளில் சிறந்தவனாம்; அரக்கர்களில்முதல்வனாம்;
பாரிதனில் ஹிரந்தயக்ஷன் என்னும் பெயருடையோன்
மாபெரும் சக்ரவாலமென்னும் மலையினில் நெடுங்காலம்
தேவர்களின் முதல் எதிரியாய்த் திகழ்ந்து வாழ்ந்தனனே 3

அக்கொடிய அரக்கனால் பீடிக்கப்பட்டே, மீண்டிடவே
அல்லல்தீர்க்கும் ஒருபாயம் காணாமல் தேவர்களோ
தேவதேவன் காக்கும் தெய்வம் கைலாயநாதனை
தம்மைக் காக்கக் கோரி தஞ்சம் அடைந்தனரே 4

''நாராயணன் ஒருவனே இப்பொல்லா அரக்கனை
அழிக்க வல்லவன்; இதுவே சத்தியம்'' என்றே
நினைத்த முதற்கடவுள் மகேசனும் உடனேயே
அவனையே தியானித்து வேண்டினனே மனதில் 5

தன்னை நினைக்கையிலேயே உடன் தோன்றிடும்
திருமால் மலைமகள் மணாளன் போற்றிடத்தோன்றி
''என்னை நினைத்த காரணம் தான் என்னே? இனி
நான் செய்யக்கடவது யாது?'' என விளம்பினனே 6

அதுகேட்ட பரமேசனும் பகர்ந்திட்டான்;
''அரக்கன் ஹிரந்தயக்ஷன் தேவர்களைத் துன்புறுத்திட
அல்லலுற்றுப் பயந்து நொந்து அது தப்பிடவே
அமரர்கள் என்னைச் சரண் என வந்தடைந்தனரே 7

அண்டியவனை என்றும் காப்பவன் நான் என்னும்
புகழ்பெற்றவன் இது திண்ணம் எனினும் திருமாலே!
துயருற்ற தேவர்களைக் காத்திடும் விருப்பமும் இந்நேரம்
என் மனத்தில் மிகத் திடமாகத் தோன்றியது அன்றோ 8

கோறிய விருப்பத்தை நிறைவுடன் நிறைவேற்றும்
தகுதி பெற்றவன் நீ தான் என நன்கு அறிந்தேன்;
தேவ குலத்தை நீரே காத்தருள வேண்டும்
தாமதமின்றி கொடிய அரக்கனை சடுதியில் கொன்றிட்டே'' 9

உலகின் காக்கும்பணியேற்ற கடவுளாம் மாலோனை
முக்கண்ணன் இவ்வாறே முறைப்படி முறையிட
சக்ரவாலம் என்னும் பெயர்கொண்ட புகழுடை மலையைச்
சடுதியில் புறப்பட்டு வந்தடைந்தனனே திருமாலும்; 10

கடும் யுத்தம் செய்து அச்சமூட்டும் அரக்கனை-
ஹிரந்தயக்ஷயனைப் பலத்துடன் அடித்து நொறுக்கியே
கொடும் பாபியைக் கூரிய ஆயதங்கள் பல ஏந்தியே
கொன்றனனே நொடியில் தேவர்களின் எதிரியை; 11

யமனிருப்பிடம் அவ்வரக்கனை அனுப்பிய அச்சமயம்,
தன்னிருப்பிடமாம் பாற்கடலை ஓடோடி வந்தடைய;
வந்த நொடியிலே பாலாழியில் தாமரை மலர் மேல்
தவழ்ந்திடும் சேய் ஒன்றினைக் கண்முன் கண்டனனே; 12

கண்ட குழந்தையைக் களிப்புடன் கையிலேந்தியே
கைலாசமலைக்கு ஓடோடியும் வந்திட்டனனே;
கைலாயநாதன் சிவனுக்கு அம்மகவைக் காட்டியே
கலகலவென ஆரவாரம் செய்தனனே, மகிழ்ச்சியுடன் 13

அம்மகவிற்கு எளிதில் மனமிரங்கிடும் சிவபெருமானோ
அநோமதன் என்னும் அழகிய உயர் பெயர் சூட்டியே
அங்கங்கள் மங்கலக்குறி பொருந்தியதைக் கண்டு வியந்து
ஆவான் இவனே இப்புவியின் முதல்மன்னன் என்றனன் 14

அவனோ வண்ணமுடன் வளர்ந்து மன்னனாய் அரசேற்று
அழகிய அயோத்தி மாநகரை தலைநகராகக் கொண்டே
அருள்பெற்று மகேசனின், மகேந்திரனே நிர்மாணித்திட்ட
நகருடன் அவனைப் புகழ்ந்திட்டான் பணிவுடன் அன்றோ 15

தெய்வத் திறன்கொண்ட தேவலோகத்தரசனும் நகரமைக்க
தந்நகரம் நீங்கி அந்நகரம் நோக்கிச் செல்லுகையில்
ஆண்டவன் அருளினால் சுற்றித் திரிகையில் இந்திரனும்
ஆங்கே! துறவிகள் நால்வரின் நட்பை அடைந்தான் 16

அசன்கவீ தாக யுகாக்ர யாக என்பதே
அத்தெய்வீக முனிவர்களின் பெயர்களும் அமைய
அம்முனிவர்களின் பெயரின் முதலெழுத்தை
இணைத்தே தலைநகரின் பெயரைப் புனைந்தனனே 17

மன்னன் அநோமதன் அவன் தன் குலம் நீடிக்க
தசரதன் என்னும் பெயர்கொண்ட மகனைப் பெற்றான்;
அவன் குலம் வளர வழி வகுத்தான் உத்தமபுத்திரன்
இராமன். நற்குணக்கடலாம் நன்மதியோன் புதல்வனாய் 18

உலகின் கண் உயிரெலாம் வழுத்தியேற்றும்
உன்னத சரித்திரத்தை இராம பக்தி பூண்டோர்
இராமகீர்த்தி என்னும் பெயரிட்டு தம் வழிப்பாடி
இராமகாதையைப் போற்றிப் பெருமை கொண்டனரே 19

# 3

# இராமன் பிறந்த கதை

இப்பூமண்டலத்தில் குணமும் கீர்த்தியும் பெற்ற மூவர்
கௌசல்யா சுமித்ரா கைகேயி எனத் தசரதனின் மனைவியராயினர்
1

கற்பரசிகளுள் முதல்வராம் மும்மனைவிகளை அடைந்தும்
கொண்டனனே மன்னன் மகப்பேறின்றி மனத்துயரந்தனை 2

மானுருவம் பெற்ற கலைக்கோடி முனிவரின் உதவிகொண்டே
மகப்பேறு வேள்வி காக்க விரும்பினனே புவியரசன் 3

முனிவரும் முதலில் சிவனை தரிசித்துப் பாபம் களைந்திடவே
அடைந்தனனே, கயிலையுங்கிரி அவர் தம் கருத்தறிந்திடவே, 4

அதுசமயம் மூவுலகுமே அரக்கனைக் கண்டு நடுநடுங்கியதே;
பிரமன் விஷ்ணு சிவனிடமிருந்து பெற்று வரம் மதங்கொண்டே
5

திருமால் தானே தவப்புதல்வனாகவே அவதரித்தாரேயாகில்
தசரதனின் புதல்வராக அவர்களைக் காப்பதும் திண்ணமே. 6

உலக நன்மை கோறியே முனிவரும் அவ்வாறே
உலகநாதனை அடைந்து விருப்பத்தையும் வேண்டினனே. 7

மகேசனும் அப்படியே ஆகுக எனப் பறைந்திட்டே
தேவதேவனாம் தலைவன் திருமாலை வரவழைத்தனனே; 8

கமலக்கண்ணனும் அவ்வேண்டுகாளைச் செவிமடுத்தே
கைலாய மலையடியில் சிவனை விரைவில் வந்தடைந்தனனே;9

நல்லோரைக் காத்திடவும், தீயோரை அழித்திடவும்;
நற்புதல்வனாகத் தசரதனிடம் அவதரிக்க வேண்டுமென்று; 10

மகேசன் மனவிருப்பத்தை மனதிலிருத்தியே மாலோனும்
ஆமென்று ஆமோதித்தே தன் சங்கு சக்கர கதைகளுடன் 11

ஆதிசேடன் இலக்குமி தேவியும் என உடன் வந்தே
அவனியில் அவதரித்திடுவர் மானுட உருவத்துடனே 12

திருமாலின் திருவாய்மொழி ஆமோதித்தே ஏற்றிட்டு
துறவியை நோக்கி மலையரசனும் மொழியலுற்றனனே; 13

''அயோத்தி நகரம் திரும்பிச் சென்று மகவுபெறும் வேள்வி
காத்திடு. தெய்வீக மானுடன் ஒருவன் வெளித்தோன்றுவான்; 14

தீக்கொழுந்தினால் உடல் சிவக்க தெய்வீக நகை அணிந்தே
கைகளில் அன்னபிண்டம் நான்கு ஏந்தி வெளித்தோன்றுவனே;
15

முனிவரே! நொடியதுவிலே தென்திசையிலிருந்து வந்தே
கைச்சுதையில் பாதியை பிடுங்கிச் சென்றிடுவானே; 16

எஞ்சியுள்ள இருசுதைதனை மன்னனின் மனைவிகளும்
ஏற்றிட அழகு அணங்குகள் கருதரித்திடுவர் முனிவரே! 17

நற்பண்புடை அழகிய மகவுகள் நான்கினை ஈன்றிடுவர்
நன்மையடைந்து இப்புவியின் நல்வினையும் வலிவுறுமே'' 18

தலைவனாம் மகேசனின் உரைப்படி அனைத்தும் நிகழ்ந்தது
சிவபெருமான் சொல் ஒருபொழுதும் மாறாததன்றோ? 19

கௌசல்யையிடம் பரமாத்மா விஷ்ணுவே அவதரித்தார்,
கார்மேக வண்ணங்கொண்டே நன்மதியோர் புகழ்ந்திட 20

திருமாலின் சக்கரமே பரதனாகக் கைகேயி ஈன்றிட்டனளே;
செவ்வண்ணனின் சகோதரன் பாதசேவையிலீடுபட்டே 21

மகவுகளாய்ப் பிறந்தனரே சேடனும் சங்குமே சுமித்திரையின்
மஞ்சள் வண்ண இலக்குவன் மங்களங்கள் பொருந்தியே 22

சத்ருக்னன் உதித்தான் சுதையினின்றும் அருணவண்ணமாய்
சுமித்திரையின் கர்பத்திலிருந்து சகோதரபாசம் மிகுந்தே 23

இவ்வாறே இம்மண்ணில் மாயோனும்
இவ்வுலகைக் காத்திடவே அவதரித்தனனே;
இறைவனின் சங்குகதைதிரிசூலசக்கரம் தாங்கியே
இராமனின் உடன்பிறந்தோர்களாக அவதரித்தே. 24

# 4

# நந்தகனின் கதை: இராவணன் முன்பிறவிக் கதை

திருமால் பூமியில் அவதாரம் செய்தகாலை,
இலங்கை நகரை, அரக்கரரசன் ஆண்டுவந்தனனே;
மூவுலகும் வென்று ஐயிருதலையோனெனப் பெயர்பெற்று
முதல்வனாய்த் திகழ்ந்தனனே மறையோதுவோர்களில் 1

தன்னுடன்பிறந்தோர்களிலெல்லாம் மிக்க உயர்ந்தோனாய்
தன் பராக்கிரமத்தினால் பகைவர்களை வென்ற பராந்தகனாய்
முற்பிறவிப்பயனால் அடைந்த பலனாம் இப்பிறவியின்
கர்மவினையோ இயற்கையில் விந்தையாய் அமைந்ததே 2

பண்டைநாளில் நந்தகன் என்னும் பெயர்கொண்டே
மூவர் குலத்தில் உதித்து வளர்ந்தவன் கைலாயமலையில்
தேவதேவனாம் மகேசனைக் காண வந்தடைந்தோரின்
பாதமிரண்டை நீரினால் கழுவிச் சுத்தம் செய்தனனே. 3

இவ்வாறு இப்பணியில் இடப்பட்ட இந்நந்தகன்
தேவர்கள் எள்ளிநகையாடும் பாத்திரமும் ஆனானன்றோ.
ஆங்கு தரிசனம் வேண்டிவரும் வானுலகோர்களோ அவனது
கூந்தலைப்பிடித்துக் கொய்து கிண்டலும் செய்தனரே. 4

தேவர்களின் இவ்விழிசெயலிற்கு மீண்டும் உள்ளாகியே
தேவகுழுவிற்குப் பணிவிடை செய்தவன் முடிமுழுதுமிழந்தே
தன் மனவலிவிழந்து மனம் மிக நொந்து வருந்தியே
தன் குறை தீர்க்க வேண்டினனன்றோ மகேசனை அணுகி 5

தன்னிருகரம் கூப்பியே விரைவில் மனமகிழ்ச்சி கொள்ளும்
சிவபெருமானிடம் தன் விருப்பத்தை வேண்டினனன்றோ?
''ஈசனே! எனக்கு அவ்வரம் தருவாயப்பா, எவ்வரத்தினால்
மீண்டும் தேவர்கள் பரிகசிக்கும் பாத்திரமாகாமலிருக்கவே 6

பலயுகங்கள் துன்புற்று அல்லலுற்றது போதுமே -
நானனுபவித்த விசனங்களுக்கு எல்லையுந்தானுண்டோ-
போதுமினி இது சகிக்கும் திறனும் இழந்தேனப்பா -
அளவில்சக்தியோய்! திறனெனக்களித்திடு 7

கைவிரலினால் சுட்டிக்காட்ட, அவன் அந்நொடியே
மடியவேண்டும்; இவ்வரமே எனக்குப் போதுமப்பா'' என
தக்க பணியை மெச்சி மனம் மகிழ்ந்தே எதிரில் தோன்றி
'அப்படியே ஆகுக' என்று மகேசனும் ஆமோதித்தான்; 8

தேவர்களும் முன்போல் மகேசனை காணவேண்டி
கைலாயமலைக்கு நித்தம் வந்தடைந்த நேரம்-
மூடர்களாய் அவனது புதிய சக்தி யறியாமலே
முன்போல் அவனைச் சீண்டி எள்ளி நகையாடினன்; 9

ஆனால் எத்திசையில் தன்விரலைச் சுட்டிக் காட்டினனோ
அங்கிருந்த தேவனும் நொடியில் மடிந்து வீழ்ந்தனனே;
அச்சம்மிக அடைந்து ஓடோடியும் வந்தே தேவர்கள்
அடைந்தனர் காக்கும் கடவுளை விரைந்தேகிவந்தே 10

அவனால் அல்லலுற்ற தேவர்கள் யாவருமே அந்தோ!
தங்களைக் காத்திட எண்ணியே வேண்டினர், விரைந்தே.
அவரது அந்நிலை கண்டு கருணைகொண்ட சிவனோ
திருமாலையே தம்மனதில் திறம்பட நினைத்தனனே; 11

வந்தெதிரில் தோன்றிய திருமாலைக் கண்டுரைத்தான்
நந்தகன் துன்புறுத்தும் வானோர்களைக் காத்தருளவேண்ட
திருமாலும் 'நீ உரைப்பதும் முற்றிலும் உணரத்தகுந்ததே
ஈசனே! ஒப்பிய உன் வார்த்தையை ஏற்றேன்' என்றான் 12

மனங்கவரும் தேவமங்கை அப்சரஸ் உருவமேற்று வந்து
நந்தகனைத் தன்வசம் ஈர்த்திட முயன்றாளன்றோ?
மனதாலும் சிந்திக்கவொண்ணா குற்றமற்ற அழகுகண்டு
மனதைக் காமன் அன்பிற்கு இரையாக்கினனே! 13.

மையல்கொண்டு அவளழகைப் பருக எண்ணியவனை
மங்கையும் 'ஆடுவோமே நாம் நடனம்' எனப் பகர்ந்தாள்;
அதுகண்டு மயங்கி மென்னடமிடும் அத்தேவஅணங்கோ,
தன்னுடற்கீழ்ப்பகுதியைத் தன்விரலால் சுட்டிக்காட்டினளே 14

மன்மதாவேசத்தால் குறுகியமனங்கொண்ட மதியிலியோ,
மாண்டன் தானும் அவ்வாறே செய்ய கிழூடல் துண்டித்தே.
மதியற்ற அவனது மெலிந்த மனம் உணர்ந்த மாலும்
அவனைக் கொல்ல அதனையே உபாயமாகக் கொண்டனன்! 15

'திருமாலின் கபடத்தை நன்கறிந்தேன் நான்' என்றே
மனம் வருந்தித் தன்னையே நொந்துகொண்ட நந்தகன்,
மாலை நோக்கி வேதனைமிகு வசனங்கள் உதிர்த்தான்:
'ஐய! அறியாமல் செய்திடினும் உன் செயல் ஒப்புமோ?' 16

உயிர்காக்கும் உயர்க்கடவுள் திருமால் நீ முயன்றெடுத்த
உபாயமோ உலகோர் நிந்திக்கத் தகுந்ததே ஆகும்'' என,
அவ்வார்த்தைகளைச் செவிமடுத்த அச்சுதனும் ''அப்பா!
அவ்வாறாகில் நான் கூறுவதைச் செவிமடுப்பாய்!'' 17

''உரிய தோர் உபாயந்தனைக் கூறுகிறேன், கேட்டிடு
மறுபிறவியில் நீ பூமியில் பிறக்குங்காலையில்
தலைகள் பத்தும் புயங்கள் இருபதுமாகக் கொண்டிட
நானோ இருபுயங்கொண்டு ஒரே தலையினன் ஆகி 18

அந்நிலையில் உன்னுடன் நான் கடும் போர் புரிந்தே
அனுப்புவேன் உன்னைக் காலன் வீடு திண்ணமிது;
என்று உள்ளம் அமைதி கொள்ளும் வசனம் கூறியே
திருமாலும் அவனை அந்நேரம் கொன்றிட்டனனே! 19

# சீதை பிறந்த கதை

நந்தகனெனப் பெயரோன் பத்து தலையோனாகப் பிறந்திடத்
தலைவன் நாராயணன் இராமபிரானாக அவதரித்தான் 20

அப்பத்து முகத்தோன் இத்தரணியில் வளர்ந்து நாற்புறமும்
ஆழிசூழ் அகழியுடன் செல்வம் சேரிலங்கையை ஆண்டனனே 21

பல பெண்டிரை தன் பத்தினியாகக் கொண்டிடினும்
போற்றினன் அன்பு மந்தோதரியை மதித்தவள் கூற்றை 22

நாற்புறமும் எரியப்பட்ட சுதைகளின் நறுமணம் நுகர்ந்தவள்
அகமகிழ்ந்து அது உண்ண விரும்பி கணவனை வேண்டினளே 23

கேட்டவள் வார்த்தையை ஏவினன் அசுரப்பெண்மனியை
காகனா எனப் பெயருடையாளை ''சென்று சுதை கொண்டுவா''24

காக்கை உருவேற்று அவள் வடகோசலம் வந்து
பிண்டத்தில் பாதி பிடுங்கி உயரப் பரந்து வந்தனளே 25

இலங்கை நகரை விரைந்தேகி அரக்கி பிண்டம்
கொடுத்திட மந்தோதரிக்கது கொடுத்தனனே 26

பிண்டமுண்ட மன்னன் மனைவி மந்தோதரி கருவுற்று
அசாதாரணப் பெண்குழந்தையைப் பெற்றெடுத்தாளே 27

பிறந்த நொடி பெண்சிசு 'இராவணனை கொன்றுவிடு' என
மும்முறை மொழிந்தும் பெற்றோர் செவிமடுக்கவில்லை 28

குழந்தையின் சாதகத்தை நன்கு கணக்கெடுத்துப் பார்த்தனரே
விபீடணனை முதலாகக் கொண்டு குறி கூறும் வல்லுநர்கள் 29

இராவணகுலம் அழிப்பவள், இலங்கை அழியும் இவளால்
என்னும் கூற்று கேட்டு கவலையில் ஆழ்ந்தது மன்னன்மனம் 30

அச்சங்கொண்டு தன் சோதரன் விபீஷணனிடம் கூறினான்
'இக்கன்னிகை விஷயத்தில் உன்னிச்சைபடி முடிவெடு' என 31

அண்ணன் சொற்கடிபணிந்து கலசமொன்றில் குழவியிட்டு
ஆணையிட்டனனே தாமதமின்றி ஆற்றினில் எறிந்திடுக என 32

நற்குணம் படைத்த விபீடணன் அக்குடத்தை
நதிநீரில் அந்நொடியே வீசிட ஏவினன் சேவகனை;
அக்கலசமோ அலைநீரில் மூழ்காமல் மிதந்ததம்மா!
அச்சேவகன் விந்தையிதை என்சொல்வேன் என்றனனே. 33

அக்கன்னிகை அலைமகளின் அவதாரம் அன்றோ?
தந்திறத்தினால் மகளுக்கு காக்குங்கரம் கொடுக்க எண்ணி
ஆற்றினிலே மணம் பரப்பும் அலர்தாமரையாய்த் தோன்றிக்
கும்பத்தை அதிலிருத்தி அரவணைத்தாள் அன்றோ! 34

திருமகளோ தன்னுயர் இறைமாட்சிமையால்
அலைமோதும் ஆற்றில் அமைதியுடன் மிதந்து சென்று
பத்மாசனம் இட்டமரும் பெரும் யோகியைப் போல்
அந்நதியின் கரைநோக்கிக் கடத்திச் சென்றனளே 35

அவ்விடமோ சனகன் என்னும் திடங்கொண்ட மன்னன்
துறவியாய் நிட்டையில் தவத்தில் அமர்ந்திருந்தவர்
நீராட எண்ணியே துறவி மன்னன் நதிக்கரை வந்தடைய
தாமரை மலரில் பொருந்திய கும்பத்தை கண்டாரன்றோ? 36

கண்டு ஆவலுடன் இன்னதென்று தெள்ள அறிந்திட
எண்ணியே துறவிமன்னன் கலசத்தைத் திறந்து பார்த்திட
கண்டிட அதனுள் அப்பொழுது பிறந்த குழவியை
வியப்பிலாழந்தான், பொங்கிவரும் மகிழ்ச்சியுடன்; 37

அந்நதியின் தேவதையோ நற்குணம் பல கொண்டவள்;
மணிமேகலை என்னும் பெயரில் பிரசித்தியும் பெற்றவள்;
மற்ற பல தேவமாதர் புடைசூழ அங்கு வெளித்தோன்றிப்
பச்சிளம் மழலையைத் தன் மடியில் ஏந்திவந்தனளே; 38

'உயர்ந்த மேன்மகளன்றோ மேதினியில் வந்தனள்
அக்குழந்தை திருமகளே' எனத் திண்ணமாயறிந்தாள்;
அன்றி மூடிய கலசத்தில் உயிர் மூச்சுக்கொண்டே
மழலை உயிர் வாழ்வதும் ஆகுமோ! விந்தை காண்! 39

பச்சிளங் குழவி கண்டே மனம் மகிழ்ந்த மாமுனிவர்
நாடு திரும்பிட எண்ணியதும் இயல்பே ஆயினன் துறவி
தவத்தடங்கல் நினைத்து தன்னிருப்பிடம் செல்லத் துணிவின்றி
கலசக் குழந்தையுடன் கானகத்தில் காலம் கழிக்க எண்ணி 40

பச்சைப் பெருமரம் வேர்பாயும் அடித்தளத்தில்
பள்ளமொன்று பெரிதாகத் தோண்டினான் அன்றோ;
மனதிலிருத்தித் தேவர்களை வேண்டினன் அதுவேளை
''பத்தினித் தேவதையாமிவள் திருமாலின் என்றிடில் 41

இவ்வுலகில் வந்துதித்தவளை தாமரை தானே தோன்றி
கலசத்துடன் மீண்டும் ஏற்பதே உத்தமமாகும்'' எனப்
பகர்ந்திட பார்த்த நொடியிலேயே அம்மா!
அப்பொழுது அலர்ந்த தாமரை மலர் தோன்றியதே 42

கலசம் ஒன்று தோன்றிட கமலமும் அதன்மேல் அலர்ந்திட
அரசனும் நலம்பேணி அமரர்களைப் பணிவுடன் வேண்டிட
மாசறு பக்தியுடன் மன்னவனும் மகவை மண்ணிலிட்டே
தந்தவம் வளர்த்திட மீண்டும் சென்றான் கானகம் அன்றோ? 43

காட்டினில் கடுந்தவம் புரிந்த அப்பெரும் மன்னன் சனகனைக்
கடந்துசென்றன விரைவில் ஓடோடியும் ஆண்டுகள் பதினாறும்
நீண்டநாள் தவமிருந்தும் நற்பலன் ஒன்றுமே பெறாதமையால்
இனியும் தவம் செய்யும் எண்ணத்தைக் கைவிட்டனனே; 44

தந்தேசம் திரும்பி மீண்டும் வர விரும்பியதும்
திடீரென அவன் மனமோ சிறிது சிந்தனையிலாழ்ந்தது;
கோதிலா அவன் மனதில் ஓர் எண்ணமும் எழுந்ததே;
அக்கலசத்தைப் பார்த்திட மனம் மிக விரும்பியதே. 45

தன் சேவகன சோமனை அழைத்து ஆணையிட்டான்;
''மரத்தின் அடி சென்று தோண்டிடுவாய் மண்ணினை;
மண்ணடியில் கிடக்கும் கலசம் கவனமாய் கொண்டுவா'' என
மன்னவன் ஆணையைப் பரிவுடன் செயல்படுத்தினனே; 46

ஆழம் மிகவாகத் தோண்டி ஆங்கே குழி பறித்திடினும்
கலசம் போன்றெதுவும் காணாமல் சிந்தனை முகத்தில் தேக்கி
முகம்வாடி வருத்தமுற்று மன்னனை வந்தடைந்து நடந்த
விருத்தாந்தத்தைக் கூறி விசனித்தவனிடம், அவரும் கூறினார்; 47

''நீ நேரே மிதிலையாம் தலைநகர் சென்றிட்டே
கலப்பை கோடாலி கரணங்களை கொண்டு வா;
சேனைகளையெல்லாம் உன்னுடன் அழைத்து வா;
தாமதமின்றியே பூமி தோண்டும் பணி ஏற்க வேண்டும்'' என 48

அவ்வாறே சேனைகள் சடுதியில் அவ்விடம் வந்து குவிந்து
தம்தம் கருவிகளால் மண்ணை மிக ஆழமாகத் தோண்டிடினும்
கலசத்தைக் காணாமல் மனம் பேதலித்து நிற்க, மன்னன் தானே
தன் கையால் அப்பூமியைத் தோண்டிட முயன்றானே! 49

மன்னன் மண்ணைத் தோண்ட கலசமும் கண்ணில் பட
அதன் மையத்தில் மலர்ந்திருந்த மலர் இதழ்களினிடை
ஆ! கண்டானம்மா அழகிய பெண் குழந்தையை! ஆங்கே
தேவகன்னிகையாகத் தெளிந்த முகமலர்ச்சியுடன் விளங்கும் 50

வெண்தாமரை வென்ற கன்ன அழகு என்னென்பதம்மா!
கண்களோ நீண்டு அலர்ந்த தாமரை இதழ் ஒத்ததம்மா!
வண்ணமோ பொன் கதிரன்ன சந்திரிகையை வென்றதம்மா!
காண்பவர் எவரையுமே மிக்க வியப்பில் வீழ்த்தியதம்மா! 51

கலப்பை எடுத்து நிலம் உழுதிடக் கிட்டியதாலன்றோ
சீதை என்னும் பெயர் சூட்டினார் அவரும், அன்புடன்!
உலகமே போற்றும் மாணுயர் பெரும் மன்னர்முனிவராம்
சனகனும் தந்தையாகிப் பூமியில் புகழும் பெற்றனரே 52

## சீதையின் திருமணக் கதை

கண்டெடுத்ததும் அவளைத் தவவலிமை பெற்ற சனகனும்
தந்தலைநகருக்கே அழைத்துச் செல் என்றான் பரிவுடன்
மணப்பருவம் அடைந்தவள் அவள் எனக் குறிப்பின் அறிந்து,
சுயம்வர ஏற்பாடுகளைச் செய்திடவும் முயன்றானன்றோ? 53

பலப்பலத் திசைகளினின்றும் பற்பல தேச மன்னர்கள்
சுயம்வர சங்கதியைச் செவிமடுத்தே சடுதியில்
கோதிலா அழகும் பண்பும் அமைந்த அக்கன்னிகையை
சனகன்மகளை மணக்க விரும்பி ஓடோடியும் வந்தனரே! 54

பல தேசத்து மன்னர்கள் கூடிய சுயம்வர மண்டபத்தில்
சிவபெருமான் வில்லைவைத்து விதியொன்று சமைத்தான்;
''இவ்வில்லை நாணேற்றி ஒடிக்கும் வலிமை வாய்ந்த
வாலிபனே என் மகளை மணந்திட உரியவரன் ஆவான்'' 55

வில்லொடித்திடும் கதையை விவரிப்பதும் தானெப்படி?
வில்லாளி ஒருவனுமே இல்லையே குழுமிய அக்கூட்டத்தில்
சிவபெருமானது மாபெரும் வில்லை நாணேற்றுவது என்
பருத்த பெரும் வில்லைத் தூக்குவதும் இயலாததாயிற்றே 56

ராமனை சீதாராமனாகக் காணும் விருப்பம் மனதிலுந்த
குசிக முனி புதல்வராம் கௌசிகனின் ஆணைக்கடிபணிந்தே
அழகிற்கும் ஒழுக்கத்திற்கும் உறைவிடமாம் உத்தமன் ராமன்
தம்பி இலக்குவனுடன் வந்தான் சுயம்வர மண்டபத்திற்கு; 57

வில்வித்தையில் தேர்ந்தவனன்றோ வீரன் ராமன்?
விளையாட்டாக வந்து மகேசனின் மாபெரும் வில்லைக்
கையால் எடுத்துத் தூக்கிட உடனே ஒடிந்ததம்மா வில்லும்!
சீதையும் ராகவனைச் சுயம்வர பணயப்படி வரித்தாளன்றோ? 58

பொன்னனைய மேனியாம் விதேகமன்னன் மகளை
மறையோர் விதிப்படி முறையாக மணந்தான் ராமன்
அலைபாயும் மக்கள் திரளாக அன்புடன் வரவழைக்க
அயோத்தியாம் தந்நாட்டின் தலைநகரம் திரும்பினனே 59

## ராமாசுரனின் கதை

தந்நகர் திரும்புங்காலை ஈசன் வில்லொடித்த விவரங்கேட்டு
தெய்வப்பிறவி கொண்டவன் ராமாசுரன் என்னும் பெயரினன்
கடுங்சினத்துடன் 'எதிரி நீ எனக்கு' என்றவனை அழைத்தே
கடும் போர் புரிந்தனனே; பகைவனாக எண்ணியே.. 60

கோடாலியைக் கையில் தன்னாயுதமாக ஏந்திய அந்த
ராமாசுரனோ, தரணியில் தனிப்பெருமை பெற்றவன்;
போர்க்கலைகளில் நல்தேர்ச்சிபெற்ற புதுமணமகனாம்
ராமனிடம் தோல்வியுற்றுத் தன் உண்மையுரு காட்டினனே! 61

''ஆஹா! திருமால் அல்லவோ என்முன் தோன்றியுள்ளான், இது
என் பிறவிப்பயன்'' என் உளமகிழ்ந்து மெய்சிலிர்த்து
மேலானதோர் உதவி செய்திட எண்ணி முன் மகேசன்
தனக்குக் கொடுத்த வில்லை ராமனுக்குக் கொடுத்தனன் 62

பரிவுடன் திரிமேகன் தன் முப்பாட்டன் வில்லைப்
பரிசாக அளித்திட இராமனும் ஏற்றானதை உவகையுடன்
பெற்ற அவ்வில்லை ஆகாயத்தில் சுழற்றி எறிந்திட்டே
வருணதேவனிடம் வைத்திட்டான் அடகாக இராமனும் 63

'நினைத்த நேரம் என்கையில் கிடைக்கக்கடவது என்றே
என் கரமதில் ஈன்றிட்ட வில்லை அடகாக வைத்திட்டேன்'
இவ்வண்ணம் இராமாசுரனிடம் தெளிவாக எடுத்துரைத்தே
ரகுவீரன் இராமன் அன்புடன் விடைபெற்றான் அன்றோ? 64

முன் தன்புலன் வென்ற இராமன் பின் இராமாசுரனை
வென்றே
தலைநகர் அயோத்தி அடைந்தனனே வழி கடந்து சென்றே 65

# 5

# ராமன் காடு செல்லும் கதை ஜிஹ்வனின் கதை

தலைநகரம் அயோத்தி இராமனும் திரும்பிடவே
தந்தை தசரதன் இராச்சியத்தில் முடிசூட்ட விரும்பிடவே
தூண்டப்பட்டே குப்சாவினால் கேகயன் குலத்துதித்த
அவன் மனைவி மனமோ மருட்சியால் வெகுண்டதே 1

குப்சா என்னும் கூனித்தாதி இருந்தாள் அவளுடன்
கேகய மன்னன் மகளின் அன்பின் பாத்திரமானவள்;
பண்டொருநாள் ரகுராமன் தனக்கிழைத்த
அவமானத்தை மனதிலிருத்தி பகைமை கொண்டனளே 2

சின்னஞ்சிறு வயதினில் சிரித்து விளையாடும் நேரத்தில்
கூனியின் முதுகில் அறியாமல் அம்பினால் அடித்திட
கூனும் உடனேயே மறைந்ததன்றோ?
நல்லோர் சேர்க்கையில், துர்மதி அழிவது போலாம் 3

பால்மணம் மாறாப் பாலகன் விளையாட்டாகவே
மீண்டும் நொடிகழித்து அவளையே குறிவைத்திட
அவ்வம்பும் அவள் மேல் தைத்திடவே
மீண்டும் கூன் அவளது முதுகில் வெளிவந்ததே 4

ஆங்கு குழுமியோர் யாவருமே இக்காட்சியைக் கண்டு
வியந்து கூனியைப் பார்த்து பரிகசித்துப் பேசிச் சிரித்திட
ஆ! அந்தோ! புலம்பினள் 'இவ்விராமனாலல்லவோ
மக்கள் முன்னிலையில் பரிகாசத்திற்குப் பாத்திரமானேன்?' 5

என்றெண்ணியே கோபக்கனல் கார்மேகம் முழுவதுமே
மன ஆகாயத்தின் உள் குடிகொண்டு மறைந்திருந்ததே
குழந்தையாயினும் விளையாட்டாக நிகழ்ந்த தாயினும்
மனக்குமுறலே மனம் முழுவதும் பரந்து நிறைந்ததம்மா. 6

தன் மனத்தாங்கலைத் தன் மனதிற்குள்ளேயே இருத்தித்
துடித்தாள் கூனி. அம்புதைத்த புண் போல் வேதனையில்
தன் அவமானத்திற்குப் பழிக்குப்பழி வாங்க எண்ணித்
தக்க நேரத்தை எதிர்பார்த்தே காலம் கடத்தினாள் அன்றோ? 7

உடலோடு மாத்திரமன்றி உள்ளத்திலும் கூன் கொண்ட
அவளோ தக்க நேரத்தை எதிர்பார்த்தே காத்திருந்தாள்;
ராமனுக்கு மகுடாபிஷேகம் என்று பறைசாற்றிட
அதுவே அவளுக்குரிய நேரம் என ஆயிற்றன்றோ? 8

முன் நிகழ்ந்த அவமானத்திற்குப் பழிவாங்கும் எண்ணத்தீ
மனத்தில் ஆழ்ந்து கனலுடன் கொழுந்து விட்டெரிய
மனத்தில் இதுவே உகந்த தருணமென நினைத்துக்
கேகயமன்னன் மகளிடம் ஓடோடியும் வந்தனளே! 9

கண்டுரைத்தாள், வந்தவள்; "அறிவாயோ அறிவீலியே!
சக்களத்தியின் மகன் மன்னனாக பதவியேற்க உள்ளானே
செய்தி இது அறிந்தும் ஒருவிதச் சிந்தனையுமின்றிக்
கவலையின்றிக் களித்திருக்கின்றாயே உள்ளத்தினில் 10

இராமன் மன்னனாக நாளை மகுடமேற்பானாகில்
உன்நிலையும் பரதன் நிலையும் என் என சிந்தித்துப் பார்!
தாமதமின்றியே சடுதியில் நல்லதொரு உபாயத்தையும்
தேர்ந்தெடுத்தே பொறுத்தமான திண்ணமான முடிவெடு. 11

வீடு கொழுந்து விட்டுப் பற்றி எரியும் நேரம்
வீணேயாகும் கிணறு வெட்ட நினைப்பதுமன்றோ?
உனக்கு உபாயம் ஒன்றும் உடன் தோன்றாவிடின்
உடனே உணர்ந்தேற்றிடுவாய் நான் கூறும் கூற்றை 12

போர்க்களத்தில் நீ செய்த உதவியை நினைவு கூறிடு;
அசுர சேனையுடன் போரிட்டு உயிர் ஊசலாடிய நேரம்
பணயம் வைத்துத் தன்னுயிரை பதியைக் காத்தவள்நீ
அவனும் மனம் மகிழ்ந்து வரமிரண்டு ஈந்தானன்றோ? 13

மேன்மைபொருந்தியவளே! கணவனிடம் ஈண்டு கூறிடு;
அவ்விரண்டு வரங்களை யாசிக்கும் தருணமும் ஈதே;
இத்தக்கநேரம் பயன்படுத்தி உரிய பலன் பெறாவிடில்,
காலமே உன் கோலத்தைக் கணநேரத்தில் காட்டிவிடும் 14

முன்பொரு சமயம் சத்தியம் செய்தீந்த இருவரத்தினில்
ஒன்றினால் இராமன் ஈரேழு பருவங்கள் வன மேகிடவும்;
பரதன் பாராளவேண்டும் என்றே பிறிதொரு வரத்தினால்,
மனவிருப்பத்தை வெளியிடம்மா, இதுவே உகந்ததாகுமே.'' 15

தாதியின் வசனம் கேட்டு, ''அப்படியே ஆகட்டும்'' எனப்
பதிலுரைத்த கேகயன் மகளும், கணவனிடம் சென்று
முதுமை வாட்டிடும் மன்னனைக் கண்டு, ''முன்பு நீ
சத்தியம் செய்துகொடுத்த வரங்களைத் தந்திடு'' என!
16

வச்சிரத்தின் வீழ்ச்சி ஒப்ப இருவரங்களைக் கேட்க
அவை மன்னவன் உயிரை முதலில் உறிஞ்சிட
இராமனும் தந்தை சொல் நிறைவேற்ற எண்ணியே
சீதை பின்தொடரப் புக்கினன் காடு அன்றோ? 17

வனத்தில் இலக்குவனுடன் காலத்தைக் கடத்தினான்;
பற்பல கானகங்களில் புகுந்து அலைந்து சுற்றிட்டான்;
ஆனால் அங்கும் அவனை அல்லல்கள் அகலவில்லையே!
மனவலிவுற்றவனை இடுக்கண் மேன்மேல் தொடர்கிறதே; 18

சூர்ப்பணகை என்னும் பெயர் கொண்ட அரக்கி ஒருத்தி
இழிதசை போன்றே பத்துத்தலையோன் தங்கையாம்
ஜிஹ்வா என்னும் கொடிய அரக்கனை மணந்தே
அவ்வசுரனுடன் வாழ்ந்திட்டாள், இலங்கையிலே! 19

ஒரு சமயம் அடர்ந்த காடொன்று செல்ல நினைத்த அவ்
வரக்கர் தலைவன் இராவணன் அழைத்தே ஜிஹ்வனை
''நானில்லா நேரம் நாட்டை நலமுடன் பேணிக்காத்திடு -
தலைநகரம் இலங்கையையும் உயிர் போல்'' என்றனனே; 20

''அவ்வாறே காத்திடுவேன்'' என இராவணனிடம் சூளுரைத்தே
ஜிஹ்வனும் பொறுப்புணர்ச்சியுடன் திறம்படக் காத்தனனே!
கவனத்துடன் இரவும் பகலும் சிறிதும் சோம்பலின்றியே
கருமமே கண்ணாயினானெனக் கருமத்தில் ஈடுபட்டனனே! 21

உறக்கத்தை வென்றிடுவேன் என்று சபதமெடுத்தே ஜிஹ்வன்
உறக்கமின்றிக் கண்விழித்தான், ஏழு இரவுகள் தொடர்ந்தே!
உறக்க தேவதையோ தன்னை அவமதித்ததாகவே எண்ணிப்
பழிவாங்க எண்ணியதுபோல் தழுவினள் இரக்கமின்றி. 22

உறங்கும் சமயம் இலங்கையைக் காப்பதும் எப்படி எனச்
சிந்தனை அவன் மனதில் எழக் கவலை மிகக் கொண்டு
தன் நாவை நீட்டி மிக நெடியதாகச் செய்துகொண்டே
இலங்கையை அதனுள் கட்டிவைத்து காத்திட்டனனே 23

தன் தீவினைப் பயனே நீண்டு பரந்தது போன்ற நாவில்
இலங்கையைக் கட்டிச் சுருட்டிக் கங்குலில் இட்டனனே;
இதற்கிடையில் இராவணனும் ஆங்கு வந்திடவே
நகர நுழைவாயில் அறியாமல் திகைத்து நின்றனனே; 24

இலங்கையில் உட்புகும்வழி விழைந்த அவ்வரக்கன்
நாவை வெட்டியே உள் நுழைய வழி வகுத்தான்
நாவும் துண்டித்திட அந்நொடியே ஜிஹ்வனும்
வேறு வழியின்றி உயிரற்று கீழே விழுந்தனனே 25

நடந்த நிகழ்ச்சிகளை பின்னர் முறைப்படி கேட்டறிந்தே
புலஸ்தியன் மகன் மனம் மிக வாடி வருந்தினனே;
வேறு வழியின்றி அரக்கர் குலமுறைப்படி இறுதிச்
சடங்குகளைச் செய்திட்டான், தானே தன் கையால். 26

அறியாமலே அநியாயம் செய்திடினும்
இவ்வுலகில் வாழும் எவரையுமே
மனதில் பச்சாதாபத்தை ஏற்படுத்தியே
மிக்க சோகத்தில் மூழ்கிடச் செய்திடுமே. 27

# 6

# சீதையை அபகரித்த கதையும், ஜடாயுவின் மரணக்கதையும்

தன் வினைக்குரிய பயனைத் தன் கணவன் அடைந்ததும்
துணையற்ற இவ்வாழ்க்கை வாழ்வதே வீண் என்றெண்ணியே
தன் மகன் கும்பாசுரன் முகம் காணும் ஆவல் கொண்டே
தன் விருப்பத்தைத் தமயனிடம் எடுத்து உரைத்தாளே! 1

ஐயிருதலையினோய்! தமையனே! நீ அறிவதும் தான் எங்ஙனம்?
கணவனையிழந்த பெண்படும் துக்கமும் துயரமும் தான்
என் மகன் முகம் பார்த்துச் சிறிதே மனத்தாங்கல் மாறி
துக்கத்தைக் களைந்திட மகவுடன் வசிக்க விரும்புகிறேன்; 2

தன் மகனைக் காணல் என்னும் வியாசத்தில் அவளோ
மனதில் பிறிதொரு எண்ணமும் உறுதியாய்க் கொண்டிருந்தாள்;
காமவேகம் மனதில் தலைதூக்கி நின்றிடும் தாசிமனமோ
வேறு ஒருவனைக் கணவனாக ஏற்று வாழவும் விழைந்ததே; 3

நல்லதோர் ஆசைக் கணவனை அலைந்து தேடுகையில்
வந்திட்டாள் அதே கானகத்திற்கு எங்கு காகுத்தன் ராமன்,
மனைவி சீதையுடனும் தம்பி இலக்குவனுடனும் சேர்ந்தே
அமைதியாய் வனவாசம் செய்து காலங்கழித்தனனோ 4

தினகரகுலக் கொழுந்தினைக் கண்டதும் அவள் மனமோ
வெடித்து வெம்பியதம்மா; காமம் பிடித்து உந்திடவே
ஐந்தம்புகொண்டோனின் மலரம்பினால் பீடிக்கப்பட்டாள்;
இராமனிடம் காதல் கொள்ளாதாரும் உளரோ மேதியினில்? 5

தன் மாயையினால் தன்னுருவை முற்றிலும் மாற்றி
அழகிய அணங்கின் உருவம் தாங்கி வந்தாள் அன்றோ?
தேவமாதர் மனமும் கொள்ளை கொள்ளும் அவளோ,
அடைய விரும்பினாள் காமாவேசங்கொண்டே இராமனை! 6

இராமன் மனம் சிறிதும் பேதலிக்கவில்லையே, அந்தோ!
ஒருதார விரதம் காப்பவனன்றோ நம்பிரான்?
கொடிய அரக்கரை பெரும் வியப்பில் ஆழ்த்தியே
தீய அரக்கியர் உத்தம பெண்டிரின் குணமறிவாரோ? 7

பார்த்தாள், நான்கு புறமும் சுற்றி ஒன்றும் புரியாமலே;
கண்டாள், நொடியில், ஓர்புறம் நிற்கும் விதேகன் மகளை;
'ஆஹா! இவளே ராமனின் அசட்டைக்குக் காரணம்', என
நினைத்தது மாத்திரமன்றி, முடிவும் செய்துவிட்டனளே; 8

இவள் உயிருடன் இருக்கும் வரையில்,
ராமன் அன்பை நான் அடைவதும் இயலுமோ?
ஒரே உறையில் இரு கத்திகள் பொருந்துமோ?'
என்று தனக்குள்ளேயே தானே நினைத்தவளாய் 9

அரக்கி உருவம் சடுதியில் ஏற்றுக்கொண்டே அவள்
அதி விரைவுடன் சானகியைக் கொல்ல முயற்சித்தே
சுழற்காற்று வேகத்தில் சீதை மேல் பாய்வதைக்
கண்ணுற்ற இலக்குவன் அதைத் தடுத்திட முயன்றான்; 10

அபலைப் பெண்ணென்று கருதுகிறவனாய் இளையோன்
சுமித்திரை மைந்தன் அவளைக் கொல்ல விரும்பவில்லை;
காதுகளையும் மூக்கினையும் வெட்டி வீழ்த்தியே
அச்சுறுத்தியே மிரட்டியோட்டிட நிச்சயித்தான்; 11

அங்கமிழந்து குரூபியான அவள், மனம் மிக வருந்தி
தன்னுடன்பிறந்த கரதூஷணன் இருவரையும் பாய்ந்தடைந்து,
நடந்த நடப்புகளை எல்லாம் விவரமாக எடுத்துரைக்க,
அவர்களும் நொடிப் பொழுதில் போரிடப் புறப்பட்டனரே! 12

காட்டில் இலக்குவன் ஒருவனோடே இருந்தபோதிலும்
பெரும் படையுடன் திரண்டு வந்த அரக்கர்களைப்
பிறிதொரு சகாயமின்றியே சகோதரனுடன் தனித்திருந்தே
யமனிருப்பிடம் வீரன் விரைவில் அனுப்பிவைத்தனனே! 13

கண்டு வேதனையும் கவலையும் மிகக் கொண்ட சூர்ப்பணகை,
ஓடியே இராவணனாம் பிறிதொரு சகோதரனைச் சென்றடைந்து
ஓலமிட்டாள்; ''நான் ஊனமுற்றவள் ஆனேனே அந்தோ!
காட்டில் வசிக்கும் துறவிவேடம் பூண்டவனால்,'' என்றாள்; 14

''சீதை எனப் பெயருடையாள் அவன் இல்லாளாவாள்;
பார்க்கப் பார்க்கத் தெவிட்டாமல் பார்ப்பவர் கண் கவருபவள்;
படைக்கும் பிரமனோ பாரிலவளைப் படைத்தானே!
அழகு முழுதும் ஓரிடத்தில் திரட்டி வைத்தாற்போல் 15

அழகு தேவதையை அன்புப்பரிசாக உனக்களிக்க எண்ணி
வெகுமதியை உனக்கு அள்ளிவர அணங்கருகில் சென்ற நேரம்;
இளையவன் இலக்குவனோ என்கையினின்றும் பறித்ததன்றி
என்னங்கங்களைச் சீவி ஊனம் செய்விட்டான் 16

ஆதலால் அண்ணனே! இப்பொழுதே நீ விரைந்து சென்று
அழகிய அணங்காம் அவளை அபகரித்து எடுத்து வா;
அவமானம் எனக்கு செய்திட்ட அவனைத் தண்டித்துவிடு
அன்புபூண்டு அரவணைக்கும் பெண்ணை ஏற்ற இராமனை'' 17

தன் சகோதரி மூலம் அழகிய காமவெறிக் கதை கேட்டு
காமசரங்கள் மனதைக்கூர்ந்து துளைக்க இராவணன்,
சீதையைத் தன்மடியில் அமர்த்தி அரவணைக்கும் வழியைத்
தேடும் முயற்சியில் முழுவதும் முற்பட்டானன்றோ? 18

அரக்கர்களில் முதன்மையான மாரீசனை அழைத்தான்;
இராக்கதத் தலைவனாம் இலங்கை மன்னன் இராவணன்,
''அடே! மாரீசா! தங்கமானாக மாற்றுருவம் கொண்டு நீ
ராமனின் குடிலின் அருகாமையை அடைந்து விடு;'' 19

மாயாவிகளில் முதன்மையான அந்த மாரீசன்,
அரக்கர்களில் தலையாயவனும் ஆவான் அன்றோ?
தயக்கமின்றியே பொய் மானுருவம் எடுத்துக் குதித்தே
தோன்றினான் பொன்மானாய் இராமமாடமெதிரிலே! 20

பொன்மான் இவ்வுலகினில் பார்க்கவும் கிடைக்குமோ ஆஹா!
எனினும் சீதைமனம் அதையடைய விருப்பம் கொண்டதே!
இழிஊழ்ப் பயனால் தோல்வி திண்ணம் நெருங்கும் நேரம்,
மனிதன் மதி மயங்கிப் பேதலிப்பது விதியின் கேளிக்கையே! 21

அவளும் தன் கணவனைக் கண்டு ஆசையுடன் கூறினாள்:
''அழகிய பல்வண்ண அதிசய மானைப்பிடித்துத்தா நாதா!''
ஆயினும் அவ்வார்த்தைக்கு அவன் செவி மடுக்கவில்லை;
''அறிந்திடு; அது அரக்கர்களின் மாயச்செயல் என்றறிந்திடு!'' 22

மீண்டும் பிடிவாதத்துடன் பலமுறை வேண்டிடவே-
இராமனும் அவள் விருப்பத்தை நிறைவேற்ற எண்ணி,
அந்தப் புதிர் மானைப் பிடிக்கவே புறப்பட்டான் அந்தோ!
ஆனாலும் அது பிடிபடாமல் தாவிச் சென்றிட்டதே...! 23

வனத்தில் வெகுதூரம் வலிய இழுத்துச் செல்ல
இராமனும் உயிரிழக்கும் அம்பொன்று குறிவைத்திட
அவ்வம்பு உடலில் தைத்திட வேதனையும் மிகுந்திட
''ஆ! சானகி!'' என்று கூக்குரலிட்டே உயிர் நீத்தான்; 24

காய்ச்சின இரும்பெனச் சொற்கள் செவியில் வீழ்ந்திட,
சீதையும் விசனமிகுந்து வேதனை அடைந்தனளே;
நொடியில் இலக்குவனை அவ்விடம் அனுப்பி வைத்தே
அவன் தமையன் உயிர் காத்திட ஆணையிட்டாள்; 25

அத்தருணமதில் துறவி வேடம் பூண்ட அரக்கன்
அங்ஙனமே இலங்கேசுவரன் வந்து சேர்ந்தான், அவ்விடம்
அபலையாய்க் காப்பவரின்றிப் பயந்த சீதையை
அபகரித்தே எடுத்துச் சென்றனனே, இலங்கைநகருக்கு 26

வழி நடுவில் அவள் மாமனின் உயிர் நண்பனாம்,
சடாயு என்னும் கழுகரசன் இவர்களைக் கண்ணுற்று
வயோதிக நிலையடைந்து வலிமையிழந்திடினும்,
விந்தை கொள்ளும்வண்ணம் வழிதடுத்து நிறுத்தினனே; 27

மிகக் கூரிய தன் அலகினால் அப்பறவையரசன்
மிக வேதனை யடையும்படிக் குத்தினானன்றோ?
அவ்விராவணனின் பதிலடியோ கூறிய வாளடிபோல்
அளித்ததே தாங்கவொண்ணா வலியும் வேதனையுமே; 28

திக்குகளாம் எட்டையும் வென்று பெரும் புகழ் கொண்ட
இராவணன் அப்பட்சியரசனின் உயிர் பறிக்க இயலாமல்
போலிப் பெருமையுடன் தற்புகழ்ச்சியைப் பிதற்றிட்டே
''சடாயு! உன் வீரத்தினை எடுத்துப் பகர்ந்திடு'' என்றனன்! 29

''கத்தியினாலோ அல்லது நீ தொடுக்கும் அம்புகளினாலோ
வேறு ஆயுதங்களோ என்னை எதுவும் செய்ய இயலாது;

மூவுலகிலும் என்னைக் கொல்லும் சக்தியுடையவனைக்
காண இயலாது. என் சக்தியின் பெருமை இத்தகையதாகும் 30

சீதை கைவிரலில் அணிந்துள்ள அணிகலனாம் அம்
மகேசனின் மோதிரம் ஒன்றே என்னுயிரை உறிஞ்சவல்லது
வேறெதுவும் என்னுயிரை பிறிக்கவல்லதல்ல மூடா!
உன் போர்க்கருவிகள் எல்லாம் என் முன் வீணானதே!'' 31

பறவையின் வேடிக்கை வார்த்தைகளைச் செவிமடுத்தே
இராவணன் உறக்கத்திலிருந்ததுபோல் எழுந்தனனே;
பிடுங்கியே தீயோன் உடனே சீதையின் கைவிரல் மோதிரத்தை
வேகமாகச் சடாயுவின் மேல் குறிவைத்து அடித்தானன்றோ! 32

அக்கணையாழியினால் அடிபட்டு தன்னுயிர் விட்டனனே
அப்புள்ளரசன் வைதேகியின் கண்ணீருடன் இணைந்தே
அதிதீரனாகத் தன்னுயிர் நீத்த மாவீரன் சடாயுவோ
அடைந்தனனே தன் நற்பயனால் கிட்டிய நல்லுலகை 33

இனகுலவம்சத்து வீரர்கள் இருவரும் இதனிடையில்
தங்கள் குடிலுக்கு விரைவில் திரும்பி வந்துசேர
காணாமல் காரிகையை மனம் மிக நொந்து பதைக்க
அவளைத் தேடும் பணியில் முழுமதியைச் செலுத்தினரே; 34

அக்கானகம் முழுவதும் அலைந்துதேடிச் செல்லுகையில்,
பறவையாம் கழுகரசன் சடாயுவைக் கண்டனரே;
போரிட்டுப் பூதவுடல் உயிரை இழந்த போதிலும்,
அவ்வான்மா இன்னும் உறக்கம் கொள்ளவில்லையே! 35

தீயோன் இராவணன் வலிய முறையில் வந்தே
விதேக ராசன் மகளை இழுத்துச் சென்ற அந்தச்
சேதியைக் கூறிச் சீதையின் மோதிரம் காட்டியே
மண்ணுலகில் மங்கா நன்றிப் புகழ் கொண்டனனே! 36

உயர்க்குணக்கடல் பறவை சடாயுவின் இறுதிச்சடங்கினை
தன்னைச் சார்ந்தவனுக்குச் செய்யும் ஈமக்கடன்போல்
அம்பொன்றைத் தன் வில்லில் தொடுத்து இழுத்துவிட
சிதைத் தீத்தோன்றி கொழுந்து விட்டெரிந்ததன்றோ? 37

மற்றொரு அம்பினால் கழுகின் உடலைத் தூக்கியே
கனிவாக அத்தீயில் அமர்த்திட்டனன், அந்தோ!
உடல் முழுவதும் நன்கு எரிந்திட்ட பின்னரோ
பிறிதொரு பாணத்தினால் தீயை அணைத்தனனே 38

பறவையரசனின் இறுதிச் சடங்கெல்லாம் இவ்விதமே
விநோதமாக செய்து முடித்தான், வில்லாளி இராமன்.
பத்துமுகத்தோனைத் தேடுவதில் முழுமனம் செலுத்தியே
தாசரதி இராமன் தென்திசை நோக்கிச் சென்றனனே. 39

சனகன் மகளைப் பிறிந்த துயரம் தாளாமல் மனம்
சோர்ந்து, மிகவருந்தி, இளைத்து, அமைதியுமிழந்து,
சேர்ந்து நடைநடந்த சிரமமும் வேதனையும் மிகுந்திட,
தசரதகுமாரன் காலத்தைக் கழித்தான், எப்படியோ 40

# 7

# அனுமன்நட்புக் கதை

காட்டுவெளியினில் செல்லும் மார்க்கத்தில் களைப்பு மிக
ஓய்வெடுக்க எண்ணி இராமன் ஓர் மரத்தடியில் அமர்ந்தான்;
காற்றும் அனுகூலமாக தண்மையும் மென்மையும் சேரவீசி
உற்ற சேவகனைப் போல உயர்சேவையும் செய்ததே; 1

மந்த மாருதம் தண்மையும் மென்மையுடனும் வீசிட
களைப்புத்தீர அயர்ந்து உறக்கம் கொண்டானம்மா;
அல்லலுற்றுக் களைத்தயரும் மாந்தருக்கு இவ்வுலகில்
உறக்கமே அமைதியளிக்கும் என்றல்லவோ எண்ணியதே 2

பேருருவம் படைத்த கபிவரன் ஒருவன் அந்நேரம்
எங்கிருந்தோ வந்தடைந்தான், ராமன் உறங்குமிடம்!
முன்பின் கண்டிராத வாலிபர்கள் இருவரையுமே
வனத்திடை கண்டே பெரும் வியப்படைந்தனனே; 3

இளையவன் இலக்குவனோ கையினில் வாளேந்தியே
தமையன் இராமனைக் கவனமுடன் காத்து நின்றான்;
கீழ் நோக்கிய பார்வை கொண்ட அவனுக்கோ
மேலிருந்த குரங்கினைப் பார்க்கவும் இயலாததாயிற்றே; 4

அவர்தம் கவனத்தைத் தம் பக்கம் கவர்ந்திட எண்ணியே
மரக்கிளையில் அமர்ந்த கபியும் கிளையை நன்கு ஆட்டிட,
அரும் விருந்தாக அமைந்த மூவுலக மாந்தர் பார்வைக்கும்
மரத்தடியில் அயர்ந்துறங்கும் இராமனைக் கண்டனனே? 5

கிளையை உலுக்கிடும் அக்குரங்கைக் கண்ட இலக்குவன்
சினம் மிகக் கொண்டு அதட்டியே மிரட்டினானன்றோ?
அம்மரக்கொம்பையும் கிளையையும் மீண்டும் மீண்டும்
ஆட்டினானன்றோ, சிறிதும் அச்சமடையா வானரனும் 6

தண்டனைக் குரியவன் இவன் என ஐயமற மனதிலெண்ணித்
தன் வில்லை எடுத்தான், பூட்டிய அம்புடன் இலக்குவன்;
பாணத்தை வீசி எய்தே கொன்றிடவும் நினைத்தானே;
கிளையில் கூத்தாடும் குரங்கின் சஞ்சலத்தைக் கண்ணுற்றே 7

புன்னகைத்தே கீழிறங்கிய வானரம் வில்லையும் அம்பையும்
பிடுங்கிச் சென்று இலக்குவனது கையிலிருந்தே விரைவில்
மீண்டும் மரமேறியே கபி மனங்களித்தானம்மா!
கிளைகளில் கூத்தாடியே வியப்பும் கொண்டனனே; 8

வானரம் தன் செருக்கினை அடக்க நாணமிகு இலக்குவன்
தமையன் ராமனை உறக்கத்திலிருந்து எழுப்பியே
நடந்த நிகழ்ச்சிகளை விவரமாக எடுத்துக் கூறினனே!
உலகெங்கும் மெச்சும் தம் புயபலத்தை வென்றிடவே 9

இளையவனின் இவ்வசனங்களைச் செவியுற்ற செம்மல்
வியந்து அந்நொடியே தலை நிமிர்ந்து உயரக் கண்ணுற;
ஆங்கு அமர்ந்திருக்கும் அவ்வதிசய வானரம் கண்டு
அதன் சிறப்புக் குறியீட்டு குணங்களையும் உணர்ந்தானே; 10

உள்ளடங்கியுள்ள குணங்கள் யாவையும் கண்டதும்,
களங்கமற அறிந்திட்டதை அறிந்த அம்மிருகம்
மரத்தினடியில் அமர்ந்திருக்கும் அமலன் அண்ணல்
உண்மையில் திருமாலே என அறிந்தான் போலும்! 11

மரத்தினின்றும் உடன் சடுதியில் இறங்கி வந்து
அவரது மலாடிகளைச் சரணடைய விருப்பங்கொண்டு,
அடக்கத்துடன் அவர் முன்னிலையில் வந்து நின்று
அர்ப்பணித்துத் தன்னையே, மொழியலுற்றான்; 12

''நான் உன் சேவகன் ஆவேன் இது முதற்கொண்டு;
என் பெயர் அனுமன்; காற்றின் மைந்தன் ஆவேன்;
உன்னைக் காணும் ஆவல் மிகக் கொண்ட என்னை
ஆணையிட்டே மனம் மிக மகிழச் செய்!'' என்றான் 13

அமுதமன்ன அவனது மெஞ்சொற்களைச் செவிமடுத்தே
தசரத மைந்தனும் இதைப் பருகியே பகர்ந்தனன்;
''எனக்கோர் உதவி செய். இராவணன் எனப் பெயரினன்;
அரக்கன் கொடியோன், அபகரித்தான் என் இல்லாளை, 14

வானர வீரனும், ''ஆம் அப்படியே'' என்றுரைத்து
ஒன்றாகப் பலகாலம் ஒருங்கிணைந்து காட்டினிலே
வசித்தே வளர்ந்த நட்புரிமை திடமாகக் கொண்ட
சுக்ரீவனின் அருகில் அழைத்துச் சென்றான், இராமனை 15

இராமனுக்கும் வானரத்தலைவன் சுக்ரீவனுக்கும் இடையே
உரையாடல் மூலமே தொடர்பும் அமைந்ததம்மா
சேர்க்கையின் வசத்தினால் அமைவதன்றோ உண்மை நட்பு
நாள்பட நாள்பட வலுப்பெற்று ஆழ்ந்ததாகுமன்றோ 16

அந்நட்பின் ஆதாரமாகவே தசரதராமன் கொன்றிட்டான்
வாலியென்னும் வானரனை சுக்ரீவனின் பகைவனை
சீதை மீட்பதற்கான பணியில் உதவியேற்றே மன்னன்
சுக்ரீவன் ராமனுக்கு உதவ உறுதி பூண்டானன்றோ? 17

வலிமை வாய்ந்த வாலி யென்னும் வானரன்
மூவுலகிலும் பரந்த புகழ் பெற்றவனாம்
மூத்த சகோதரனாம் வானர வீரர்களில் முதல்வோனாம்
கொடிய விரோதத்தை அவன்கண் அடைந்தானன்றோ? 18

பழம் பெருங்கதை கொண்டது
அப்பெரும் பகைமைக்குக் காரணம்
ஒருவன் நினைத்தபடி எதுவும் நடப்பதில்லை -
என்பதே இவ்வுலகின் நியதியும் அன்றோ? 19

# 8

# தோரப்புவின் கதை: வாலிவதைக் கதை:

## இலங்கை எரிக்கும் கதை

பண்டொருகாலம் அரக்கர் குலத்தில் பிறந்தான் ஒருவன்;
பிறந்து வளர்ந்ததோ கைலாயம்; பெயரோ நந்தகாலன்;
பொறுப்போ கைலாய மலை வாயிலைக் காத்தலாம்;
பெற்றுப் பணியை, பலகாலம் பேணிக் காத்தனனே 1

காமனை எரித்த முக்கண்ணோன் சிவன் காதலியிடம்[1]
காமவெறிகொண்டான்; கண்டே ஒரு சமயம் நந்தவனமதில்
அவள்தன் மனதை தன்திசை திருப்பி ஈர்த்திட எண்ணி
மலர் எடுத்து மங்கை மீது மயங்கி எறிந்தான் அந்தோ? 2

அக்கொடியவனின் வீறு கண்டு நடுங்கிய அவ்வணங்கோ
அது சமயம் சடுதியில் சிவபெருமானைச் சென்றடைந்து
முறையிட, அது கேட்டு அவன் மேல் சாபமொன்றீந்தான்;
முறைகெட்ட நடத்தை முக்கண்ணனுக்கு முறையாகுமோ? 3

---

[1] சிவபெருமானுக்கு பல பெண்டிர்கள் உள்ளனர் என்பது தாய் ராமாயணக் கதை. அவர்களில் ஏதோ ஒருவரிடம் நந்தகான் மோகம் கொண்டாள்.

நொடியில் கொடிய பெரும் எருமை உருவம் ஏற்றான்
சாபத்தை ஏற்றவன் தரபன் என்னும் பெயருங்கொண்டான்
தன்னுடல் தோன்றிய மகவின் முகக் கமலம் கண்டதும்
தன் சாபம் தீர்ந்து இறப்பான் எனத் தெளிவாய் அறிந்தான் 4

தன் மகவினாலேயே தனக்கு இறப்பு என்னும்
விதி, அவனுக்கு அவ்விதியை திடமாய் விதித்திடவே
ஒவ்வொன்றாக மகவுகள் பிறந்த அத்தருணமே
அனைத்தையும் அவ்வசுரன் அழித்து விட்டனனே! 5

ஆண்டுகள் பல கழிந்தன; ஆழ்ந்த கவலையுடனேயே
மக இறப்பினால் மனத்துயரமுற்ற பெண்ணெருமைகளோ
இனிப்பிறக்கும் மகவின் உயிர் காத்திட எண்ணித்
திண்ணமுடன் தம்மனதில் திட உறுதி பூண்டனரே; 6

ஒரு சமயம் ஓர் பெண்ணெருமை அவ்வசுரன் கருவைத்
தன் வயிற்றில் கௌரவமுடன் தாங்கிடவே எண்ணி
அவ்வரக்கனின் பார்வையிலிருந்து தப்ப எண்ணியவளாய்
அந்தோ! காட்டின் ஒரு குகையில் புகுந்தொளிந்தனளே; 7

ஈன்றெடுத்தாளவள் சக்திவாய்ந்த மகவினை, நாட்கள் செல்ல.
ஈட்டிபோன்ற கணவன் கொடிய வசனங்களைக் கூறி
அக்குகையினிலேயே சேயை அப்படியே அர்ப்பணித்துவிட்டு
அபலையோ அக்குகைவிட்டு அகன்றுவிட்டாள் அம்மா! 8

தரபீதி என்னும் பெயர்கொண்ட அவ்வரக்கன் மகனும்
தந்தையறியாவண்ணம் காட்டினில் அலைந்து திரிந்தான்;
தன் தாயின் இரகசிய வார்த்தைகளை நினைவு கூர்ந்தே
தன் தகப்பனை தானே போருக்கு அழைத்தனனே! 9

போரில் தன் தந்தையை கொன்றுவிட்டதல்லாது
அவ்வீரனோ நேரே ஈசனை வந்தடைந்தான்
வெற்றிகொண்ட மதம்மேலிட போருக்கழைத்தான், சிவனை
வெறிக் கொண்டோர் செய்யத்தயங்கா பணியுமுண்டோ? 10

ஈசனும் 'வாலியிடம் சென்று வெற்றி சூடிவா' என்றே
ஆணையிட்டான்; வாலியே அவன் காலன் என்றறிந்து,
பாதகனும் சண்டையிட, நொடியில் வாலியை யடைந்து
இறுமாப்பில் கண்ணிழந்தவனாய் கைகலக்கக் கோறினான்; 11

போருக்கழைப்பைப் பொறுக்காவாலியும், மிக வெகுண்டு
பெரும் போரிட்டும் அவனை வெல்ல இயலாமல் போகவே,
அவ்வரக்கன் திறன் கண்டு வியந்து திகைத்தவன், அவனை
வெல்லும் சக்திமானும் உண்டோ என ஐயங் கொண்டான் 12

வாலியும் அவ்வெருமையரக்கனை அருகினில் அணுகியே
'மலைக்குகையில் நாளை நாம் போரிடுவோம் வா' என்றனன்;
'ஆம்' என்றே பதிலளித்திட்டான் அவ்வரக்க வீரனும்.
உன் விருப்பம் எதுவோ அது நடக்கற்பாலதென்றான் 13

சுக்ரீவன் என்னும் தன்னுடன்பிறந்தவனை அழைத்து
'குகை வாயிலில் நீ நின்றிடு' என்றாணை யிட்டனனே
'குருதிப் பெருக்கு தாரையாய் வெளிவருவதைக் கண்டு
வெற்றி தோல்வியை நிர்ணயம் செய்து கொள் நீ' என்றான் 14

'கருவண்ண இரத்த பெருக்கினை உண்மையில் கண்டிடில்
இறந்தான் எருமையுருவரக்கன் என்றறிந்திடு;
இதர வண்ண இரத்த தாரை பெருகி வருமேயாகில்
தந்தமையன் வாலி மாண்டான் என்றறிந்திடு' 15

தன்னுடன்பிறந்தோனை அவ்வாறே பணியில் இருத்தி
மறுநாள் குகையில் நுழைந்தான் மாவீரன் வாலி;
அண்ணனின் அம்மொழி அறிந்தேற்றியே தம்பியும்
மலைக்குகை வாயிலில் காவலில் காத்திருந்தானே; 16

காலம் கடந்து சென்றது; ஆனாலும் அப்போரில்
இருவருமே தொடர்ந்து சண்டையில் முனைந்தனர்;
காட்டில் கடுஞ்சினம் கொண்டது போல் மேகங்களும்
இடைவிடாமல் மழையை சோ எனச் சொறிந்ததே 17

இருவரிடை மூண்ட கடும் போரில் இதற்கிடையில்
எருமை அரக்கனை வாலி கொடுங்காலனிடம் அனுப்பிட
அவனது உடலினின்றும் கருவண்ணங்கொண்ட
குருதிப் புனல் கீழ் நோக்கி தாரையாய் பெருகியதே 18

மழைநீர்ப் பெருக்கினில் கலந்த அவ்வரக்கனின்
இரத்த தாரை தன் வண்ணத்தை இழந்துவிட
மனங்குழம்பியே உண்மை உணரமுடியா சுக்ரீவன்;
இறந்தான் தமையன், என்ற முடிவையும் ஏற்றனனே! 19

குகையினின்றும் வெளிவரும் அரக்கனை அதுசமயம்
எதிர்த்துப் போரிடுவதும் தான் எப்படியோ எனக் கலங்கி
அதை நிலையாய்த் தடுத்திடவே எண்ணி அவனும்
பெரும் பாறையினால் குகை வாயிலை மூடினனே; 20

வலுவில் தன்னைப் போருக்கழைத்த அவ்வரக்க வீரனை
கொன்று குகைவாயினின்றும் வெளிவர எண்ணிய வாலி
வாயிலை நோக்கி அதிவிரைவில் வேகத்துடன் ஓடிவர
கண்டான் நுழைவாயில் பாறையினால் அடைக்கப்பட்டதை! 21

பெரும் முயற்சியும் முழுவலிமையும் கொண்டே
வாயிலினின்றும் மலைப்பாறையை அகற்றிவிட்டானே;
வெளிவர பெரும் முயற்சி மேற்கொண்டு எப்படியோ
வெளியே வந்தனனே; இறுதியில் வீரன் குகையினின்றும் 22

தம்பி சுக்ரீவன் பெரும் பாறையைக் கொணர்ந்தே
குகை வாயிலை அடைத்த காரணம் அறிய முயலுகையில்
பிரமைபிடித்தவன் மதி மயங்குவதுபோல் பேதலித்து
கெட்ட எண்ணமும் அவன் மதியில் உதித்ததன்றோ? 23

'என்னரசை அபகரித்து அரசேறும் விருப்பம் உந்த
என்னிறப்பை மகிழ்ச்சியுடன் எதிர்கொண்டஎந்தம்பி
குகையில் மாண்டுவிட வேண்டும் நான் என்னும்
சூழ்ச்சியையும் தன் உள்மனதில் கொண்டுள்ளானே 24

அந்தோ! இவன் பெரும் பாபி! மிகக் கொடிவனுமாவான்;
தன் அண்ணன் மாய்வதையே குறியாய்க் கொண்டிருந்தானே'
இவ்வாறு எண்ணியே மனம் நொந்து கோபக்கனல்
கொழுந்து விட்டெறிந்தது; திடங்கொண்டோன் மனதில் 25

தந்நாட்டின் தலைநகரை தானே வந்தடைந்த வாலி
தன்னுடன் பிறந்த சுக்ரீவனை நாட்டினின்றும் விரட்டிட
சினம் மிகக் கொண்டதால் புத்திமிகப் பேதலித்து
செவிமடுக்க மறுத்திட்டான்; அவன் கூறும் கூற்றினையே 26

கோதிலாச் சுக்ரீவனும் தன் தமயன் விரட்டியடித்திட
கொதித்து மனம் நொந்து கவலை மிகக் கொண்டனனே;
குற்றமற்றவனைத் தண்டனையிடின் உண்மையில்
மனம் அவமானத்தினால் துடிப்பதும் உண்டல்லவோ? 27

சீற்றம் மிகக் கொண்டே அவன் தன் தமயனைக்
கொன்றிட ரகுகுல வீரனை ராமனை வேண்டினனே
காகுத்தனை அண்டியவரைக் காப்பவனை அதிவிரைவில்
வேண்டிட, அவன் வேண்டுகோளை ஏற்றனனே 28

'வாலியைப் போருக்கழை தாமதமின்றியே' என
ஆணையிட்டான் வீரன் இராகவன் சுக்ரீவனையே
'ஆம் அப்படியே' என அவன் வார்த்தையை ஏற்றே
வாலியுடன் போரிடவே நொடியில் வந்தடைந்தனனே 29

இருவருக்கும் நடந்த கடும்போரில் காகுத்தனாம் இராமன்
சுக்ரீவனின் த்மையனை சினமேறும் குணங்கொண்டோனை
இரையாக்கி மரத்தின் பின்நின்றே தன்னம்பொன்றுக்குச்
சுக்ரீவனை இராச்சியத்தில் அரசனாக அமர்த்திட்டானே 30

அண்ணல் செய்த உதவியை மனத்திலே நன்கிருத்தி
விதேகராசன் மகளை மீட்டுத்தரும் பணியை ஏற்று
மன்னன் சுக்ரீவன் தனக்கு முன்னுபகாரம் செய்தவனுக்கு
நன்றிதெரிவிக்க மனதில் தீர்மானங்கொண்டனனே 31

தன்மகனொத்த வாலிமகன் அங்கதனை அழைத்தே
வீரன் சுக்ரீவன் அவன் உதவி கோரி நின்றனனே
தன்னை நீலபதனாம் மற்ற வானரங்களும் வந்து சுற்றி
நின்றிட்டனரே சகாயம் செய்ய தயாராக சடுதியில் 32

பலம் நிறை வீரர்கள் பரந்து அணிவகுத்து நின்றிட
சுக்ரீவமன்னனின் அப்பெரும்சேனை பெருங்கடல் ஒத்ததே
இலங்கையைவென்று வெற்றிவாகை சூடிடவே
கலகல ஓசையுடன் கடற்கரையை அடைந்தானன்றோ? 33

மதியில் சிறந்தோன் மாருதி நொடியில் அடைந்தான்
இலங்கை நகரம் அலைந்தங்கு தேடிக்கண்டு
சீதையின் அடையாள அணிகலனை பெற்று அவளுக்கு
கொடுத்தனன் இராமன் அடையாள கணையாழியை 34

இலங்கையினின்றும் திரும்பிட எண்ணிய வீரன்
கொடிய அரக்கர் தன் வாலில் ஏற்றிய தீக்கொண்டே
அரக்கர்கள் ஹா என்றோலமிட எரித்தான் இலங்கையை
பலியொப்ப நகரம் முழுவதுமே தீக்கிரையாக்கியே 35

நேரே தாசரதி ராமனை நொடிப்பொழுதில் வந்தடைந்தே
நடந்த நிகழ்ச்சிதனை நன்மதியோன் மந்தி எடுத்துரைக்க
வீரர்கள் சுற்றியே உதவக் காத்திருக்கும் அத்தருணம்
விவேகி ராமன் ராவணனை போருக்கழைக்க முனைந்தான். 36

# 9

# ராவணனின் கனவு: ராமன் பாசறைக்கு இரகசிய தூதனுப்பும் கதை

அதிவேகங்கொண்ட வாயுகுமாரன் இலங்கையை எரித்திடினும்
அரக்கன் கர்வங்கொண்டோன் மனவேதனை கொண்டானில்லை
புலஸ்தியவம்ச ராவணன் உலகங்களை வெற்றிகொண்ட
வீரன் இடுக்கண் வந்திடினும் மனவலிமை இழப்பதுண்டோ 1

தலைநகரை நொடிப்பொழுதில் இராக்கத மன்னன் மீண்டும்
தகதகவென பளிச்சிட்டு பொன்னாக பொலித்திட அமைத்தனனே
அதன் காந்தி பன்மடங்கு பெருகும்படி புத்தொளியளித்திட
அச்சமயம் அந்நகர் புடம்போட்ட தங்கம் போலாயிற்றே 2

தன்னொளிநிறை அந்நகர் புத்தொளியில் மேலும் மின்னிட
தேவர்கள் விரும்பும் பல்லின்பங்கள் நிறைந்த இலங்கையை
நுகர்ந்தே அவ்வின்பங்களை ஒப்பனையுடன் அரசாண்டான்
தேவ இயக்கர் உரக அசுர மன்னர்கள் மிகவும் போற்றிட 3

வெகுகாலம் ஆண்டான்; நிம்மதி வெகுகாலமில்லையே
மாறிச்செல்லும் இவ்வுலகில் நிலைத்ததொன்றுண்டோ
உறங்கும்வேளை கனவொன்று கண்டதனால் பதறி
மனமமைதியிழக்க மிக்கவேதனையே ஆட்கொண்டது

கொடுமையாகவே கழுகுகள் இரண்டு சண்டையிடவே
கறுநிற கழுகொன்று வெண்ணிறத்தது பிறிதொன்றென,
கீழ் திசையினின்றும் பறந்துவந்த அவ்வெண்கழுகோ
மேல்திசையினின்றும் வரும் கருங்கழுகை கொன்றதம்மா 5

கையிலேந்திய கொட்டாங்கச்சியில் எண்ணை ஊற்றிட
தன்னையே எண்ணையில் கண்டான் அறிவற்ற மூடன்
தைலத்தில் திரியிடுகையில் கண்டான் தையலொருத்தியை
எங்கிருந்தோ முன்பின்னறியாதவள் அவ்விடம் வந்துசேர 6

கொட்டாங்கச்சியில் திரியிட்டே ஏற்றிட தீயும் பற்றிபெரிய
அத்தீக்கொழுந்தோ நுழைந்தது அவனது உள்ளங்கைகளிலே
உணர்ந்தான் தீப்பற்றி எரியும் எரிச்சலை உடல் முழுதுமே
உடன் படுக்கையினின்றும் எழுந்தானவன் திடுக்கிட்டே 7

இருரம்பமாம் இருகனவுகளால் மிரண்டு அச்சங்கொண்டு
மனது துகளாக துண்டிக்க ஐயப்பாடு வரியாய் வளர்ந்திட
புத்திமான் தந்தம்பியிடம் கனவுகளின் விளைவறிந்திடவே
தன் கனவுபலன் நன்மைதீமை உரைந்திடுகென்றான் 8

கனவுபலனறிந்த விபீடணன் நீதிநெறிகாக்கும் தமயனை
'அண்ணனே! கூறும்கனவுபலனை கவனமாய் கேளுமின்;
அந்தோ! இருகனவுகளுமே இன்னல் இழைப்பனவே
மனங்கல்லாக்கி அக்கெட்டபலன்களை கூறத்துணிகிறேன்' 9

''கருநிறக்கழுகு நீ; வெண்ணிறக்கழுகு அழகன் இராமன்;
வெண்கழுகு கருவண்ணத்தை அழித்தல் உன்னழிவே;
இலங்கையே தேங்காயோடு; நன்கறிந்திடு இதனை
அதன் தைலம் உன்குலம்; தீயால் அழியுமே அண்ணா!'' 10

கனவில் ஓட்டுவிளக்கை ஏற்றுவதாக நீ கண்டமாது
சகோதர! நம்மின்னல்களுக்கெல்லாம் காரணமானவள்
குடிலகோணபுத்தியுடையவள் நம்மன்புச்சகோதரியப்பா
தானே அவ்விளக்கெரிவதற்கு தீ மூட்டிகிறாளன்றோ 11

தன்னுள்ளங்கை எரிவது போல் நீ கண்ணால் கண்ட தீ
உன்முழுஅழிவிற்குக் காரணமான நல்லாள் சனகன்மகள்
அவளை அமைதியுடன் தாசரதியிடம் திருப்பிக்கொடு
அரக்கர் குலத்திற்கும் உனக்கும் நன்மைபயப்பதிதுவே 12

தமையன் நன்மைகோரி வசனங்கள் சிலகூறி மோனமேற்ற
தம்பியிடம் அரக்கர் குலத்தோன் சினம் மிக முகம் சிவக்க
இராவணன் கொடியசொற்பேசி மனம் புண்படுத்தினனே
கயிறருந்தகுடமொப்ப நல்வசனம் ஏற்பனோ மூர்க்கன் 13

''சனகன் மகளைத் திருப்பிக்கொடு என்றுரைத்தாய் அன்றோ
படம்பிடித்துக் காட்டுகிறது அது உன்னிழிமனதை நீ என்
உடன்பிறந்தோன். இராமன் என்னை அழிப்பான் என்கிறாயே
வசிப்பது என்னுடன் ஆனால் ஆதரிப்பதோ பகைவனையா! 14

இராமன் வென்றிட என்பலம் குறைந்ததென்றண்ணினாயோ
திசையெண்மரை வென்று மூவுலகில் புகழ் நாட்டியவன் நான்
அரக்கர்தலைவன் வீரன் உலகப்புகழோங்கும் நானெங்கே?
அரசிழந்து காட்டில் வனவாசம் செய்யும் ராமனும் எங்கே? 15

கொசுபோல் என் காலடியில் தானே வந்து வீழ்பவனை
உள்ளங்கையில் பிடித்து விளையாட்டாகவே அழித்திடுவேன்
காட்டுவாசி தசரதன்மகன் இராமனைப்பற்றி பேசுகிறாயே
பெண்பிரிவில் தவிக்கும் இராமனை காலனிடம் அனுப்புவேன்16

பெயர்தான் விபீடணன்; பிறந்த குலம்தான் அரக்கர்குலம்
உண்மையில் மனவலிமையிழந்தவன் நீ சத்தியமிது
வனவாசி ராமனிடமிருந்து முடிவென்கிறாயே மூவுலகும்
வெற்றிகொள்ளும் தோள்வலிவுடை வீரன் நானன்றோ 17

பகைவனைப்போற்றும் நீ என்னுடன்வாழ தகுதியற்றவன்
இங்கிருந்து தானே சென்றுவிடு; அல்லது நானுன்னை
படைகொண்டு விரட்டியடிப்பேன் இலங்கையை விட்டு
தன்னுடலங்கமாயினும் அழுகிடில் வெட்டிக்களைவதே மேல் 18

தமையனின் தகாதவார்த்தை கேட்டு அமைதியிழந்து கனவில்
கண்டது ஊழினால் உண்மையாய் நடந்திடுமோ எனநோகி
குணப்படுத்தயியலா ரோகியை கைவிட்ட மருத்துவன் போல்
கொழுந்துடன் தீப்பற்றியெரியும் அவ்விடம் விட்டகன்றான் 19

அண்டியவரைக் காக்கும் ராமனை விவேகி சரணடைந்தான்
தமயனின் கொடுங்கூற்றினை ஆங்கவனிடம் தெரிவித்தான்
பக்திபெருக்கெடுத்தோடும் அவன் மலரடியில் தலைவணங்கி
'ஐய! அண்டிய என்னை ஏற்றுக்கொள்' என வேண்டினன் 20

செப்பியதைக்கேட்டு மென்மனங்கொண்ட இராமன் ஏற்றான்
எதிரியின் பக்கமிருந்து வந்திடினும் அன்பாகவே சடுதியில்
இருவருமே இணைபிரியா நண்பராயினர் வெகுகாலம்
நம்பிக்கைக்குப் பாத்திரமாய் வாழ்ந்தனர் மகிழ்ச்சியுடன் 21

அரக்கன் இராவண்னை விட்டொழித்து வந்த விபீடணன்
குரங்குசேனை வீரத்தினை தன்கண்களால் கண்டானில்லை
கவலையிலாழ்ந்தான் அங்கு வந்தவர்களைக் காணும்முன்
உடல்வலிபெற்ற அரக்கர்சேனை எங்கே? தளர் கபிகளெங்கே? 22

இராமனின் பாசறை அடைந்தான்; வானரங்கள் கண்டான்
கண்டு அதிவியப்படைந்து அசந்து நின்றனனே ஆயினும்
அக்கபிகள் வலிமிக்க அரக்கசேனையை வெற்றி கொள்ளுமா
தன்மனத்தெழுந்த ஐயத்தை சுக்ரீவனிடம் வினவினன் 23

''அரக்கர் குலத்தோனுக்குக் காட்டுங்கள் நம்வீரவலிமையை
வீரர்களே! அறியட்டும் இன்று, அறியானிவன் அரிசக்தியை
வலியும் விசையும் அறியானன்றோ! ஐயங்கொண்டுள்ளான்
வீரம் கண்டு நம்பிக்கைகொள்ளட்டும் எதிரில் தன்கண்ணாலே''24

சேனாபதியின் கோதிலாவசனம் கேட்டு கொதித்தெழுந்த கபிகள்
தம்தம் வீரத்தைக் காட்டுவதே தன் மனக்குறிக்கோளாய்கொண்டு
வேரொடு பெருமரங்களையும் மலைப்பாறையும் பெயர்த்து
உள்ளங்கைகளில் எடுத்து வந்தது வீரவியப்பூட்டுவதன்றோ 25

ஆழ்ந்ததிடமுடையோர் சடுதியில் ஆதவனை மறைத்து நிற்க
அப்பெரும் நிழலால் இவ்வுலகமே இருண்டதன்றோ
சில வீரவேகத்தினால் காற்றையே வலிவிழக்கச்செய்ய
மற்றவை சக்தியினால் கடல்நீரை வற்றச்செய்தனவே 26

வியப்பிலாழ்மனத்தோன் அக்காட்சிதனை கண்டு வியந்து
மெய்மறந்து கண்ணால் காண்பது உண்மையென உணர்ந்து
புலஸ்தியகுலத்தோன் சோதரன் மன்னன் சுக்ரீவனைக்கண்டு
மலர்முக இராமனிடம் இணைபிரியா அன்புபூண்டான் 27

இங்கு உங்கள் படைபலம் விரிவுர கண்டதுபோல்
கண்டதில்லை முன்னென்று உறுதியாய் கூறிடுவேன்
இராமன் கபிபடை அரக்கரை எதிர்க்கும் சக்தியுள்ளது
கபிசக்தியினால் இராமன் வெற்றி திண்ணம் 28

நூராய் மரங்கள் பாறைகள் பெயர்த்தெழுந்தொலியோ
உலக முழுவதும் பரவி திசையெட்டிலும் பிரதிபலித்ததே
இந்நாதம் இலங்கையிலும் பரவிச் சென்றதுடன்
இராவணன் செவியில் நுழைந்து வியப்பிலாழ்த்தியதே 29

''ஈதென்னவொலி? எங்கிருந்து வருகிறது? செய்ததும் யார்?
இவ்வுலகிலேற்பட்ட ஒலியா?'' என தம்மக்களை வினவ
''பேரரக்கனே! இராமன் குரங்குப் படைகூட்டமே
இவ்வச்சந்தரும் ஒலி யெழுப்பியது ஆச்சரியமன்றோ'' 30

இயம்பியதைக் கேட்டனன், எதிரியின் உபாயங்கள்
அனைத்துமறிய ஆணையிட்டான் சுக்ரசாரனை
''சென்று நீயும் இராமசேனைத்திறன் அறிவதோடன்றி
வீரர் அவனிடும் கட்டளை நிறைவேற்றுவதும் ஏன்?'' என 31

கழுகு உருவந்தாங்கி நேரே தூதனாக சென்று
ராமனின் பாசறையில் உட்புகுந்தனனே
மாற்றி தன்னுருவம் அங்கு சென்று வானரமாக
மற்றை மந்திகள் தன்னை அறியவொண்ணா நின்றனனே 32

பொருள் நிறைந்த பார்வை கொண்ட விபீடணனது
பார்வையிலிருந்தும் அவன் தப்பவும் தான் முடியுமோ?
கபி உருவமேந்திடினும் யாரவன் என அறிய முனைய
இராவணனின் ஒற்றனவன் என்று நன்கறிந்தனனே 33

விபீடணன் அனுமனிடம் இங்ஙனம் எடுத்துக் கூறி
விவரமாகவே செய்தியை அறிய எண்ணினனே
தன்னுருவம் மாற்றிடவே நிச்சயித்து உடனேயே
வில்வளைவு உருவத்தை விரைவில் ஏற்றனன்; 34

விதானத்தில் சைனியங்கள் புகுதல் வேண்டுமென ஆணையிட
வில்வளைவில் ஒவ்வொருவராகவே புகுந்திடச் செய்தனனே
வெளிக்கிளம்பிச் செல்லுகையில் ஒருவர்பின் ஒருவராக
சுக்ரசாரனை அறியும் உபாயங் கொண்டனனே; 35

இவ்விதி முறையை முழுவதுமாக முறைப்படி ஏற்று
நுட்பமாகவே கவனித்தான்; கபிகளை, அனுமனும்
விவேகியாம் வானரத்தலைவன் நன்கு கண்காணித்தே
எதிரியிடமிருந்து வந்து புகுந்தவனைக் கண்டிடவே 36

மந்தி உருவெடுத்து எதிரி வஞ்சகன் உட்புகுந்திட
முறைப்படி சுக்ரசாரனும் அப்படியே சென்றிட
இமைக்காத கண்களைக் கண்டறிறந்த வீரன்
நிழலற்ற அவன் உருவத்தையும் கண்டறிந்தனனே 37

அரக்கனை அப்படியே பிடித்து நிறுத்த எண்ணி
அடித்தான் சாட்டையால் நன்கு விசையுடன்
அங்கமெல்லாம் சாட்டையடி தழும்பேற உடலில்
அவ்வரக்கனும் நாணிக் குறுகினன் விடுபட்டே 38

இலங்கையரசனை நேரே சென்றடைந்தே
இச்செயலின் ஏற்பட்ட விவரமதை வெளிப்படுத்த
வானரங்களின் வீரதீரங்களை எடுத்துரைத்தனனே
மனதில் கூரம்பு ஆழமாக தைத்தவனாய்! 39

தன் தூதனின் முயற்சி பலனற்றதாய் முடிந்திட
துர்மதி தசமுகன் தானே துறவி வேடம் பூண்டே
இராமனின் பாசறையில் வல்லே நுழைந்திட்டான்
ஆழ்கடலில் பாழ்முதலை வந்து வீழ்ந்தது போல் 40

துறவி வேடம் பூண்டிடினும் அவ்வரக்க மன்னன்
கபடவேடந் தாங்கியவன் என்றறிந்தான் விபீடணன்
மந்திர வலிவினால் சிறிது மௌனம் தாங்கியே துறவி
தன் உள்ளுணர்ச்சியைச் சிறிதும் வெளிக்காட்டாமலே 41

ராமனோ பெருந்துறவியை தன்னெதிரில் கண்டே மகிழ்ந்து
மரியாதையுடன் உபசரித்து முறைப்படி முன்மொழிந்தனனே
முனிவேடம் மனதை வெகுவாகக் கவர்ந்திடவே
உண்மையை உறுதியாய் உடனே உணராமலே 42

'நான் செய்த நல்வினைப் பயனே உங்கள் வருகை
என்னைக் கௌரவிக்கவே ஈண்டு எழுந்தருளினையோ?
துறவிகளைக் காண்பதே பிறவியின் நற்பயனன்றோ?
அவர் வாயுரைக் கேட்பதோ அதனில் சாலச் சிறந்ததே 43

என் நற்பெருமை மேன்மேலும் வளர்ந்தோங்கிடவே
யான் செய்ய வேண்டியதும் என் என அடியேனுக்குக் கூறிடுக
ஆவலுடன் இட்டபணி நிறைவேற்றக் காத்திருக்கிறேன்
நல்லோர் செய்பணி நற்பயன் அளிப்பதன்றோ! 44

இராமனின் மெய்யுரை நன்கு செவிமடுத்தே இராவணனும்
தன் கபட உருவம் வெளிக்காட்டாமலே மொழியலுற்றனனே
'இவ்வுலகில் யான் விரும்புவதும் ஒன்றுமில்லையப்பா!
என்னுடல் உயிர் யாவும் பிறர் நலன் பொருட்டாகுமே! 45

'ஐயிருதலையினோனை இது சமயம் எதிர்த்திட விரும்பி
வானரப்படைகொண்டு போர் தொடுக்க நீ நிச்சயித்தாய்;
என்பதை அறிந்தேன். உனக்கது பொருந்துவதல்ல; அப்பா
இதன் முடிவு, உன் அழிவேயாகும்; இது சத்தியம்' என்றான் 46

'உனக்கிதை எடுத்துக் கூறிடவே வந்தேனப்பா
இராவணத்தீயில் விட்டிலாய் விழுந்துவிடாதே, நீ
மூவுலகும் வெற்றிகொண்ட அரக்கர் தலைவன் எங்கே?
வானரங்கள் சூழ்ந்துவாழும் வனவாசி நீயும் எங்கே? 47

செய்தற்கரிய இச்சாகசச் செயலை அறவே விட்டுவிடு;
உன் சகோதரனுடன் மீண்டும் கானகமே களங்கொள்
விவேகி ஒருபொழுதும் சிந்தியமல் செயல்படான்;
வழியீது உனக்கோ பேரழிவையே விளைவிப்பதாகும்'' 48

மனதிற்கிசையா அக்கொடிய வசனங் கேட்டே
மனம் பொங்கிடினும் மனஅமைதி புறம் காத்தே
கபடநாடக வேடந்தாங்கிய துறவியைக் கண்டே
உதாரராமன் உரிய வார்த்தைகளை உதிர்த்தனனே! 49

'என்மனைவியைக் கீழோன் கடத்திச் சென்றானன்றோ?
கொடிய தண்டனைக் குரியவன் அவன் இது திண்ணம்
அதுவே முதற் காரணம் நான் போருக்குப் புறப்படவும்
வேறு பயனுந்தானுண்டோ இப்பணியேற்றிட? 50

வில்லொன்றை ஏந்தி நான் போர்க்களத்தில் நிற்கையில்
என்னை எதிர்த்து நிற்கும் சக்தியும் உண்டோ அவனுக்கு
கூரம்புகளினால் உடனுக்குடனேயே விளையாட்டாக
அரக்கனின் தலைகளை கொய்திடுவேன் ஒவ்வொன்றாக 51

மேன்மேலும் பேசிப் பயன் தான் என்ன? இவ்விதம்
அவனை முடித்திட முடிவும் செய்துவிட்டேன் நான்
இம்முடிவிலிருந்து மாற்றவும் முடியுமோ என்னை
மலைக்குன்றை காற்றசைக்கவும் இயலுமோ கூறுமின்!'' 52

திடமான பதிலை கேட்டு மனக்கலக்கமடைந்தே
பத்து தலையினோன் மதியிழந்து இலங்கை திரும்பினன்
வேறு வழியையே தேட விழைந்தனனே, சென்றும்;
இராமன் போர் செய்வதைத் தடுத்து நிறுத்திடவே 53

இராமனின் மனதில் சிறிதே கவலை சூழ்ந்தாலும்
திண்ணமிது போருக்குச் செல்லான் வலிவிழந்தே
இச்சிந்தனை மனதில் உந்திட அவன் மனம் மாற்றிட
இராவணன் பிறிதொரு வழியைத் தேட முயன்றனனே! 54

# 10

## பேஞ்ஜகயீ கதை

பண்டொரு காலந்தன்னில் பேஞ்ஜகயீ என்னும்
கொடிய அச்சந்தரும் அரக்கர் அணங்கொருத்தி
இராவணனின் வேண்டுகோளுக்கிணங்கியே அவள்
சனகன் மகளின் உருவெடுத்து சீதையாக மாறினாள் 1

நீரோடையிலே மௌனம் காத்து வந்தாள்
உயிரற்ற சடலமாகவே தன்னைக் காட்டிக் கொண்டு
அந்நீர் நிலயத்தில் ராமனும் நாள்தோறும்
வைகறையில் வந்து நீராடுவதும் வழக்கமன்றோ? 2

மாயையினால் விரும்பிய உருவதாங்கும் அவ்வரக்கி
இறந்தவளாய் சனகனின் மகளாய் நின்றிடக் கண்டு
மனம் நொந்து வேதனையில் மூழ்கிட்டானன்றோ?
நீராட வேண்டி ராமன் வரும் அக்காலைநேரத்தில் 3

தன் அன்புக்குரிய சீதையை இழந்த பின்னரும்
எனக்கிட்ட கடமைகளை செய்ய மனம் ஒப்புமோ
மனம் நொந்து போரினின்றும் பின்வாங்க நிச்சயிப்பான்
தன்னுடல் நீக்கவோ அல்லது வனமதில் வசித்திடவோ 4

பிறரை வஞ்சிப்பதையே குறியாய்க் கொண்ட
அக்கொடிய அரக்கன் அவ்விதமே ஆலோசித்து
அவ்வரக்க அணங்கினை ஐயிரு தலையினோன்
கொடும்பணியிதனை மேற்கொள்ளெனக் கூறினனே 5

அவ்வரக்கனின் சிந்தையும் அப்படியே செயலாகிட
தசரத குமாரனும் தன் காலைக்கடன் முடித்திடவே
நித்தம் நீராடி பணிகளை நியமப்படி செய்திடவே
நதிக் கரையின் மணல்திட்டில் அமைதியாய் வந்தனனே! 6

சனகன் மகளின் உயிரற்ற உடலையே
ஆற்றுவெள்ளம் சீராக அடித்தேந்தி வருகையிலே
கண்ணுற்றுக் கலக்கமடைந்த காகுத்தனும்
மனவலிவிழந்து கேவிக் கண்ணீர் விட்டழுதனனே! 7

நீராடச் சென்ற காகுத்தனை நெடுநேரம் காணாமலே
வல்லே வந்திட்டான் சுமித்திரை மைந்தன் தேடியே
காகுத்தனை கவலைக்கடலில் மூழ்கியதைக் கண்டு
கரை காணா துயரத்தின் எல்லையை அடைந்தான்; 8

நீராடச்சென்ற இராமன் திரும்பாததைக் கண்ணுற்று
கலக்கம் கொண்டு தம்தம் கடமைகளை கைவிட்டு
தங்குமிடங்களையும் விடுத்து எழுந்தோடிவந்தனரே
அரசன் சுக்ரீவனும் வீரன் அனுமனும் அவ்வாறே 9

கவலை மிகுந்திட வெகுநேரம் அலைந்து தேடியே
ஆற்றின் கரையை அடைந்தனர் விரைந்தேகியே
வாடிவதங்கிய சகோதரர்கள் இருவரையும் கண்ணுற்றே
மனமுடைந்து இருவரும் கலக்கம் அடைந்தனரே 10

விவேக சீலனன்றோ அனுமன்? அது சமயம் சீதை
இறந்தாள் என்பதில் ஒருக்காலும் நம்பிக்கை கொள்ளாமல்
சனகன்மகள் மாய்த்துக் கொள்ளாள் தன்னுயிர் என
திண்ணமான அறிவைத் திடமாகக் கொண்டான் 11

தன் தலைவன் பிரிவை அடைந்து அல்லலுற்றபோதிலும்
நாயகன் சந்திப்பில் நம்பிக்கை மனதிலுந்த உயிர்விடாள்
நிலமகளன்றோ? எங்கு செல்லும் அத்திடம் அவளைவிட்டு?
திடத்தை மனதிலிருத்தி வீரத்திருமகளாய் விளங்குவாள்! 12

இவ்வுலக இதரமாந்தர் போன்றவளல்லள் அவள்;
அவ்வாறு நடந்திட மங்கை மனதுந்தான் இசையுமோ?
புயல் காற்றினில் வேறொடு விழும் மரமல்ல அவள்;
மலைத்தொடர் போல் அசைவற்று நிற்பவளன்றோ அவள்! 13

பொய்ப்புறம் பேசுவதில் முதன்மையான மதயீலிகளே
எப்பாவத்தையும் செய்யத் துணிந்தவர்களன்றோ
உயிர் துறந்தவளா சீதை? இது நிகழவும் முடியுமோ?
அக்கருத்தில் மனம் திடங்கொண்டான் கபிவரன் 14

உயிரிழந்த சடலம் சனகன் மகளினுடையதா
இதர காரிகையினதா அல்லது அரக்கர் மாந்தரதா?
இதைச் சோதிக்க எண்ணியே சடலத்தை எரித்திடவே
மூட்டிய தீ கொழுந்து விட்டெறிந்தது வீறுடன் அதில் 15

உயிரற்ற அச்சடலத்தை உடனேயே எறிந்திட்டான்
தீவிரவேகம் உந்திட தீயினில் வாயுகுமாரன்
உடன் அதனின்றும் கதறி விண்ணில் எழுந்தோடினளே
அசுரப் பெண்ணொருத்தி அலங்கோல உருவத்துடன் 16

நிமிர்ச்சியுடன் நேரே மேலெழுந்து செல்லும் பெண்ணை
கூந்தலைப் பிடித்திழுத்து பூமியில் இருத்தினனே
எல்லாமறிந்த இராமனின் முன்னிழுத்து வந்து அவளை
நிறுத்தி அர்ப்பணித்தான் வலிவுடை வானரன் 17

இராமரைத் தேடும் பணியில் மனங்கொண்டே
விபீடணன் வந்து சேர்ந்தான் அதுகாலையிலே
அவ்வரக்கக் கன்னிகையைக் கண்டு அறிந்தே
பேச்சில் சிறந்தவன் பகர்ந்தனன் உட்கருத்தினை 18

வெறுக்கத்தக்க இக்காரிகை என்பெண்ணே அறிவேனிவளை
பெயரோ பேஞ்ஜகயீ கொடிய உருவமுடையாள் ஐய!
போற்றத்தக்கதொரு உயருருமெடுத்தே இவள்
சனகன்மகள் மரித்தாளென வஞ்சித்தாள் என்னையே 19

வெறுக்கத்தக்க கொடிய இழிகருமத்தை ஏற்றே
நீர்மை போல் மனவலிவுடன் செய்து முடித்தனளே
என் மகள் ஆயினும் கொலை தண்டனைக் குறியவள்
உற்ற நண்பனாக உன்னை ஏற்ற நானுரைக்கிறேன் 20

''உயிர்த்தோழனே! உற்ற உயர் நண்பனின் மகளை
ஒருபொழுதும் உயிர் கொல்லேன் அல்லன் இது சத்தியம்
உன் மகள் என் மகளே அன்றோ ஆதலின்
என்னாலும் அவள் முதற்குற்றம் மன்னிக்கத் தக்கதே!' 21

திடமான ஆதரவு வசனங்களை மொழிந்த பின்னர்
அனுமனைப் பார்த்து உரைத்தான் இராமச்சந்திரனும்
'இவளை இலங்கைக்கு ஆதரவுடன் அழைத்துச் சென்றே
சடுதியில் மீண்டும் திரும்பி வா நீ' எனப்பகர்ந்தனனே 22

அப்படியே ஆம் என்றுரைத்தே தலைவன் வார்த்தை
உயர்ந்தோனான கபித்திலகம் பொறுமையுடன் கேட்டு
விரைவில் அந்நொடியே சம்மதித்து அனுமனும் சென்றனன்
அப்பெண்ணை அழைத்திட்டு ஆகாயம் வழியே 23

இராமனின் நல்வார்த்தைகளை இதயத்திலிருத்தியே
வானரனும் பேஞ்ஜகயீயை உடன் அழைத்துச் சென்றிட
வியன் வழிகடந்து விசையுடன் விரைகையில்
மலரம்பினன் பாணத்திற்கு தன் மனதை இறையாக்கினனே 24

பெண் பொன் தாமரை இலக்குமி யாவையுமே
எவருடைய மனமானைக் கவருவதும் இல்லை!
விவேகிகளை ஈர்க்கும் திடமும் இவைகளிடம்
உண்டென்பதும் பொய்யில்லா வாசகமன்றோ 25

காமனின் ஈர்ப்பை பேசவும் கூடுமோ
அனுமனையும் தன் வயப்படுத்தினவன் அன்றோ
தனிமையில் அவள் அன்பைப் பெறவே
அரக்க மாதரை அணுகி கெஞ்சி வேண்டினனன்றோ 26

கொடி தானே மரத்தை நாடுவது திண்ணமே
நதி கடலை நாடிச் செல்வதும் நியதியன்றோ
காண வியப்பொன்றும் இல்லையே இதில்
சீவன் பரமனைத் தானே சென்றடையுமன்றோ 27

அழகினும் அழகிய அனுமனை ஆனந்தமாய்
அரவணைத்துத் தன்னை அர்பணிக்க முயன்றாள்
மனத்தில் பிறந்தோனிடம் தன் மனமிழந்தே அவள்
மகிழ்ச்சி வெள்ளத்தில் மூழ்கினள் அவன் சேர்க்கையால் 28

சீவனும் பரமனும் ஒருங்கிணைய உலகப்
படைப்பின் வித்தே வெளித் தோன்றுவதுபோல்
அரக்கியும் கபியும் ஒரு சேர்ந்த இணைப்பினால்
புதிய பயங்கர உருவமொன்று உருவாகியதாங்கே 29

அசுரபத் என்னும் பெயராம் அரக்கன் உரிய காலத்தில்
வானர அரக்கி சேர்க்கையால் வெளித்தோன்றினான்
ஐயிரு தலையினோன் வாழும் இலங்கையில் அரக்கரிடை
அனுமன் மைந்தன் பாலியப்பருவம் கழித்தனனே 30

வானரவீரன் இலங்கை நகரடைந்து மகிழ்ந்திருந்து
விபீடணன் மகள் நட்புப் பூண்டே தலைவர் ஆணையால்
தன் காதலியை இலங்கையில் மாண்புடன் இருத்தியே
மீண்டும் சடுதியில் அங்கிருந்து திரும்பி வந்தனனே 31

பிரிவினால் மனமுடைந்து அல்லல் மிகக் கொண்டே
பேஞ்ஜகயீயை விட்டகன்ற அம்மாவீரனும்
இராமனை நினைத்து அவர்தம் அடியினைப் பற்றியே
நொடிப்பொழுதினில் தலைவனை வந்தடைந்தனனே 32

இராமனைப் போரின்றி வெல்ல எடுத்த முயற்சிகளோ
பலனின்றி விழல்நீராய் வீணாக முடியவே
அவன் மனமாற்றத்திற்கெடுத்த உக்திகள் யாவும்
தோல்வி யடையவே செய்வதொன்று மறியாமல் 33

அரக்க அரசனாம் இலங்கை அரசன்
பத்துமுகனும் போருக்குப் புறப்படவே
இராமரும் வீர வானரப்படை சூழ்ந்திட
பயங்கர போருக்குப் புறப்படானன்றோ? 34

# 11

# நீலன் அனுமன் கலகக் கதை

மூவுலகிலும் புகழ் பரவிப் பிரசித்தி பெற்ற நகரமாம்
இலங்கையை ராவணன் தலைநகராகக் கொண்டே
செல்வங்கள் நிறைந்து பகைவரும் அணுகவொண்ணா
நாற்புறமும் கடல் சூழ்ந்து வெகு அழகியதாய் 1

நெருங்குதலோ எளிதல்ல அந்நகரோ பரந்து
வளைந்த கடற் பரப்பைக் கொண்டதாய் விளங்கியதே
இலங்கையை அடைவதெப்படியோ என்ற கவலையில்
அமைதி கொண்டானில்லை, வீரன் இராமன் 2

அணையிட்டே அதன் வழி கடந்தே செல்வோம்
என் படைகள் கைதேர்ந்தவர்களே இப்பணியில்
என்றெண்ணியே தான் ஆணையிட்டான் அனுமனை
வானரன் நீலபத் என்னும் பெயர் கொண்டோனையும் 3

'கட்டியே சடுதியில் அணை உங்களிருவராலும்
கடப்பேன் இக்கடலை என் சேனை சூழவே
இப்பணியில் சிறந்தோர் நீங்கள் இருவரே என
இப்பாலமமைய ஏத்துகிறேன் உங்களிருவரையுமே' 4

'ஆஹா! ஆச்சரியம் எங்களை ஆணையிட்டாயே ஐயா!
நினைந்து எங்கள் திறமையைக் கண்டல்லவா
இராமன் பணியன்று வேறேதும் உயர்ந்ததாகுமோ
இப்பணியில் ஈடுபட்டோம் பேறுபெற்றோம் யாம் 5

இராமனுரை கேட்ட காலை நல்ல திறமைசாலிகளோ
இராமனாணையை உடனேற்றனர் நீத்து மற்ற பலபணி
நந்நடத்தையும் நல்திறமையும் கொண்ட நற்சான்றோர்
நற்பணியில் நன்கீடுபடுவர் ஒருமுகமனத்துடனேயே 6

தத்தம் பணியை இன்னதென்று ஏற்றனர்
பாறைகளைப் பெயர்த்தெறிய ஒருவன் கடலினிடையே
அவைகளை பரப்பும் பணியை ஏற்றான் மற்றையன்
சேதுகட்டும் கருமத்தில் கண்ணாயினர் கபிச்செல்வங்கள் 7

கற்களையும் பாறைகளையும் பெயர்த்தெடுத்து வந்து
கடலின் கண் வீசி எறிந்தான் தீரவீரன் நீலபத் அன்றோ.
சமைத்தான் சரிவர மலைக்குன்று மணிகளை
காலம் கெடாமலேயே கபியரசன் அனுமனுமே 8

முன்னொரு சமயம் என் முன்னோர் ஜம்புவிடம்
முறைகேடாக நடந்தான் அஞ்சனை மைந்தன்
அவனை ஈண்டு பழிவாங்கிட எண்ணியே
கோபங்கொண்டனன் வீரம் மிக்கோன் நீலபத் 9

ஆதலால் அதிவிசையுடன் மலைப்பாறைகளை வீசி
அனுமனை அடக்கவே எண்ணி தவிக்க விட்டான்
வாயுமைந்தனோ திறமையுடன் மிக முயன்றும்
பரப்ப இயலாதவனாய் திகைத்து நின்றனனே 10

அலைகடலில் சேதுகட்ட மலைப் பாறைகளை
எடுத்தெறிய வீரனுக்கும் எடுக்குமோ காலமத்தனை
ஆனால் நீர்க்கடலில் அவைகளை சீர்ப்படுத்தி
அமைப்பதற்கெடுத்ததே மிகநேரம் உண்மையிது 11

இருவரும் இருவேலைகளில் இவ்வாறே ஈடுபட
இராகவனும் இந்நிலையில் இட்டானே ஆணையிதை
நீலபத்தினுடையவும் வாயுமைந்தனுடையவும்
இயல்பாக பணிமாற்றம் இருவரும் உடனெடுக்க 12

நீலபத் முன் செய்த பணியைத் தொடர்ந்தே
அஞ்சனை மைந்தன் பின்னர் ஏற்றனனே
நீலபத் ஏற்றான் உடனுக்குடனேயே
அஞ்சனை மைந்தனியற்றிய பணி அதுபோலவே 13

பணிமாறிட வெகுண்டு சீற்றம் கொண்ட அனுமன்
அவமானம் மேலிட கொதித்தெழுந்தான் அன்றோ
பழிக்குப்பழி வாங்கவே மனத்தில் திடம் கொண்டு
தீட்டினான் ஒருபாயம் உரிய நேரம் நோக்கியே 14

தன் உரோமக்கால் ஒவ்வொன்றிலும் அனுமன்
பாறைக் கல் ஒன்றைக் கட்டிக் கொணர்ந்தே
வஞ்சகம் தீர்க்க எடுத்த உபாயத்தினை ஒட்டியே
பாறைகளை உடன் எறிந்தானே இடைவெளியின்றி 15

மிக்க வேகத்துடனும் திறனுடன் முயன்ற போழ்தும்
பாறைகளை பதம் செய்து அடுக்க முடியா நீலன்
மிகவே வெட்கி குறுகி தலை குனிந்து நாணினன்
பொறுத்தற்பாலதன்றோ உயர்ந்தோரின் மானக்கேடு? 16

இருவரின் போட்டியைக் கண்டு பொறுக்காமல்
இரவிகுலக்கோன் மனவேதனை மிக அடைந்து
இருவருக்கும் ஒத்த தண்டனை அளிக்க விரும்பினன்
பணியில் மானக்கேடு தாங்கவொண்ணாதவனாய் 17

நீலனுக்கும் வாயுகுமாரனுக்கும் அமைந்த
போட்டி இருவருக்குமிடையே யாயினும்
மற்ற சேனாவீரர்களிடம் பரவிடுமோ எனக்
கவலை மிகக் கொண்டான் கௌசல்யாராமன் 18

சேனாதிபதிகளே தங்களுக்குள் சண்டையிட
விரோதியாக எண்ணி இருவரும் போட்டியிட
பின்பற்றிடின் சேனைகள் என்செய்வதென்றே
மேன்மக்கள் வழி பின்பற்றல் உகந்ததன்றோ? 19

சேனைத் தலைவர்களே வழி மீறி எடுத்துக்
சென்று காட்டும் பாதையும் விளக்கிடாமலே
இராமனும் அவர்களைத் தண்டித்தனனே
தண்டனைக் குரியவர் இவரென்று எண்ணியே 20

'பெரும் பண்பாளன் நீலன் கிஷ்கிந்தை சென்றே
சுக்ரீவனின் பொருட்டு இராச்சியம் ஆண்டிட
நீதி நெறி முறைப்படி நன்கு அரசை ஆண்டிட
அதுவே சாலச் சிறந்ததாகும்' என்றனனே 21

சைனியங்களை போருக்கழைத்துச் செல்ல
தேவைகளை முழுவதும் முறைப்படி செய்தே
வேண்டிய முயற்சிகளை திறம்பட எடுத்திடுக
முற்றிலும் பிசகாமல் பணிகளை கடமையாகவே 22

புத்திசாலியான வாயுகுமாரனோ அங்ஙனமே
புதிய சேதுவைக் கட்டி ஏழேதினங்களில்
இலங்கைக்கு சேனையை அழைத்துச் செல்ல
முயற்சி செய்தே முடித்தலும் வேண்டுமே!'' 23

தலைவனின் ஆணையை தலையில் தாங்கியே
தந்நகரம் சென்றான் நீலனும் இவ்வாறே
தன் பணியிலீடுபட்டே காற்றின் மைந்தனும்
பாலத்தை முடிக்கவே முயன்றனன் அன்றோ 24

# 12

## சுவர்ணமத்ஸ்யை கதை
## பொன்மீன் கதை

மந்திசேனை உதவியினால் நூறாய் பாறைகள் வந்துவீழ
மறையச் செய்தனன் கடல்நீரை முழுவதும் பரப்பியே; 1

உருவலிகொண்ட எண்ணிலா மந்திகள் நாளொன்றில்
மலைக்குன்றுகளை எடுத்தெறிந்து கடலைமறைத்திட்டன 2

மறுதினம் வைகறையில் பணியை முடிக்க வந்தவனோ
திகைத்தனனே காணாமல் கற்பாறைகளை கடலினில்! 3

'இது என்ன மாயை? எங்கு சென்றன கற்பாறைகள்?'
என மிக்க வியப்பில் ஆழ்ந்தான்; அந்தோ ஓரிரவிலேயே 4

சிந்தையில் மிக ஆழ்ந்து சோகமடைந்தானே அன்றி,
உண்மையறியமல் பணியைத் துவங்கினன் மீண்டும் 5

பணி செய்வதே என்கடன் என்றவனால் ஏவப்பட்ட கபிகள்
கடலினில் சோம்பலின்றியே பாறைகளை எடுத்தெறிந்தனவே 6

காலையில் எழுந்து கண்டான் மறுநாள்
கடலின் கரையிலிருந்த வானரர்கள்
வீதி சமைக்க வேகமாக எறிந்த கற்பாறைகளை
வியப்பினில் ஆழ்ந்தனர் ஆங்கவை காணாமலே 7

இங்கிருந்து கற்பாறைகளை அகற்றுபவன் எவன்?
என்பதை உறுதியாய் அறியும் திறனற்றவனாய்
அனுமனும் உடனே இவ்விதமே நிச்சியித்தான்
இரவு நேரம் கடற்கரையில் காவலிருந்திடவே 8

பகலில் கடலில் பாறைகள் போட்டிட
இரவில் இறங்கி இழுத்துச் செல்வதும் எங்கே?
எவர்கள் எதற்காக இதைச் செய்கிறார்கள்?'
சூட்சுமத்தை அறிந்திடவே சிந்தனையிலாழ்ந்தனனே! 9

பகல் முழுவதும் நாம் எடுத்த முயற்சியெல்லாம்
வீணாகிவிட்டதே இரவில்; அது கண்டு வருந்தி
இப்படியாயின் சேது கட்டவும் தான் முடியுமோ?
பயனற்ற செயல் தான் நிகழ்கின்றதன்றோ? 10

'ஊணுறக்கமின்றியே விழிப்புணர்ச்சியுடனிருந்தே
கடற்கரையருகினில் காத்திருப்பேன் இரவுமுழுவதுமே
யாரோ? அவர் யாரோ? எனக் கண்டு கொண்டு
இரகசியத்தை முறியடித்து அறிவேன் உண்மையை!' 11

சபதமிதனையே மனதில் திடமாய் ஏற்று
கடலின் கரைதன்னில் காத்துக் கிடந்தனனே;
களைத்திடினும் நித்திரையை நீத்தானம்மா
பெரியோர் செய்பணியில் ஈடுபட்டிருப்பவரன்றோ! 12

மிக்க வேண்டப்படினும் சுகம் விரும்புபவரோ
மனதிற்கொவ்வா இடுக்கண் பல நேரிடினும்
மேற்கொண்ட பணி முடிக்கவே முற்படுவர்
பெரியோர் பணிமுடியும் முன் ஓய்வும்கொள்வரோ! 13

இரவு நெருங்கவும் அந்தி மாலை நேரம் நீங்கியே
சோம்பலின்றியே வானரனும் வந்து சேர்ந்திடவே
திசையெங்கும் முழுமதியொளி நன்கு பரந்திட
நாற்புறமும் அமைதி சூழ்ந்திருக்கும் நேரம் 14

அலைகடல் கரைதனை அடைந்தான் அனுமனும்
மணியாழிநடுவில் நிகழ்வதை அறிய வேண்டி
கணைக்கடல் புகுந்து காத்திருந்தே உண்மையில்
விந்தையான காட்சி காண விழைந்தான் அன்றோ 15

முன் நிகழ்ந்ததுமில்லை; முன் கேட்டதுமில்லை; அங்கு,
நிகழ்ந்ததோர் காட்சி வியப்பில் வீழ்த்தியதே!
மனத்தகத்து எண்ணவும் அரியதாகும் காட்சி
ஒன்றைத் தன் கண்ணெதிரில் கண்டான், கபிரவன் 16

ஆண்மீன்களும், பெண்மீன்களும், ஆயிரக்கணக்கில்
ஆண்டு வந்தே பெரிய பாறைகளை எடுத்ததே
ஆங்கு கண்டனனே அம்மீன்களின் பேரரசியை
அவளது கட்டளைக்கடிபணிந்தே பணியிலிறங்கினரே 17

சுவர்ணமத்ஸ்யை என்னும் பெயர் கொண்டவளாம்
தசமுகனின் புதல்வியாம் அவள் நன்மதி பெற்றவள்
உடலின் அரைபாகம் மீனுருவம் கொண்டிருந்தாளம்மா!
உடலின் மறுபாதியோ மானுட உருவம் தாங்கிநின்றாள்! 18

வானரத்தலைவன் அனுமனும் அவளை அணுகியே
வினவிட 'கற்பாறைகளை அகற்றிடும் காரணத்தை
ஆணையிட்டவன் யார்? பாறைகளை அபகரித்துச் செல்ல'
மீன்கள் எடுத்துச் செல்லும் காரணமும் தான் என்னே?' 19

'இவர்கள் செய்வதும் என்னாணைப்படியே தான்;
நான் செய்வதும் என் தகப்பன் ஆணைக்கடிபணிந்தே;
இட்ட கட்டளையைச் செய்வதும் என் கடனன்றோ?
பெரியோரிடும் கட்டளையை விசாரித்தலும் முறையோ? 20

நீர்மாக்கடல் மேல் சேது அமைந்திடிலோ
உன் சேனையும் எளிதில் இலங்கையை அடையுமே
அது தடுக்கவே அதை எதிர்க்கும் காரணமாய்
எந்தையும் ஏவினன் என்னை இப்பணியில்; 21

ஆயிரக்கணக்கில் மீன்கள் சேனையாகத் திரண்டு
பெரு முயற்சியுடன் கடலில் நீ எறிந்த
கற்பாறைகளை மெதுமெதுவாக அகற்றியே
உன் முயற்சியை முறியடிக்கச் செய்கிறேன்; 22

உயர்ந்தெழும் அலைகடலில் கற்பாறைகள் வந்துவிழ,
உயர்ந்தெழும் பேரொலி எந்தையின் செவிகளில் விழ,
புத்திமான் அன்றோ? அதையறிந்து, அப்பொழுதே
திரைப்பரப்பில் சேது அமைப்பை அறிந்து கொண்டான்! 23

தகுந்த நேரத்திலேயே தடை செய்யும் பொருட்டுச்
சிந்தனையில் சிறந்தவன் என்னைப் பணியில் ஏவினனே!
'மகளே' என்றன்புடன் விளித்து என்னை, 'நீ போய்
வெற்றியுடன் பகைவரின் பணியை பலனற்றதாக்கிடு' என 24

'உயர் குலத்தோனே' ஆம் அப்படியே ஆகுக' என்று
உயர் பணியில் இறங்கினேன்; சடுதியில் வந்து நான்
தன்னைத்தான் காப்பதே தலையாய கடமை என்று
தடங்கலின்றி ஏற்றேன் உண்மையை உணர்ந்தே' 25

பொன்மீன் கன்னி கூறிமுடித்து மௌனமானாள்
எடுத்துக் கூறிய அவள் வார்ததை கேட்ட அனுமன்
அழகுடன் தொடுத்த நல்வசனங்களைக் கேட்டே
அதற்குத் தக்க பதிலுரைக்கவும் உடன் துவங்கினனே; 26

'பொன்மீனரசியே! சொல்நயமும் விளக்கமும் பொருந்திய
உன் கூற்றோ பொருளமுதம் நிறைந்து மனங்கவரினும்
அழகு சொற்றொடருடன் அமைந்த உயர் வசனத்திற்கான
எதிர் பதிலுரைக்கிறேன், நான்; கேள்மின்; என்றனனே! 27

"உரையாடலினால் அமைவதே உயர்ந்த உறவாகும்!
கடலில் நம்முரையின்னேற்பட்டதும் உறவேயன்றோ?
உனக்கு நன்மைபயக்கும் யுக்தியையே தேவீ!
உன் நண்பனான நானுரைக்கிறேன் கேளாயோ 28

இயற்கையில் அமைவதே பகுத்தறிந்தாராயும் திறன்;
இதனால் உலகுவாழ் மக்களை வஞ்சித்தலும் முறையோ?
இப்படியே விவேகமின்றி நடந்திடுவோமாகில்
மானுடனும் மிருகமும் வேறுபடுவதும் எப்படியோ?" 29

"நீ உரைத்ததும் உண்மையே; ஐயமேதும் உண்டோ?
உலகில் பெரியோரே மரியாதைக் குறியவராவர்;
ஆனால் உசிதமற்ற உரைகளை ஏற்பதும் சரியல்லவே!
அதை முழுதும் பொறுத்தலும் ஒரு பொழுதும் சரியல்ல; 30

ராமன் மனைவியை அபகரித்துச் சென்றானன்றோ,
உந்தை, நல்வேடந்தாங்கியே உயர்ந்த கற்பரசியை?
தகாததும் விதிக்கு புறம்பானதும், வெறுக்கத்தக்கதும்
தானே செய்தான். அவன் செயல் இழிவானதன்றோ? 31

மூவுலகிலும் அவனுடைய நிலைமை புகழற்றதே!
பிறன் மனையாளை ஏமாற்றி கபடமாய் எடுத்துச் செல்ல
மறைநூல்கள் நன்கோதியும் கெட்டவனே ஆவான்!
கட்டுப்பாடற்றவனை மறைகள் புனிதமாக்குவதில்லையே! 32

தீவழி கடைபிடிப்பவன் தந்தந்தையே ஆகிடினும்
உதறித் தள்ளுவதே உகந்த செயலும் ஆகுமன்றோ?
விவேகிகளில் முதல்வியாக விளங்கும் உனக்கு
உகந்த வழி உதவிசெய்வதை கைவிடுவதேயாகும்!'' 33

அனுமனின் சொற்பொருளை நன்கு உணர்ந்திடினும்,
அவள் சிந்தனையில் ஆழ்ந்தாள்; நொடிகள் சில
வாடைக் காற்றில் திசையறியா படகு நட்டாற்றில்
ஆடுவது போலவே, மனம் இங்குமங்கும் அலைந்தது 34

சிறிது சிந்தனையிலாழ்ந்த சுவர்ண மத்ஸ்யை
பெருமூச்செறிந்து பதிலுரைத்தாள், கபியைக் கண்டு
'நல்லோய்! நீ உரைப்பதும் முற்றிலும் உண்மையே
உன்னிடம் எனக்கு கருத்து வேறுபாடுமில்லையே 35

பெண் எனக்கு பெண்ணை வஞ்சித்து அபகரித்தல்
பலவந்தமாக ஒருபொழுதும் பொறுக்கவொண்ணாததே!
கணவனைப் பிரிந்திருத்தல் கவலைக்கிடமானதன்றோ?
கணவனே பெண்ணின் கடவுளாவார் அன்றோ? 36

அறிவு பேதலித்தே அன்புத் தந்தையின் வார்த்தைக்கு
அடங்கியே உதவி செய்ய முற்பட்டேன் நான்;
ஆனால் இன்று உன் உயர் மென்வசனம் கேட்டே,
என்னை மதிமயக்கமும் நீங்கி விட்டகன்றதன்றோ? 37

இனி உன் வசனத்திற்குக் கட்டுப்பட்டு உள்ளேன் ஐயா!
என்னுடன் உள்ளோர் எவருமே இனி இது செய்யார்!
நீ இட்ட இடத்திலேயே பாறைகள் இருக்குமன்றோ?
நல்லோய்! உன் மனவிருப்பம் நன்கு நிறைவுறுவதாகுக'' 38

கபிக்குலவீரனுக்கு மனமகிழ்ச்சி தரும் நல்
வார்த்தைகள் கூறியே அமைதியானாள் அவள்
சுவர்ணமத்ஸ்யையும் வீரனான அனுமனும்
ஒருவரையொருவர் கண்ணுறக் கண்டனரே 39

கண்ணுற்ற அவ்விருவர்க்குமிடையே மனதில்
காதல் அரும்பித் துளிர் வெளிவந்ததன்றோ
இயற்கையில் மானுடர் மனஉணர்ச்சி கொள்வதொப்ப
மன்மத வசத்தினால் மையல் கொண்டனரன்றோ? 40

வஜ்ரவலிவுடையோன்; அழகு வடிவுடையோன்;
வலிவும் வீரமுமே வடிவெடுத்தான்; போலுள்ளான்!
நாவண்மையுடையோன்; பிறருக்குதவும் குணமுடையோன்;
மேன்மக்கள் குணம் படைத்தோன், மூவுலகிற்சிறந்தோன் 41

கண்டதுமே மனதைக் கொள்ளை கொண்டுவிட்டானே!
என் செய்வேன்? அந்தோ செய்வதறியாமல் திகைக்கிறேன்
மனம் கலங்கி நொகி தயங்கி குழப்பமடைந் அவளும்
கொடி மரத்தைப்போல் வீரனை அணுக முயற்சித்தாள் 42

அழகும் நற்பண்பும் படைத்தவன் மனஉணர்ச்சியை
அறியேனே! என் போன்ற உணர்ச்சி கொண்டானா?
அவனை மலரம்பினன் பாணங்கள் துளைக்கவில்லையா?
பேதை நான் என் மனத்தை அடக்கவும் அறியேனே! 43

கவலையுற்று பற்பல எண்ண அலைகள் மனதில் மோத
அபலை செய்வதறியாது மோனநிலை ஏற்றாளே!
அழகிய அங்க வடிவு கொண்ட வாயுகுமாரனும்
அசைவற்று நின்றான்; கொள்ளை கொண்டவளைக் கண்டு 44

உண்மையழகு நிந்னைதக் குரியதல்ல உலகில்
வண்ணமோ பொன்னனையது; குரலோ குயிலினினியது;
கூந்தலின் பாங்கோ கருவண்டுகளின் வரிசையொப்ப
உத்தமப்பெண் எவரைத்தான் ஈர்க்காமலும் இருப்பாளோ? 45

புன்முறுவலுடன் தீரனை நோக்கிய அவளைக் கண்டு
பேசாமலே வாய்திறந்து சொல்லரசன் வீரனும் அந்தோ
தன் ஆழ்மனத்தில் காமபாணம் ஏற்படுத்திய விரணத்தைப்
பெருமூச்செறிந்தே மதனதாபத்தை வெளிப்படுத்தினனே 46

இருவருமே நிறைவு பெறா அன்புடையவர்களாய்
இணைந்து அணைத்து அந்தரங்க சுகமனுபவியாமல்
வாயுகுமாரனும் அழகிய சுவர்ணமத்ஸ்யை இருவருமே
காமனின் மலரம்பினால் மிகவும் பீடிக்கப்பட்டனரே 47

வார்த்தையினால் வருணிக்கவொண்ணா மகிழ்ச்சியடைந்து
தம்மிருகண்ணிமை மூடியே மனவலிமை இழந்தவர்களாய்
அன்பு வேகமுந்த சிவந்த கன்னமுடையவர்களாய்
தழுவியே மார்பணைக்க, முத்தமிட்டு மகிழ்ந்தனரே 48

மெய்ச்சிலிர்ப்பு அன்பின் ஆழத்தை வெளிக்காட்ட
இருவருமே மலரம்பினன் சாரிகையினால் அடிக்கப்பட்டு,
ஒருவரையொருவர் நீண்ட கைகளால் தழுவியணைக்க,
வியர்வைத்துளி கருவண்டுவரிபோல் முடியில் ஒளிவீசியதே! 49

அன்புக்களிப்பில் ஒருவரையொருவர்த் தழுவி முத்தமிட
ரதிமன்மதாவேசத்தினால் விசித்திர நிலையடைந்து
மகிழ்ச்சிக் கடலலைகள் மோதிட நன்கு ஆடிப்பாடி
மலரம்பினன் ஈர்ப்பிலேயே முழு இரவைக் கழித்தனரே! 50

இரவு முழுவதும் இவ்வாறு இன்பவேட்கையில் மூழ்கி
கடலினின்றும் குதித்தெழுந்து தன்னிருப்பிடம் வந்தனனே 51

அழகி சுவர்ணமத்ஸ்யையும் அச்சமுத்திரத்தை விட்டகன்று
இலங்கையில் தன்னிருப்பிடம் சேர்ந்து அமைதி அடைந்தாள், 52

இலங்கை திரும்பும் முன்னரே ஈன்றெடுத்தாள் ஒரு மகனை;
மச்சானு என்ற பெயருடன் அனுமனைத்தந்தையாகியே 53

தந்தை சினங்கொள்வரே என்ற அச்சம் மேலிட
தன் மகவை கடற்கரையிலிட்டாள் அழகு அணங்கு! 54

காலம் கடக்க மச்சானு என்னும் பெயர் கொண்டே அவன்
வளர்ந்தான் வண்மையுடன் தன் தகப்பனைப் போன்றே! 55

# 13

# மையராபன் கதை

சுவர்ணமத்ஸ்யையின் இடர்பாடுகளை
நல்யுக்திகளினால் அனுமனும் களைந்திட்டே
கடல் மத்தியில் உரிய நேரத்தில் அனுமன்
தலைமையில் ராமசைனியம் சேது கட்டியதன்றோ 1

பாலம் வழியாகக் கடல் கடந்தே எளிதில்
சைனியங்களும் இலங்கைநகர் வந்தடைந்தே
நாற்புறமும் சூழ்ந்திடத் தசானனின் மனதில்
கவலைக்கனல் கொழுந்து விட்டு வளர்ந்ததே 2

''போரிடாமலே எனக்கு வெற்றி கிட்டிடில்
பூரணமாகுமே என் மனவிருப்பமும், எப்படியோ
இராமனைக் கொன்று வெற்றி பெற விரும்பும் நான் -
என் எல்லா முயற்சியும் ஒருமுகப்படுத்துவேன்,'' 3

இவ்வெண்ணத்தையே மனதில் தீர்மானித்து கொண்டு
அதற்குவந்த செயலைத் தேட முயன்றானன்றோ?
அப்பணியைச் செயல்படுத்தும் திறமை பெற்றவனைச்
சிந்தித்துத் தேடி மையராபனைக் கண்டெடுத்தான் 4

பண்டு பாதாளதேசத்தை ஆண்டு வந்தனனே
மையராபன் என்னும் பெயர்கொண்ட அவ்வரக்கன்
தன் ஆளுமையால், உலகை வெற்றிகொண்டே
அஜயன் வெல்லமுடியாதவன் எனப்பெயர் பெற்றான் 5

ஐயிருதலையினோனை உற்ற நண்பனாகக் கொண்டே
அவன் வார்த்தைகளைச் சட்டமாக ஏற்றானன்றோ
தன் நண்பனின் நன்மையில் கண்ணும் கருத்துமாய்
எந்நேரமும் அவன் தந்பணியில் முனைந்திருந்தனனே 6

வீரமிக்க அவனை, இராவணன் அழைத்தே,
''என் பகைவனாம் இராமனை நீ கொன்றுவிடு;
என் தம்பியும் நண்பனும் போன்றவன் நீயன்றோ?
அதுவே காரணம் இப்பணியில் ஏவினேன் உன்னை!'' 7

தன்னுயிர்த் தோழனின் வார்த்தைகள் கேட்டே
மிக்க நம்பிக்கை கொண்டே புகுந்திட்டான் அவ்விடம்
சடுதியில் எவ்விடம் தன் படைவீரர்களுடன் சூழ்ந்து
ரகுவம்ச வீரனாம் இராமன் ஆயத்தமாயிருந்தனனோ 8

ராமரின் படைவீரர் தங்கும் விடுதியில்
நுழைந்தனன், பாதாள அரசனும் புறப்பட்டே
குழுமியோர் மேல் சூரணப் பொடியைத் தூவிடவே,
துயிலில் ஆழ்ந்தனரே, திடீரென வீரர்கள் யாவருமே 9

யாவரையும் இவ்விடம் நல்லுறக்கத்தில் ஆழ்ந்திடவே,
நேரே இராமனை அடைந்து அவனைத் தூக்கியே
கொன்றிடும் உபாயத்தில் இழுத்துச் சென்றனன்,
தன்னிடமாம் பாதாள உலகிற்கு எளிதாகவே 10

பாதாளத்திற்கு வந்து சேர்ந்த அந்நேரத்தில்
காய்ச்சிய எண்ணையை ஊற்றிட விரும்பினன்;
இராமனும் தன்நினைவு தப்பி மயங்கி வீழ்ந்திட்டே
'காப்பவர் ஒருவருமின்றிக் காலனின் சரணடைவான்' 11

இப்படிப் பல நினைத்து திட்டமான முடிவெடுத்தே
இராமனை எடுத்துச் செல்லும் நேரத்தில்
பொடியின் வேகம் குறைய இராமனின் படையினர்
நித்திரையிலிருந்து எழுந்து நாற்புறமும் கண்டனர் 12

இராமனை அவ்விடம் காணாமல் அவர்கள்
மனம் பேதலிக்க மிக்க கவலையும் கொண்டனர்;
நன்மதியோன் ராமன் எங்கு செல்லக்கூடும் என
பலவிதமாய்த் தன் மனத்திலேயே எண்ணினரே; 13

நாம் இங்கு படுத்திருக்கையிலேயே இங்கிருந்து
இராமனாம் ஆதவன் அஸ்தமித்ததும் எப்படியோ?
எங்கே யார் அழைத்துச் சென்றிருப்பார்களென்று
தம்மதியினால் தீர்மானிக்கப் இயலாமம் பேதலித்தனர்; 14

இவர்கள் மத்தியில் விபீடணன் ஒருவனே
தெய்வீக ஆற்றலினால் பளிங்குபோல் தெளிந்தே
ஓரரிய மற்ற எவரும் கேட்டும் கண்டுமிராத
காட்சியை இப்பூவுலகில் கண்டறிந்தனன் அன்றோ! 15

தந்தெய்வீக ஆற்றலினால் கண்டு உணர்ந்தனனே
இராவணனின் பின்பிறந்தோன் விபீடணனும் ஆங்கே
இராமன் எங்குள்ளான்? எடுத்துச் சென்றவர் யார்?
சென்ற காரணமும் அவன் நிலையும்தானென்னென்று 16

இராமர் சேனையிலுள்ளோர் தமக்குள்ளேயே
இராமனைப் பற்றி பலவிதமாக ஆலோசித்துக் கலங்க
அன்னாரின் அடங்கா அல்லலை அகற்ற எண்ணியே
அள்ளி வீசினான் வார்த்தைகள் சில அன்றோ! 17

"திடமனங்கொண்டோன் இராமன் மனம் மயங்கச் செய்து
அபகரித்துச் சென்றான் பேதமையால், நானறிவேனிதை
வீழ்த்தியேயன்றோ ஆழுக்கறத்தில் நம்மையெல்லாம்
விழித்திருக்கையில் ராமனை அசைக்கவும் முடியுமோ 18

பாதாள உலகின்கண் வாழ் மையராபன் என்னும்
இராவணனின் தோழன் அந்நாட்டரசன் ஆவான்;
மருட்சியால் மயக்கிச் கடத்திச் சென்றிட்டனனே;
நன்மதியும் அடக்கமும் கொண்ட இராமனை; 19

வசப்படுத்தியே இங்கு நம்மையெல்லாம் நித்திரையில்
வசமாக இழுத்துச் சென்றான், அவனை தன்தேசத்திற்கே
சென்ற ரகுவீரனை கொன்று வீழ்த்துவதற்குள் நாம்
சென்றடைதலும் மிக முக்கியமன்றோ அத்தேசத்தை 20

அனுமன் ஒருவனே வச்சிரவலியுடையோன் நம்மிடை
அவ்விடத்திற்கு சடுதியில் செல்லும் சக்தியுடையோன்;
அரக்கனின் தலைநகரமாம் பாதாள உலகம்
அவ்வுறைவிடமோ அரவுகள் நிறைந்ததன்றோ 21

ஆதலினால் கவலையை விட்டு இராமனைக் காக்க,
அவன் இப்பொழுதே புறப்பட்டுச் செல்லட்டுமாங்கே!
செய்யும் கடமைகளில் மிகவும் தலையாய ஒன்று
இதுவே முதற்கடமையாய் முடிவில் அமைகிறதன்றோ?'' 22

விபீடணனின் பொருள்நிறைந்த வசனம் செவிமடுத்தே
இராமனின் மலரடிசேவையில் தன்னை அர்ப்பணித்தே
வாயுகுமாரன் உடன் விண்ணிடைக் குதித்தெழுந்தே
பாதாள உலகிற்குச் சென்றான் புறப்பட்டே 23

மேற்கொண்ட பணியை திடத்துடன் மனதிலிருத்தி
இலாப நஷ்டங்களையும் மனதில் தெளிவுடன் உணர்ந்தே
வீரமிக்க பெரியோர் பணியை ஒருமனதுடன் ஏற்றே
இலக்கை அடைவதையே குறியாய்க் கொள்கின்றனரே! 24

திட்பம் நிறை பணியை வீரன் அனுமன் துரிதமாய் ஏற்றிட
வழி நடுவில் கண்டனனே நீர்நிலையம் ஒன்றினையே
வட்ட வடிவில் மிகப் பெரிதாக மலர்ந்திருக்கும்
தாமரை மலர்கள் பல நிறைந்து காட்சியளித்ததன்றோ? 25

அத்தாமரை மலர்களில் ஒன்றை வேறுடன் பிடுங்கியே
அத்தண்டினுள் தானே புகுந்து கொண்டானம்மா!
அதனுள் ஊடுருவிச் செல்லும் அவ்வானரோத்தமன்,
பிறிதொரு நீர் நிலையத்தைக் கண்டானங்கே 26

மாவீரன் மகன் மச்சானு என்னும் பெயர்கொண்டவனால்
அம்மடுவோ நன்கு கண்காணிக்கப் பட்டதே. அவனோ,
சுவர்ணமத்ஸ்யை என்னும் பெயர் கொண்டவளிடம்
முன்னம் உறவு கொண்டதால் பிறந்தவன் அன்றோ? 27

பிள்ளைப் பேறால் மகிழ்ச்சி கொண்டிடினும் அஞ்சியே
ஈன்ற பொழுதே தன் குழவியை அவ்வணங்கோ
பத்துமுகத்தோனின் சினக்கனலிலிருந்து தப்ப எண்ணி
கடற்கரையினில் மிதக்க விட்டாள் கவலையின்றியே! 28

நீராழிக்கரையினில் நித்தம் விளையாடிக் களிக்கும்
அக்குழந்தையை முன்னரே தன் கனவில் கண்ட
பாதாள மன்னன் பார்த்த அத்தருணம் களிப்புடன்
தந்நாட்டிற்கு எடுத்துச் செல்ல மனங்கொண்டான்; 29

உவகை பொங்க செல்லக்குழவியைத் தன்மகனாக ஏற்று
பற்பல வசதிகளுடன் நன்கு வளர்த்திட்டானன்றோ.
நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாகவே
வேலுடன் கூடிய முருகனையொப்ப வளர்ந்தது அம்மகவு 30

இளமையும் வளமையும் பொங்கும் அங்கழகன்
தன் தந்தையை முன் காணாக் காரணமதால்
இப்பொழுது இந்நிலையில் சந்திக்க இருவருமே
தங்களது தந்தைமகன் உறவை அறியவில்லையே! 31

அன்றலர்ந்த தாமரைகளின் அழகில் மயங்கியே
ஏரிநீரின் பிரவாகத்தில் கண்டு களித்திருக்கையில்
வியப்பில் ஆழ்ந்தான் விசித்திரமான ஒருருவம்;
கண்ணில் படாமல் உலவுவதைக் அறிந்தே 32

'இவன் இங்கு வரும் காரணம் தான் என்ன?
எவரைக் காண வந்தானோ?' மனதில் இவ்வெண்ணம் குமுற
பொருள் பதிந்த பார்வையுடன் நுணுக்கமாய் நோக்கிடினும்
தெளிவாக அறிய வொண்ணாமல் ஐயத்தில் ஆழ்ந்தான்; 33

'முன்பின் அறியா ஏதோ ஒருவன் எங்கிருந்தோ
ஈண்டு வந்த இவன் சண்டையிடத் தகுந்தவனே எனத்
தீர்மானமாக எண்ணி மச்சானுவும் தன்னுடன்
போரிடவே வந்தானென்று எண்ணி எதிர்த்து நின்றனனே! 34

அவனைப் புல்லெனச் சிறிதும் மதியாமல் அனுமனோ,
மேற்கொண்டு தன் பாதையில் செல்ல முயற்சித்தகாலை-
காலால் மிதிபட்ட விஷப்பாம்பு போன்றே
மச்சானுவும் ஆங்கவனை எதிர்த்து நின்றனனே! 35

வீரரதி வீரன் மச்சானுவும் அவ்விதம் தடுக்கப்பட,
அச்சந்தரும் கொடிய போரே மூண்டதாங்கே!
வண்மையும் திண்மையும் வீரமுமாக எல்லாமே
இருவரிடையும் ஒருபோல் அமைந்திருந்ததன்றோ 36

தந்தையும் மகனும் முனைந்த மல்யுத்தத்தில்
ஒருவரையொருவர் உயிர்நிலைகளில் அடித்து நொறுக்கிட,
கைகளினால் கோபத்துடன் குத்தி தவிக்க விட்டே
துடைகளில் கை முட்டியினால் ஓங்கி அடித்தனரே 37

வெகுநேரம் கடும் போர் புரிந்தும் கூட ஒருவருமே
சளைக்காமல் இருவரின் யுத்தம் வலுத்திடக் கண்டு
வியப்பில் ஆழ்ந்தனர் இருவருமே அன்றோ
சண்டையை நிறுத்தி வீரர்கள் நொடிப்பொழுதே 38

அது சமயம் ஒருவரையொருவர் உற்றுநோக்கிட,
இருவரும் ஒரு போன்ற உருவங்கொண்டதைக் காண
மீண்டும் அதிகவியப்பில் ஆழ்ந்தே போர் நிறுத்தி,
உரையாடலைத் துவங்கினர் தங்களிடையே 39

தாமரை நிறைந்த தடாகத்தைக் காக்கும்
அவ்வாலிபனைக் கண்டே, அனுமனும் கேட்டனனே:
''யார் நீ? எவன் மைந்தன் நீ? உனது இவ்வலிமையை
பரந்த பாரில் எங்குமே நான் கண்டதில்லையே! 40

என் கை முட்டிக்குத்தே ஒப்பற்ற பலம் கொண்டது;
அதைத் தாங்கும் வலி கொண்டவர் உளரோ உலகில்?
காற்றைப் போல் கடுஞ்சக்தி பெற்றவன் இவன் என
உலகில் புகழ் பரவப்பெற்றவனும் நானன்றோ 41

என் விசைகொண்டு உந்திய அழுத்தமான அடிகளை
தாங்கும் சக்தி கொண்டவர்களில் முதல்வன் நீயே!
என்னைப் பலமாக அடித்து நொறுக்கியவர்களிலும்
முதலிடத்தில் திகழ்பவனும் நீயே ஆகும் அன்றோ'' 42

அவன் தன் புகழ் பேச்சை சீராய் செவிமடுத்தே
மச்சானுவோ பரிகசித்துக் கொண்டே பதிலுரைத்தனன்;
''வீரியம் நிறைந்தவர்களில் உயர்ந்தவனாக இருக்கலாம் நீ;
ஆனால் என்னிடம் உன் வலிவு எதுவும் பலிக்காதே! 43

உலகமே போற்றும் வாயுவின் மைந்தனாம் அனுமனின்
மைந்தன் நான் என்பதை ஐயமுற அறிந்து கொள்;
தசானனின் மகளாம் சுவர்ணமத்ஸயை என்பவளின்,
வயிற்றில் வந்தவன் நான் என்பதையும் நன்கறிந்திடுக; 44

உலகில் என்னெதிரில் நிற்கும் சக்திகொண்டவனும் உண்டோ?
வலிவுடையோர்களில் சிறந்தவீரனும் என்னெதிரில் நிற்கவும்
திறனற்றவன். ஆயினும் நீ யார் என்னை எதிர்த்திட?
வாயுதசானன் என இருவர் வலிமை பெற்றவன் நான்!'' 45

தன் மகனின் தீர்மானமான சொல்லமிழ்தம் கேட்ட அனுமன்
மனம் களித்து மெய் சிலிர்த்து தன் மகிழ்ச்சியை வெளிக்காட்ட
மனவிருப்பம் யாவும் நிறைந்தவனாக அகமகிழ்ந்து,
மகிழ்ச்சியுடன் மச்சானுவைக் கண்டு மொழியலுற்றனனே: 46

'ஆஹா! வீரனே என் மகன் நீ நானுந்தை மைந்தா!
இவ்வுலகில் அனுமன் என்னும் பெயர் கொண்டவன் நானே.
உன்னைக் கண்ட இன்பம் உள்ளம் நிறைத்திடவே,
உன்னை அரவணைக்கும் இன்பத்தை நல்கிடு எனக்கே! 47

நற்புதல்வனைப் பெற்றவர்களில் பொலிந்தேனப்பா!
உன்னைப் போன்ற நற்குணக்கடலை மகனாயடைந்தே,
விருப்பங்கள் உடன் அளிக்கும் கல்பதருவைப் போல்,
உன்னைப் பார்த்துப் மனநிறைவு கொண்டேனே! 48

தன் ஆன்மாவே மகனாய் அவதரிப்பதைக் கேட்டுள்ளேன்!
அதுபோல் என்னுயிர் ஆன்மாவே நீயாவாய் வீரனே!
என்னிடமுள்ள வலிமையும் வீரமும் உன்னிடமும் உள்ளது!
என் போன்ற உருவும் குணமும் கொண்டுள்ளனையே! 49

கடவுளே! உன் மாயையை அறிவதும் தான் எப்படி?
திடீரென இணைத்து வைத்தாயே எங்களிருவரையும்
என்று வார்த்தை சிறிது பகர்ந்தே அமைந்தான் அமைதியில்
கலங்கிய கண்களில் ஆனந்தக் கண்ணீர் ஆறாய்ப் பெருகிட 50

நின்றவன் உண்மை முழுவதும் அறிந்து மச்சானுவும்
'தன் அன்புத்தந்தை வாயுமைந்தன் இவன்' என்றறிந்து
வேண்டாமலே தனக்குத் தந்தையைக் காணும் பலனளித்த
விதியைப் பலவாறு புகழ்ந்தான், பொங்கும் மகிழ்ச்சியுடனே. 51

எந்த இரு தோள்களால் கொடுத்த கை முட்டியடி
தாங்கவொண்ணா வேதனையும் வலியும் அளித்ததோ
அவ்விருகைகளினாலேயே 'கழுத்தை நெறிக்கும் தழுவலை
ஏற்றுக் கொள் எந்தை;' என இறுகத் தழுவினனே! 52

ஆசானின் அடிமலர்களை நன்கு பிடித்துணர்ந்தே
தன் தவறு முழுவதும் மன்னிக்க வேண்டினன் அன்றோ?
ஆற்றலறியா தவறினால் பெரியோரைச் சிறியோர்
தகாதமுறையில் பல செயல்களையும் செய்கின்றனரே! 53

வணங்கியவனை வானரவீரன் விரைவில் பிடித்துயர்த்தி
வீரர்களில் முதல்வோனை உச்சி முகர்ந்தான் அம்மா!'
அன்புடன் செல்வ மகனை காதல் ததும்பி வெம்பி உருகி
மீண்டும் அன்புடன் தழுவி மகிழ்ச்சிக்கடலில் மூழ்கினான்! 54

நாணம் மிக தலை வணங்கி மிக்க அடக்கத்துடன்,
தான் அறியாமலிழைத்த தவறை உணர்ந்துருகியே
எதிர்பாராமல் ஏற்பட்ட தந்தையின் சந்திப்பை
நினைந்து தாள் வணங்கி அரவணைத்தனனே! 55

நொடிகள் சில நகர்ந்தன; நொந்தமனம் கசிந்தே
தந்தை தனயன் சந்திப்பிலே அன்புடன் அம்மா!
உணர்ச்சி பொங்கியே மனவேகம் சிறிது அமைதியடைய,
'எந்தை!' என்றே தந்தந்தையை விளிக்கலுற்றனன் 56

'காததூரம் கடந்து இவ்விடம் தாங்கள் வந்தடைந்த
காரணம் என்னவோ? எந்தை! எடுத்துரைப்பீர்' என வினவ
'விரும்பி முடிக்க ஏற்ற பணியும் தான் என்னவோ?
உங்களைப் போன்றவர்க்கு இயலாத பணியுமுண்டோ!' 57

கேட்டனன், தன் மகனின் மகிழ்ச்சி பொங்கும் வசனங்களை;
கூறினன், தன் வருகைக்குக் காரணம் முழுதுமே முறையாக;
'எடுத்தனன், இராமனைத் தேடும் பணியினையே நான்;
வந்தனன், இப்பாதாள தேச அரசனைக் கண்டிடவே 58

அதற்குரிய வழியை விளம்புவாய் வீரனே!
அவனை அடைவதற்குரிய, உபாயமும் விரைந்தே;
இப்பணியில் தாமதம் ஏற்படின் இனி ஏற்படும்
அபாயத்தைத் தாங்கும் சக்தி என்னிடமில்லையே! 59

மொழிந்த மொழிதனை கேட்ட மச்சானுவும்
திடமனம் கொண்டிடினும் கவலையில் ஆழ்ந்தனன்;
செய்யத் தக்கது இது; தகாது இது என ஐயமுற
முடிவு செய்யும் திறனையும் இழந்தானன்றோ? 60

'உரிய உபாயந்தனை உணர்திடுவேனாகில்
மையராபனுக்குத் துரோகம் செய்தவனாவேன்;
மைந்தனாகவே என்னை கருணையும் அன்பும் பொங்க
பால்மணம் மாறாப் பருவம் முதல் வளர்த்தானன்றோ 61

உரிய வழியை எடுத்துரைக்காவிடில் அதுவும்தான்
மகன் தந்தைக்காற்றும் அறமும் ஆகுமோ?
நன்றியறிதல் ஆகுமோ என்னன்புத் தந்தையிடம்
என் பிறப்பிற்கே காரணமானவர் அன்றோ அவர்! 62

இக்கட்டான இந்நேரத்தில் இயற்றவேண்டியது ஏது?
இயம்பவேண்டியுதும் எது? என தீர ஆலோசித்தலே உகந்தது
அறநெறி வழுவா வண்ணம் அமையவேண்டும்
நானெடுக்கும் முடிவும் என சிந்தனையிலாழ்ந்தான் 63

இவ்வண்ணம் நிகழ்ந்தவண்ணம் இனி அறநெறி பிறழா
முடிவை நோக்கியே அவனும் சிந்தனையிலாழ்ந்தான்;
பேச்சுத் திறன் பெற்றவன் சொல்வல்லான் குறுகிய
தெள்ளத்தெளிந்த வார்த்தைகளை அள்ளித் தெளித்தனனே; 64

'இவ்வழியை தேடிவந்த தாங்கள் இனியும்
இவ்வழியே மேற்கொண்டு செல்ல இயலாதோ?'
விளம்பிய இவ்வசனங்களின் இங்கிதத்தை யறிந்தே
அனுமனும் அதன் உட்பொருளை உணர்ந்தனனே 65

அன்புகலந்த பார்வையைத் தன் மகன் மேல் அள்ளி வீசியே
தாமரைத் தண்டெடுத்தே அதன் உட்புகுந்தான் கபிவரன் 66

# 14

# மையராபனின் கதை

## (தொடர்ச்சி)

யாத்திரையை மேற்கொண்டு தொடங்கிய அனுமனும்
வீரியத்துடன் பாதி வழி கடந்தே செல்லுகையில்
திடீரெனத் தோன்றியதே அவன் வழி மறித்திட்டே
தீக்குழம்புடன் எரியும் மா பெரும் மலையொன்று 1

வியக்கும்படிவேகமாக உயரக் கிளம்பி நின்ற
மலைக்குன்றைக் கண்டு மனங்கலங்கா கபிவரன்
மாவீரத்துடன் எதிர்த்து நின்றான், புல்லென எண்ணியே
மானுட உருவந்தாங்கிய மலையே பிறிதொன்றென 2

பணியதனைக் கெடுக்க வந்திட்ட பகைவனின்
பணி ஈதென்று எண்ணி நகைத்திட்டான் அவ்வீரனும்!
காரியத்தில் கண்ணுற்று மமதை கொள்ளாமல் மீண்டும்
கடந்து செல்லும் தம்பணியில் ஈடுபட்டான் வாயுமைந்தன் 3

தன் வழியைக் கடந்தே விசையுடன் சென்றிடத்
தடைபட்டதம்மா, வழி வெளித்தோன்றியதாலே!
குமுறும் கருமுகில் கூட்டமொத்த மிகப்பெரிய
பிளிறொன்று எங்கிருந்தோ பகைவனாக வந்ததன்றோ? 4

வெகு முயற்சியுடன் அதை எதிர்த்திடவே எண்ணி
வேகமாக ஒரு முட்டியடி விட்டானன்றோ அந்நொடி
வாயு மைந்தனோ வாயு வேகத்தினிலேயே அவனை
வானுலகமாம் யமனிடம் அனுப்பி வைத்தான் அன்றோ 5

அனுப்பிவிட்டே அவனை, நொடியில் காலனின் இருப்பிடம்
அதி வேகமாக விசையுடன் உந்திச் சென்ற அனுமனை
எங்கிருந்தோ விசையுடன் வெளிவந்து சூழ்ந்ததம்மா
கொத்து கொத்தாய்க் கொசுக்கள் கருமேகக் கும்பலொத்தே! 6

கடுஞ்சுழற் காற்றொப்பவும் காரிருள் சூழ் கங்குலொப்பவும்
அச்சந்தரும் கொடும் விபத்தொப்பவும் வந்தெதிர்த்தே
உடல் முழுவதும் ரணங்களின் வேதனை மிகப் பரவியும்
உறுதிகொண்டோன் மனஉறுதி இழக்கவில்லையே 7

வந்தெதிர்த்தே அவனை கூட்டமாக துன்புறுத்திடினும்
வலிவிழந்திடனும் உடல் உள்ளம் தளரவில்லை, கபிவரனோ
சில நொடிகள் தன் பார்வையை இழந்தான் அம்மா!
நீசர் சேவையால் விவேகம் சிறிதிழப்பது போல் 8

அடரிருள்சூழ் இடமதனில் விளக்கொளியின்றியே
ஒன்றும் காணக்கிடைக்காமல் தவித்தான், சிறிதே
நீண்ட தன்னிரு கைகளை இங்குமங்கும் வீசியே
நீர்நிறை ஊற்றினைப்போல் அலையச் செய்தான்; 9

கோடிக்கணக்காய் இருந்த கொசுக்களைத் தன்னிரு
கைகளினால் பிடித்தே நசுக்கித் தேய்த்தான் அந்தோ!
கணப்பொழுதினிலே முகிற்கூட்டத்தைக் கலைக்கும்
காற்றொப்ப கொன்றிட்டான், அக்கொசுக்கூட்டத்தை 10

கொன்று மீண்டும் உதித்தெழும் கதிரவனைப்போல்
தொடர்ந்து விசைபெற்று வேகமாய்த் விரைந்திட
குறுகிய நேரத்திலேயே அவ்வீரனாம் அனுமனும்
பாதாள உலகத்தைப் பாய்ந்தடைந்தனனே 11

வந்தடைந்த அந்நொடியில் அங்கே கண்டானே
பாதாள உலகில் கண்ணீருடன் கதறி அழும் அணங்கை
கதறி அலறிப்பிதற்றிப் புலம்பி அவள் செய்யும் ஒலி
மனதில் கருணையை சுனையென பெருகவிட்டதன்றோ 12

கதறியழும் புலம்பலைச் செவிமடுத்த அவ்வானரனும்
மனம் மிக நெகிழ்ந்தே அத்திசை நோக்கி சென்றனனே
'பெண்ணே! கதறியழும் காரணமும் தான் என்னே? அதை
நானறியும் வண்ணம் எடுத்து இயம்பிடுவாய்' என்றான் 13

'உன் கதறலைக் கேட்டு மனம் மிக இரங்கி நங்காய்!
இங்கு வந்தடைந்தேன் காரணத்தைக் கூறிடுவாய் எனில்
என்னால் இயன்றிடின் உனக்கு உதவி செய்தே, உன்
குறை தீர்க்க முயலுவேன், இது திண்ணம்!' என்றான்; 14

வானரனின் கோதிலா முகவடிவு கண்டு உண்ர்ந்தே
திடமான நம்பிக்கையைத் தீர்மானமாகக் கொண்டே
முன்பின் அறியாவிடினும் நம்பிக்கையுடன் பேசலுற்றாள்-
அழகு உருவம் உள்ளத்தில் உவகை அளிப்பதன்றோ? 15

பாதாள உலகை ஆளும் அரசனின் சகோதரி நான்;
வீரக்வனா என்னும் நற்பெயர் கொண்டவள்;
என் மைந்தனைக் குறித்தே புலம்புகிறேன் அந்தோ!
மாந்தர்க்கு மைந்தனே அன்பு பூண்டவன் அன்றோ! 16

மகனின் உயிரே ஆபத்தில் சிக்கிய நேரம்
அவன் அன்னையும் தான் என் செய்வாள்?
எனது மனமே வெடித்துவிடும் அன்றோ?
மைந்தன் பிரிவு தாங்க வொண்ணாததன்றோ! 17

வையவிக் என்றொரு மைந்தன் எனக்குண்டப்பா!
அவனைக் கொன்றிட விரும்புகிறானே மையராபன்
என் சகோதரனே, ஆயினும் துர்மதி கொண்டவனன்றோ;
அவன் நடத்தையும் முறைமையும் முறைகெட்டதன்றோ? 18

சண்டாளனைப் போல் பாழ்நெஞ்சம் படைத்தோனவன்;
என்னுடன்பிறந்தோனால் ஆணையிடப்பட்டேன் நான்!
இதோ எதிரில் காணும் பெரும் குடத்தையே
கொதிக்கும் வெந்நீரினால் நிரப்பவும் வேண்டினனே; 19

ஓடையொத்த நீள் உருவம் படைத்த இக்குண்டமோ
எரியும் கட்டை கொண்டு கொழுந்துடன் எரிகிறதே
தொடர்ந்து பெருகி ஓடும் என் துயரக் கண்ணீருக்கொப்ப
என் சகோதரனின் நெஞ்சம் கனல் வீசுவது காண்பாய்! 20

இராமனையும் என் மைந்தனையும் உயர்ந்தோனே அதில்
இட்டே அந்தோ! வெந்திடச் செய்யவும் துணிந்துள்ளான்!
இவ்வச்சந்தரும் கொடிய பாவி இப்பணிகொண்டு
இருவரையும் ஒன்றாகக் கொன்றிட வழிவகுத்துள்ளான் 21

சூலத்தினால் குத்துவது போன்ற கேட்கக் கொடூரமான
சொற்களைக் கேட்டு தன் பணியில் குறி கொண்டோன்
வானரத்தலைவன் அனுமன், பேச்சில் சிறந்தோன்
வீரருக்கு வீரன் வீரக்வனையிடம் கூறலுற்றான்; 22

'நல்லணங்கே! கவலைகொண்டு மனங்கலங்காதே
நீ உரைப்பதெல்லாம் நடப்பதன்று. இது திண்ணம்;
நான் இங்கு அவன் காலன் இதோ வந்துள்ளேன்
நமன் குடிலவனை அனுப்பி வைப்பேன் 23

கூறுவாய் இக்கணம் மையராபன் எங்குள்ளான் என;
அவனருகில் இட்டுச் செல்வாய் என்னை, உடனேயே;
மிகக் கொடிய அவனை காலனின் அருகில்
உடனேயே என் சக்தியினால் அடையச் செய்வேனே 24

நன்மை நல்கும் இவ்வாசகம் கேட்டு சற்றே
அமைதிகொண்டு வீரக்வனை கூறலுற்றாள்
"பல கொடிய அரக்க வீரர்கள் கவனமுடன் காக்கும்
வாயில் வழி நுழையவேண்டுமே! அது எளிதன்றே 25

ஆங்கொரு சமக்கோல் அவர்களிடம் உண்டய்யா
அச்சந்தரும் உருவங்கொண்டோர் என்னை அதிலேற்றி,
எடையைக் கணக்கெடுப்பர் நுழையும் முன்னர்;
விதி வலியது இதுவே முறையாகும் என்றாள் 26

என் எடை எள்ளளவு அதிகமாயிடினும்
அத்தராசு எடுத்துக் காட்டும் அன்றோ
நகரத்தில் நுழையும் அனுமதி மாத்திரம்
பறிக்கப்படாது என்னை கொன்றும் விடுவார்கள்! 27

என் கவலையெல்லாம் எள்ளளவும் என் பொருட்டல்ல
உன்னைக் குறித்தே நான் விசனப்படுகிறேன்;
ஐயா! என்னைப் போலவே குற்றமற்ற நீயும்
உயிர் நீப்பாயே என்ற கவலை வாட்டுகிறதென்னை! 28

உரைகேட்டே செப்பினன் 'வேண்டாம், கவலையிங்கே;
உனக்கும் எனக்கும் நேராது எந்தக் கெடுதியும்
உன் தமையன் மையராபன் எவ்விடம் உள்ளானோ
என்னை அழைத்துச் செல் துரிதமாய், அவ்விடம்! 29

அவ்வார்த்தை கேட்டு அணங்கு கவலை கொண்டாளே
ஆயினும் வேறு வழியறியாது திகைத்து நின்றே
பெரும் காற்றில் விசையுடன் உந்தப்பட்ட படகுபோல்
நிலைகுலைந்திடினும் கபிவார்த்தையை ஏற்றனளே 30

கருமமே கண்ணாயினகாற்றின் மைந்தன் ஆலோசித்து,
தாமரைத் தண்டுருவந் தாங்கிவிட்டான், உடனேயே
தராசில் ஏற்றிடினும் எடை ஏறாத வண்ணம்
வீரக்வனையின் பாரத்தை அளந்து வைத்தனனே; 31

அப்பெண்ணோ திடமனதுடன் இவ்வாறு வானரனை
அழைத்துச் சென்றே மாறுவேடங் கொண்டோனை-
மிக்க கவனத்துடன் கண்காணிக்கும் அரக்கர் சூழ்
முக்கிய நுழைவாயிலை சடுதியில் வந்தடைந்தனளே 32

வாயிற்காப்போர்களைக் கண்டு கூறினாள்: 'அந்தோ
அண்ணனைக் காண விழைகிறேன்; அவசரப் பணியுண்டே;
இம்மாபெரும் வாயிலில் நுழைந்து உட்செல்ல இங்கு
எனக்கு அனுமதி வேண்டும்; அளித்திடுவீர் என்றாள் 33

''பெண்ணே! உள் நுழைய அமைந்த முறை நீ அறியாயோ
ஆதலின் தராசுக் கோலில் அமர்ந்து சீராகவே தன்
எடையை அறிந்து கொள். அரசனின் ஆணையும்
மீறாமல் முறைப்படி அடிபணிந்தேற்றிடு'' என்றனர்; 34

'ஆகட்டும் அப்படியே' என பதில் உரைத்தே, அவள்
அண்டியவரைக் காக்கும் அரனை மனதில் தியானித்தே,
கொழுந்து விட்டெறியும் தீயில் குதித்த சீதை போல்,
வீரக்வனையும் தராசின் தட்டில் ஏறி அமர்ந்தனளே! 35

தராசின் ஓர் பக்கம் அவளும் ஏறியே அமர்ந்திட
எடையும் அதிகரிக்க தட்டு பூமியைத் தொட்டதம்மா
ஐயங்கொண்ட அரக்கர்களும் அவளைச் சூழ்ந்தனர்;
அச்சங்கொண்டே உட்செல்ல அனுமதிக்கவில்லையே 36

அரக்கர் வீரர்களைக் கண்ட அவளும் மொழிந்தனளே
'அறிவீலிகளே! உங்கள் மதியும் மயங்கி விட்டதோ?
உங்கள் பழைய தராசு மிகவும் நைந்தே போனதினால்
என் எடையும் உங்களுக்கு ஐயத்தை ஏற்படுத்தியதே 37

ஈண்டேதும் உள்ளதெனில் குறையோ தவறோ
காரணம் தராசுதான் என நன்கறிய வேண்டும் நீங்கள்.
என்னிடம் குற்றமில்லையே. ஐயப்பாடு உண்டெனில்
என்னை மீண்டும் சோதித்துப் பார்ப்பதே உகந்ததாகும்' 38

ஆமென்று அவள் உரைப்பதையும் ஆமோதித்து
மீண்டும் நன்கு சோதித்திடவே முயன்றனர் அன்றோ!
ஆனால் அவள் எடை அதிகரிக்கும் வண்ணம்
பொருள் எதையும் காண இயலாதவர்களாயினர்; 39

சோதனை மிகச்செய்திடினும் அவர்கள் பார்வையில்
தாமரைத் தண்டே துல்லியமாய்க் காட்சியளித்திட
இது வீணே என்று ஒரு பொருட்டாக மதியாமல்
அதனை அலட்சியமாகக் கண்டு கொள்ளவில்லையே 40

தாமரை தண்டன்றி வேறெதுவும் காணக்கிடைக்காமல்
எடைகொண்ட பொருளெதுவும் காணாமல் வியந்தே
இவள் எடை நிறையக் காரணம் என்னென்றையம் தீர்ந்தே
மேற்கொண்டு உள் நுழைந்து செல்ல அனுமதித்தனரே! 41

தாமரை நாளத்தினில் நூலாகத் தன்னுருவம் மாற்றி
தொடர்ந்திட்டான் அனுமன் கபியும் அவளைப் அந்தோ
வந்தடைந்தனன் அவ்வனிதையை அனுசரித்துச் சென்றே
மையராபன் வசிக்கும் அவ்விடத்தையும் அடைந்தனனே 42

காலனின் பிடியிலிருந்து தப்பிய வானரனைக் கண்டு
எல்லையில்லா பெரும் மகிழ்ச்சியில் ஆழ்ந்திட்டாள்;
வானரனை அழைத்து வந்திட்டாள் அம்மாது அன்றோ
பெரும் சால மரங்கள் பல சூழ்ந்த குகையருகினில் 43

இரும்புச் சங்கிலியில் பிணைத்துக் கட்டப்பட்டு
பலத்த காவல்களுடன் கூடிய மாபெருங் குகைதனிலே
அதனுள் உடலிலிருந்து பிறிதாய் தனித்தே நின்றுலவும்
மையராபனது ஆன்மா குடியிருக்கக் கண்டனனே 44

அடைந்தனன், குகையை தன் உண்மை உருக்கொண்டே-
தகர்த்திட்டான், அக்குகையை, வாயுமைந்தன் தானே!
தன் தோள்வலிக்கொப்ப அவ்வசுரன் ஆன்மாவை
எறிந்தனன் தன் முட்டியினாலே நசுக்கி கசக்கி 45

செய்வதற்கரிய கடினமாம் அத்தீரச்செயலை
விளையாட்டாகவே செய்து முடித்திட
வீரனாம் அவ்வனுமனும் அங்கு கண்டனனே
சங்கிலியால் கட்டுண்டு கிடந்த ராகவனைக் 46

கண்டவனை கண்ணீர் சொறிந்தனன், அவ்வீரன்!
மாசித்திங்கள் முகில் பனித்துளிர் பொழிவது போல்
எனினும் பணியில் தாமதம் கொள்ளவிரும்பா அனுமன்
நொடியில் தன்னை முறைப்படி அடக்கிக் கொண்டான் 47

மாபெரும் மலைபோன்ற உருவங்கொண்ட அனுமன்
பாதாள உலகை ஆளும் மன்னன் முன் நின்றானன்றோ?
ஊழிதோறும் உலகை அழிக்கும் உருத்திரனைப்போல்
காலனின் பேருருவத்தை சடுதியில் எடுத்தனனே! 48

அவ்வீர அனுமன் காலனின் உருவமெடுத்தே அழைத்தான்
சிறுபிள்ளைத்தனம் கொண்ட அவ்வசுரனை போருக்கு
அவனது ஓலமதை சிறிதும் பொருட்படுத்தாமலேயே
மமதைமன்னன் உடனே ஆயத்தமானான் போருக்கு 49

தன்னிருக்கையை விட்டு எழுந்தான், அந்த மாசுரன்;
அச்சந்தரும் ஹூங்கார போரொலி எழுப்பியே அந்தோ
நாவினால் தன் வாயின் நாற்புறமும் நக்கியே அவன்
சிவந்தே பொங்கும் இரு கண்கள் மிக்க வீக்கங்கொண்டே 50

புன்னகை பூத்திட குரங்கைக் கண்டே கூறினான்;
'என் கோபத்தீயில், விட்டிலாய் வீழ்ந்து மடிவாய்!
என் மாபெரும் சக்தியை அறியாத அறிவிலி நீ
கணப்பொழுதில் சாம்பல் குவியலாய் மாறிடுவாயே 51

என் முன் நிற்காமல் ஓடிச்செல் இங்கிருந்தே
குரங்கு மதியினால் என்னை மோதப் பார்க்கின்றாய் நீ!
உன்னுயிர் மேல் உண்மையில் அன்பு கொண்டாயாகில்
இங்கிருந்து விரைவில் வெகு தூரம் சென்று விடு! 52

என்னைப் போன்ற மாவீரம் படைத்தவர்கள்
உன்போன்ற குரங்கினை எதிர்த்துப் போரிட்டே
இதுகாறும் வீராதிவீரர்களை எதிர்த்து வெற்றிகொண்ட
ஒருவன் கீர்த்திக்கு இழுக்கும் மேற்கொள்வனோ? 53

குரங்கிடம் துவந்த யுத்தம் செய்து கொன்றிட்டு வென்றான்
என்பது பாதாள மன்னனுக்கு ஓர் உயர் கீர்த்தி ஆகுமோ?
இதுபோன்ற ஓர் அபகீர்த்தி எனக்குத் தேவையோ?
நாற்றிசைகளிலும் பரவும் அவமானமது அன்றோ? 54

இங்கிருந்து உடனே தப்பி ஓடிச் சென்றுவிடு; உனக்கு
உயிர் பிரியமானால் உண்மையில் உயிர்பிச்சை அளிக்கிறேன்;
என் கருணைக்குப் பாத்திரமாகிறாய், நீ துச்ச விலங்கினமே
என்னுடன் போரிடத் தகுந்தவனும் நீயல்ல அறிந்திடு 55

இப்பேச்சு முழுவதுமே கேட்டு புன்சிரிப்புடன்
கபிவரனும் மையராபனைப் பார்த்து பதிலுரைத்தனனே:
'ஏ! மையராப! வீண் விதண்டாவாதம் செய்யாதே
புலம்புபவர் ஒருபொழுதும் வல்லவராவதில்லையே! 56

பிறவியில் கடவுளருளினால் துச்சனாக இருக்கலாம்
பிறப்பெடுக்க எனக்கு ஒரு வித சுதந்திரமும் இல்லையே!
ஆனால் வீரத்தனம் பிறப்பைப் போன்றதல்லவே
நானோ வீரத்தை என்வசம் கொண்டு விளங்குகிறேன்; 57

காற்றின் மைந்தன் எனப் பிரசித்தி பெற்றவன் அன்றோ?
உலகில் வஜ்ரங்கபலி என்றழைக்கப்படும் அனுமன் நான்
தாமரைத் தண்டை இரு தந்தபிளிறு நசிப்பதொப்ப
பேருருவம் கொண்ட உன் தேகத்தை அழித்திடுவேன் 58

பிறந்தவுடனேயே அருக்கனை அள்ளி உண்ணும்
ருசிமிக்க பண்டமெனக் கருதி துள்ளி உயரக் குதித்தேன்!
பழமென்றல்லவா எண்ணினேன் நான் கதிரவனை?
இந்நிகழ்ச்சி போதாதோ என் வீரம் எடுத்துக்காட்ட 59

பகர்ந்ததும் போதுமே இனி என்வீரமறிய வந்திடு
இருவரும் நேரே மல்யுத்தம் மேற்கொள்வோமே
கைக்கங்கணத்தைக் காண கண்ணாடியும் தேவையோ!
மல்யுத்தம் செய்தே என் வீரமதனை நன்கு அறிந்திடு'' 60

நாற்புறமிருந்தும் பாதாளமன்னன் உடலை
கூரம்புகளன்ன அனுமனது சொல்லம்புகள் குதறிட
கோபக்கனலன்ன எரியும் தீக் கொழுந்து நெய்யும்
கட்டையும் சேர்ந்ததொப்ப கொழுந்துவிட்டெரிந்ததே! 61

நொடியில் கபியை தன்னிரு கைகளாலும் துஷ்டன்
நொறுக்கிட எண்ணி பலவந்தமாகத் தூக்கிட
மிகவேகம் கொண்ட வானரத் தலைவனோ, சடுதியில்
இழுத்தவனை நிலத்தில் வீழ்த்தினன் அன்றோ? 62

வீழ்த்தியவன் மார்பில் ஏறி அமர்ந்திட்டே உடன்
நன்கு குத்தி அடித்து நொறுக்கிட்டான், அவனை
கூர்நகம் கொண்டோரில் சிறந்தோனாம் அவன்
கூரிய நகத்தினால் மார்பதனைக் கிழித்தெறிந்தனனே 63

பலமாகக் கட்டிப் பிடித்திட்ட போதிலும் கூட
எப்படியோ தன்னை குரங்குப் பிடியின்றும் மீட்டே
சினத்தால் சிவந்த கண்ணினன் மீண்டும் அவனைக்
கொல்ல எண்ணியே பின்தொடர்ந்து, சென்றான் 64

இனி துவந்த யுத்தம் மேன்மேலும் வலுத்திடச்
சமமான வீரம் படைத்திட வெற்றி காணாமலே
முன் கண்டும் கேட்டுமிராத கடும்போர் கண்டு
வியந்தே ரோமம் சிலிர்த்து நின்றனர் யாவரும்! 65

தடியைத் தடி முட்டியை முட்டி பல்லைபல்லென முடியிழுத்தும்
அனுமனும் மையராபனும் துவந்த போர் புரிந்தனரே! 66

பாதாள உலகமே நடுநடுங்கியது போர் கண்டு வியந்தே
காண திக்குகளினின்றும் வந்தே குவிந்தன பூதகணங்களே 67

பனைமரத்தை வேருடன் பிடுங்கி பகைவனை அனுமனடிக்க
அடியும் காயமும் இன்றியே அவ்வரக்கன் நின்றிருந்தானே 68

கண்டு அறிந்து வீரன் வீரக்வனன் அனுமனிடம்: ''ஆஹா!
வரம் பெற்ற அவனை இவ்விதம் கொல்வதும் இயலுமோ? 69

முதலில் அவனது ஆன்மாவை கொன்றழிக்காமல்
தேவர்களாலும் அவனைக் கொல்வதென்பது இயலாததே!'' 70

வீரக்வனனின் வசனம் கேட்ட, வானரன் உடனே
விராட் உருவம் எடுத்தே வீரனாக விளங்கினான் 71

நொடிப்பொழுதில் திரிகூட மலையை அடைந்தே
வண்டுருவில் வலம்வரும் அவனான்மாவைக் கண்டான் 72

கண்டறிந்து அவ்வண்டை தன்னுள்ளங்கையில் பிடித்துக்
கசக்கிப் பிழிந்து நசிக்கினன் சிரித்துக் கொண்டே 73

இவ்வண்ணம் இவ்வண்டை இவனிங்கு கொன்றிட
நிலைகுலைந்து பூமியில் வீழ்ந்து தவித்தனனே 74

கொடிய இராக்கதனை கொன்று விடுவித்து இராமனை
அவ்விடம் அழைத்து வந்தனனே மகிழ்ச்சிபொங்க வானரன் 75

உயரக் குதித்தெழுந்தவன் அவ்வாறே
வியன் வழி பாசறை வந்தடைந்தனன்;
கவலையில் துடித்த தன்னுடன்பிறந்தவர்களை
மகிழ்ச்சி மழையால் குளிரச் செய்தனனே! 76

# 15

# கும்பகர்ணனைக் கொன்ற கதை

வெல்லுதற்கரிய மையராபன் உயிரிழந்ததைக் கேட்டே
வருந்தினனே இராவணன் அதை நம்ப வொண்ணாமலே 1

காலனின் இருப்பிடம் அவன் சென்ற அந்நேரத்தில், அரக்கன்
வெல்ல முடியா தன் தம்பிகும்பகர்ணனையே நினைத்தனனே!
2

இலங்கையையும், தன் குலத்தோரையும் ராமன் புயலினின்றும்
காக்குந்திறன் கொண்டவன் அவனே என நினைத்தானன்றோ?
3

அரக்கர்குலப்பிறப்படைந்தான் உண்மையே எனினும்
அக்கும்பகர்ணன் குணமும் பணியும் வேறுபட்டதாயிற்று; 4

இயற்கையில் அறநெறி காக்கும் மனங்கொண்ட அவன்
சீதையை அபகரித்ததை தரம் கெட்ட பணியெனக் கருதினனே;
5

இக்கருத்து வேறுபாடறிந்த தமையன் தம்பியை நிந்தித்தனனே;
'பயங்கொண்டோன்'' எனக்கூறி சொல்லம்பினால் தாக்கி 6

''தன்னை வீணில் வீரனாகக் கருதுகிறாயே மதியிலி!
பூனை கண்ட எலி போலல்லவா நடுங்குகிறாய் நீ? 7

புலியின் மணம் நுகர்ந்தே பயந்து நடுங்கி ஓடி
தன்னங்கங்களை சுருக்கிடும் மான்நிலை கொண்டனையே 8

தொலைவிலிருந்தே இலக்கை நோக்கி விட இருக்கும்
அம்பைக் கண்ட காவினம் போன்ற காபுருடன் நீ!'' 9

இந்நாராச வார்த்தைகளைக் கேட்டே மனம் மிக நொந்திடினும்
தம் தமையன் மானம் காத்திட புறப்பட்டான் கும்பகர்ணன்; 10

பகைவருக்கு அச்சந்தரும் சக்தி ஆயுதம் கையிலேந்தியே
பெரும் படை சூழ, ராமனை எதிர்க்கவே சென்றனனே! 11

மாபெரும் சேனை சூழ காலனைப் போல் கோபங்கொண்டு,
போர்க்களம் வந்த சோதரனைக் கண்டானே விபீடணன்! 12

மலையில் பெருகிய தடுத்தற்கரிய ஆற்று வெள்ளம் போல்,
கரைபுரண்டு வருபவனைத் தன்னினிய சொல்லால் தடுத்தான்;
13

அறநெறி வழுவாமல் அறம் போற்றும் தம்பி தன் சகோதரன்
அறமேற்று அதருமம் கைவிடுபவன் எனவே எண்ணினான்! 14

ராவணேச்வரனிடம் மாறா திட அன்பு கொண்டிடினும்,
காற்றினால் பெருமரம் போல் தன்னை இழக்கவில்லை; 15

இப்படி எண்ணி கரங்கூப்பி கும்பகர்ணனை நெருங்கி
துரிதமாக காரியவெற்றி கோறி மொழி சில மொழிந்தனனே 16

பகைவனின் பக்கமிருந்தவனைப் பார்த்து பற்றி எரிந்தது
கும்பகர்ணனின் கோபக்கனல், சமித்துடன் கொழுந்து விட்டே 17

அறநெறி காப்பவனே ஆவான் கும்பகர்ணன் ஆயினும்
தன்னரசனிடம் திடமான அன்பதிகம் கொண்டனனே 18

தன் தாய்நாட்டைவிட்டு வெளி வந்த தம்பியை
காரணம் ஏதாகிலும் சிறிதும் மதிக்க மனங்கொள்ளவில்லை; 19

தன்னுறவினரிடம் செய்நன்றியின்றி, பகைவனைச் சார்ந்தவனை
கொடும் கெட்ட வசனங்களால் நிந்திக்கவும் செய்தனனே 20

அறநெறி காத்திடினும், உறவினர்களை வெறுத்து வந்த அவன்,
தேசத்துரோகியன்றோ? அவனை துச்சனென அவமதித்தான்; 21

இவ்வவச்சொற்களால் மனம் மிக புண்பட்ட விபீடணன்
உறவு சொந்த பந்தம் துறந்த காரணம் கூறலுற்றான்; 22

'இராமன் ஏதோ சாமானிய மானுடனல்ல, உண்மையிது
கடவுள் நாராயணனே அவனியில் அவதரித்தானன்றோ? 23

அவன் தொண்டே உலகில் மேலானதொரு அறமுமாகும்!
என்றெண்ணியே அவனை வந்து சரணடைந்தேன்; 24

அவன் வார்த்தைகளைக் கேட்டே ஏளனம் செய்துரைத்தான்
கும்பகர்ணன், 'மந்தபுத்தியோன் ராமன் உயர்கடவுளல்ல; 25

அவ்வாறே கடவுளே இராமனாக அவதரித்தானெனில்
என் வினாக்களுக்கு விரைவில் விடை பெற்றுத் தந்திடு; 26

என் வினாக்களுக்குரிய விடை அளிப்பானாகில், திண்ணம்
மன ஆறுதல் கொண்டே நானும் அவனிடம் புகலடைவேன் 27

நான் கேட்கும் கேள்விகளை செவிமடு விபீழணா!
பதில்களை நாராயண இராமனிடமிருந்து பெற்றுத்தா; 28

''முட்டாள் துறவி யார்? நேர் தந்தங்கொண்ட யானை எது?
வஞ்சனை செய்யும் வனிதை யார்? சிறந்த போக்கிரி யார்?'' 29

செவி மடுத்தே கவனமாக இக்கேள்விகளை, அரக்கர் தம்பி
ஆவலுடன் விடைபெற விபீடணன், அணுகினனே இராமனை 30

இராகவனும் கபித்தலைவர்களும் நன்கு ஆராய்ந்தும்
இக்கேள்விகளுக்கு விளக்கம் காண இயலாமல் தவித்தனரே! 31

திறமைமிகக்கொண்ட அங்கதன் கூறினன், கும்பகர்ணனிடம்:
'எம் தலைவன் காகுத்தன், தக்க விடை கொண்டுள்ளான்; 32

அவனைப் போன்ற மதிநுட்பம் உனக்குமுண்டோ? என்றே
தெள்ளத்தெளிய அறிய வேண்டி யானிங்கு வந்துள்ளேன் 33

ஆதலின் அக்கேள்விகளின் உரிய பதில்களை வழங்கிடப்பா
உண்மையில் என்னன்பன் ஒத்த பதிலளிப்பான், அவைகளுக்கே
34

சிறுபிள்ளைத்தனமான வார்த்தை கேட்டே சிரித்தான்;
இராமனின் இயலாமையைக் கண்டு பரிகசித்திட்டனனே; 35

எக்கேள்விகளுக்கு தீர்வுகாணல் இராமனுக்கு மிகக் கடினமோ
அக்கேள்விகளின் தீர்வை தானே உடன் அளித்தான் அரக்கன் 36

'முட்டாள் துறவி ராமனே மனைவியைத் தனிமையிலிட்டு
காட்டில் தங்கமானைத் துரத்திச் சென்றிட்டானே 37

நேர்தந்த யானை இலங்கைமன்னன் இராவணனே! அன்பு
மனைவியிடம் மனநிறைவின்றி, பிறமனையாளை விரும்பினனே!
38

காமம் கண் மறைக்கத் தன்வசமிழந்தே இராமனின் மையலில்
பரத்தையாக நினைத்த, அச்சூர்ப்பணகையே வஞ்சனையாள் 39

போக்கிரியோ, விபீடணன் என்னும் பெயரிய என் குலத்தவனே!
அவன் செய்த பந்துதுரோகம் தேசத்துரோகம் நிந்திக்க தக்கது; 40

வீரங்கொண்ட கும்பகர்ணன் தன் வினாக்களுக்கு தானே உரிய
பதில்ளித்து, ராமசேனை நோக்கி முன்னோக்கிச் சென்றான்
41

ஊழிக்கால மேகக்கூட்டம் போல் கர்ஜனையுடன் எதிர்த்து வர
வீரன்சுக்ரீவன் வானரத்தலைவன் எதிர்த்தனனவனை 42

பலங்கொண்டவன் என்றறிந்து அவனது சக்தியாயுதத்திலிருந்து
தப்பியோட ஒருபாயம் கைகொண்டான் கும்பகரணன் 43

''என்னைவிட பலங்குறைந்தவன் சக்தியற்றவன் நீ
என்றே தற்புகழ்ச்சி மேலிட்டு அரக்கனும் பதிலுரைத்தனனே 44

'என்னிலும் சக்தி அதிகம் பெற்றவன் நீ, எனக் கருதினால்
'ஏ! சுக்ரீவா! உடனே மலையரசனாம் இமயத்திடம் செல்; 45

ஆங்கு சென்று ரங்கமெனும் மரம் கொண்டுவா!
அதைக்கொண்டு என்னிடம் கடுமையாய் போரிடு;'' 46

அவ்வசுரன் வாயினின்றும் இவ்வார்த்தைகள் உதிரவும்
பனியரசனாம் இமயம் நோக்கி நிமிர்ந்து, குதித்தனனே; 47

ரங்கமென்னும் மாமரத்துடன் திரும்பினன், நொடியில்
கொடிய கும்பகர்ணனை அடித்தனன் அதைக் கொண்டே 48

அப்பெருவீர அரக்கனுக்கும் வானரனுக்கும் போர் மூண்டிட
ஆதவன்மைந்தன் தன் வீரமிழந்தவன் போலானான்; 49

போர்க்களத்தில் இங்குமங்கும் அலைந்து தன் வீரமிழந்தான்;
களைத்திடட்டும் உபாயமிதுவெனக் கருதினன் கும்பகர்ணன் 50

அம்மாவீரன் களைத்திட, வென்றதாகவே புறப்பட்டான்;
அவனைத் தன் கக்கத்தில் கட்டிச் சுருட்டியே தந்நகரம் நோக்கி;
51

அனுமனோ அப்பொழுதே சுக்ரீவனின் அந்நிலைமை கண்டே
அவ்வரக்கன் மீது பாய்ந்தே, விடுவித்தானே சுக்ரீவனை! 52

அஞ்சனை மைந்தனோ அசுரன் காது மூக்குகளை கடித்திட
சிவந்த மலையினின்றும் குருதிப்புனல் பெய்ததொத்ததே! 53

இந்நிலையில் வெட்கத்துடன் இலங்கையை அடைந்தான்
தன்னவமானம் அழித்திட வேலாயுதம் மனதில் நினைத்தே; 54

அவ்வரக்கனின் ஆயுதமோ மோட்சசக்தி எனப்பட்டது; ஆனால்
அரக்கர் வீடுபெற வழியாவது ராமனெனும் ஆயுதமேயன்றோ?
55

சக்தியாயுதத்தின் வலிமையோ தேவபூசையின் விளைவாகும்;
அதனை நினைவு கூர்த்து, அரக்கன் அதைச் செய்யலுற்றான்; 56

பூசைசெய்வதற்கு புனித தீர்த்தமான நதிக்கரையடைந்தே
வீரன் விதிப்படி முறைதவறாமல் பூசிக்கத் துவங்கினனே 57

மோட்சசக்தியை அதில் ஏற்றி, சலனமில்லாமலேயே, அவனது
மூடிய கண்கள் ஓடையில் உறங்கும் மீனொத்தான! 58

மனதை ஒருமுகப்படுத்தியே பூசித்தான், எண்திசைகளையும்;
சந்தனாகரு கற்பூர மலர்களின் தெய்வீக மணம் பரப்பி 59

நேரமதனில், துர்நாற்றம் நாசித்துவாரங்களைத் துளைத்திட
மிக்க கவலையில் ஆழ்ந்தான், மனம் மிகக் குழம்பியே! 60

நற்பணியின் நேரம் துர்நாற்றம் தாங்கவொண்ணாததே;
எங்கிருந்து வருகிறது என்றறிய கண்களைத் திறந்தனனே; 61

கண்களைத் திறக்க, காண வெறுக்கத்தக்க துர்நாற்றத்துடன்,
நாயின் சடலம் ஒன்று ஆற்றுநீரினில் மிதந்திட கண்டனனே; 62

அரக்கன், காக்கை தன்னலகினால் கொத்துவதைக் கண்டு
அறுவறுப்புடன் மனம் நொந்து வேதனை அடைந்தனனே. 63

அறுவருப்பினால் அரக்கன் பூசையை நிறைவு பெறாமலேயே
மன ஈடுபாடில்லாமல் மத்தியில் நிறுத்திவிட்டனனன்றோ? 64

பூசைக்கு தடை செய்ய கையாண்ட யுக்தி யிது, கபிவரனால்;
அனுமனே இறந்த நாய் உருவத்தில் நதியில் கிடந்தனனே 65

காக்கையின் உருவங்கொண்டவனோ அங்கதன் ஆவான்;
இவ்வாறு பூசைக்குத் தடையிட்டனர் இருவரும் இணைந்தே 66

பூசைநிறைவுறாமல் தடைபட்டும், அரக்கன் கையில்
மோட்சமெனும் சக்தியாயுதம் ஏந்தி, சேனையில் குதித்தனன் 67

வீரர்களில் மிகச் சிறந்தவனாம்
சுமித்திரையின் மைந்தனுக்கும்
இராவணனின் இளையசோதரனுக்கும்
கடும் போர் வெகுநேரம் நடந்ததே; 68

போர்துவங்க வெற்றி விரும்பியே
அரக்கன் சக்தி ஆயுதம் பிரயோகிக்கவே,
நல்ல உயர்ந்ததோர் ருசியறியாக் குருதியைக்
குடித்து தந்தாகம் தணிக்க விரும்பியதே சூலம்! 69

நிறைவுடன் பூசை முடிக்காத காரணத்தினால்
சக்தி சிறிதே எழுந்தது; முழுவதும் இல்லையே
பின்னும் எதிரியின் உயிரை பற்றி நினைவு
இழக்கச் வாய்யும் திறன் இழக்கவில்லையே! 70

சக்தி ஆயுதத்தினால் அடிக்கப்பட்ட இலக்குவனோ,
தன் நினைவிழந்து பூமியில் விழுந்தானன்றோ?
தன் சுற்றத்தாரை சூழ்ந்திருந்தோரையெல்லாம்,
பெருங்கவலையும் ஏமாற்றமும் மனத்தில் நிரப்பியே 71

இது காலை அந்நிலைமையைக் கண்ட விபீடணன்,
வானரனை விளித்தே விளம்பலுற்றான்;
'ஸர்வய மலையிலிருந்தும் தெய்வீக மூலிகையொன்று
எடுத்து வந்தால், நினைவு மீட்க உதவுமே 72

நாளை ஆதவன் உதிக்கும் முன்னரே, மூலிகையை
பயன்படுத்திடின், தக்க பயனுமுண்டாகுமே!
அதன் பின்னர் மூலிகை உபயோகித்தும்
பயனேதும் அடைய முடியாதென்பது உறுதி!'' 73

உயரிய அவ்வார்த்தையின் உண்மை உணர்ந்து
கால தாமதத்தை அறவே நீக்கிட எண்ணியே
உடன் புறப்பட்டான் வியன்வழி வானரன்!
வாயுமைந்தன் ஸர்வயமலை நோக்கியே 74

போகும் வழியில் ஆகாயத்தில் பரிதியின்
கிரண ஒளி தன்னுடலை நீராட்டுவதைக் கண்டு,
கவலை மிகுதியால் கலக்க மடைந்தான்;
திரும்பும் முன் பொழுது புலர்ந்திடுமோ என்றெண்ணி 75

ஆதவன் உதிக்கும் நேரம் விண்ணில் மலர்ந்திடும்
ஆகாயமலர்கள் போல் தன் நம்பிக்கை வீணாகுமோவென
ஆதவன் செல்லும் பாதையினை மாற்றிடவே எண்ணி,
அவன் தன்னம்பிக்கையை மீண்டும் மனதிலிருத்தினனே; 76

இரவியின் ரதத்தை திடமாகவே பிடித்துத்
திசை திருப்பிடவே மனமும் கொண்டனனே
அவ்வாறே முயலுகையில் கதிரவனின் கிரணங்களால்
உடல் முழுதுமே வெப்பத்தினால் வெந்ததம்மா 77

இராமன் பணியில் ஒன்றி முனைந்தீடுபட்ட
வீரன் அனுமனைக் கண்ட அவ்வாதவனும்
'ஆ! என் செய்தேன்?' என்றே எண்ணி,
இரக்க அலைகளால் அங்கம் வெந்தனனே; 78

தீயிலிட பொன்னனைய நிறங்கொண்டவனை
உடனே அவன் உயிர் பெறச் செய்தனனே!
நடுப்பகலிலும் முகிலினுள் மறைந்து நின்றே,
இரவின் இருட்டையும் இருத்திட்டான் இரவி! 79

மனக்களிப்புடன் மாருதியும் மீண்டும்
தன் பயணத்தை தொடர்ந்தே வீரமுடன்
குறுகிய காலத்தில் குன்றாம் ஸர்வயம் என்னும்
குன்றந்தன்னையும் அடைந்திட்டனனே! 80

வீரனாம் அனுமன் மூலிகையைக் கூவியழைத்திட
ஒஷதியும் ஓலத்தின் மறுபதில் அளித்திட்டான்
''ஈண்டு கீழே பூமியில் நான் உள்ளேன்'' என்று
கூறக்கேட்டும் அவனைக் காணவில்லையே! 81

மீண்டும் அக்குரல் எழும்பியது 'வீரனே!
நானிங்கு உயரத்தில் உள்ளேன்' என்றே கூறிட
வீரன் அனுமனும் உடனே மேல் நோக்கிச் செல்ல
காணக் கிடைக்காமல் கவலையில் ஆழ்ந்தனனே! 82

மீண்டும் மீண்டும் மேலுங்கீழும் அவன்;
அலைந்தலைந்து சோர்ந்து நொந்தனனே;
பின் தன் மதிக் கூர்மையை பயன்படுத்தியே
நன் மதியோன் மூலிகையைக் கண்டனனே 83

ஐந்து நதிநீர் கொணர்ந்து தெளித்திட
மூலிகைகளை எடுக்கலாம் என்னும் விநோதமான
நீதி நெறிமுறையோர் எடுத்து வழங்கிய
வழியையே ஏத்திட மனதில் நினைத்தனனே; 84

புண்ணிய ஐந்துநதியின் நீரோ வெகு
தொலைவிலுள்ளதே; பரதன் ஆளுகையில்
அயோத்தியாம் நகரில் பெருகிப் பாய்வதன்றோ?
அதைக் கொணர்தலும் கடினமான செயலன்றோ? 85

அனுமனால் செயற்கரிய செயலுமுண்டோ?
நொடியில் அயோத்தி மாநகரை அடைந்தே;
ஐந்துநதிநீரை எடுத்து விரைந்தேகியே
மூலிகை மேல் நன்கு தெளித்தானன்றோ? 86

ஐந்துநதிநீரைத் தெளித்து தெய்வீக திறன் படைத்த
மூலிகையை எடுத்து இராமனிடம் ஓடோடியும் வர
அதைத் தடவ இலக்குவன் உயிர் பெற்றெழுந்தான்!
உறக்கத்தினின்றும் விழித்தெழுவது போன்றே, 87

இராமனின் இளைய சகோதரன் இலக்குவன்
காலனின் பிடியிலிருந்து விடுபட்டெழுந்ததைக்
கண்டு காகுத்தனின் படைகளோ செவிகள் துளைக்கும்
போரொலியுடன் ஆனந்தம் பொங்க ஆரவாரமிட்டனர்! 88

இவ்வொலி அரக்கன் கும்பகர்ணன் செவியிலும்,
வேகத்துடன் வந்து வீழ அச்சங்கொண்டெண்ணினன்;
''இலக்குவன் மீண்டும் உயிர் பெற்றான் இது திண்ணம்
இதுவே இப்பேரொலிக்குக் காரணமுமாகும்'' 89

மீண்டும் அவனைப் பழிவாங்க விரும்பியே,
மேன்மேலும் தன்னுடலைப் பெருக்கி வளர்ந்தான்;
நீர் நிறை ஆறு முழுவதும் உள்ளடக்கிக் கொள்ள,
இராமனின் சைனியம் நீரின்றி தவித்து வெந்ததன்றோ? 90

நாட்கள் ஏழும் இவ்வண்ணம் நிகழ்ந்த வண்ணம்,
நீரை அடைத்து நதியில் நின்றிட்டதால்;
நாயகன் இராமனின் வானரப் படைகளோ
நீரின்றி நீர் வேட்கையினால் தவித்ததன்றோ? 91

நீசன் அரக்கன் நின்றிட்ட அந்நிலத்தை
மலர் கன்னிகைகளே அறிவார்கள் ஆதலின்-
அனுமன் அக்கன்னிகையின் உருவில் மாறி,
அவருடனேயே அவ்விடம் வந்தடைந்தனனே! 92

அவ்விடம் அணுகிய அதே நேரமதில்
கொடிய தன்னுருவை உடன் அடைந்தே
காலால் நன்கவனை வேகமாக உதைத்திடவே
அதனால் உடனேயே எழுந்திட்டான் அன்றோ? 93

எழுந்ததும் கட்டியணைத்த ஆற்றின் நீர்ப்பெருக்கோ,
பெருக்கெடுத்தே விசையுடன் நன்கு ஓடியதன்றோ?
நீர்வெள்ளமாக ஓடியதைக் கண்ணுற்றே நீர்வேட்கை
தணித்துக் கொண்டனர், இராமனின் படைவீரர்கள்! 94

வானரத்தின் அடியினால் அங்கமெல்லாம் தளர்ந்திட
தன் காரியத்தோல்வி மனத்தை மிகவும் தளர்த்திட
நீதியில் வல்லவனும் வீரம் நிறைந்தவனும்
கும்பகர்ணன், அவ்விடம் நீங்கிப் புக்கினன், அக்கணமே! 95

மறுநாள் மீண்டும் முழு வலிவுடன்
தன் சக்தி ஆயுதமெடுத்து போருக்கு வந்தே,
வானரசைனியத்தை அச்சமுறுத்தியே நாற்புறமும்
தன் வீரம் முழுவதும் காட்டினன் வீரன்; 96

காலனையொத்த கடும் வீரங்கொண்டவனை
எதிர்க்க வில்லாளி ராமனே ஆங்கு வந்திட்டனே!
பிரும்மாஸ்திரம் அவனும் உபயோகித்தே செலுத்திடப்
பிரிந்தது அவன் உயிர், விழுந்தது உடல் மண்ணில் 97

காலனின் பிடியில் அகப்படும் சற்றே முன்னர்
சுவர்க்கத்தின் வழியைத் தனக்குக் காட்டியவனை
கண்டனனே, தன்னெதிரினிலே திருமாலை!
சங்கு சக்கரம் கதை திரிசூலமுமேந்திய 98

அதனாலேயே அளவிலா ஆநந்தம் அடைந்தே;
இராமனின் திருவடிமலரினை நன்கு பணிந்திட்டே
மனக்கவலையும் முற்றிலும் நீங்கியவனாய்
அமரர் வசிக்கும் வானுலகை அடைந்தனனே! 99

# 16

# மலீவக்பிரமனின் கதை

தம்பி கும்பகர்ணன் மேலுலகம் ஏகிட விசனம் கொண்டினும்,
இராவணன் இராமனை வெல்லும் பிடிவாதத்தை விடவில்லை 1

மகாரதனும், தன்னருமைபுதல்வனுமான இந்திரஜித் என்னும்,
மாசக்திகொண்டோனை சேனாபதியாக்கினனே 2

ராமனது சைனியமே கட்டுண்டு கிடக்க, அவன் நாகபாசத்தினால்
சித்திரத்தில் எழுதியது போல் இலக்குவனும் காணப்பட்டானே 3

ப்லைவத் என்னும் இராமன் விட்ட அம்பினால், அவ்விடம்
கருடனும் வந்து சேர நாகங்கள் தலைதெறித்தோடினவே! 4

இந்திரஜித் போர்முனையில் திறன் அனைத்தும் காட்டி
இராவணன் அன்புமகன் மாண்டு வீர உலகமெய்தினனே 5

ஒவ்வொருவராக போரில் வீரர்கள் மாண்டு செயலிழந்து
இராமன் பேய்க்காற்று இராவணன் நம்பிக்கையை அழித்திட 6

இராகவேந்திரன், மாவீரன், தொடர்ந்து அதுசமயம்
புலஸ்த்யவம்ச சேனையை முற்றிலும் முறியடித்தனனே
மரங்களின் கிளைகள் ஒவ்வொன்றாகக் களைவதொப்ப;
ஒவ்வொருவராகக் களத்தில், அரக்கர் தலையிழந்தனரே; 7

இராக்கதர்கள் அடிபட்டு வீழ்ந்திடவே, வாயினின்றும்
இரத்தம் பெருகி மண்ணில் சக்தியின்றிப் புரண்டனரே
இவையெல்லாம் நேரில் களத்தில் கண்டு கலங்கிய
இராக்கத தலைவன் மனதில் கவலை கொண்டனனே 8

இவ்வாறே போர் நீடித்திடின் இனியும் நாட்கள் பல,
இச்சேனை முழுவதும் இங்கேயே நசித்துப்போகுமே;
ஆதலினால் இதற்கொரு உபாயம் இப்பொழுதே
எடுக்காவிடின் என் நாசம் திண்ணமென்றெண்ணினன்; 9

இராமனெனும் கடும் விபத்திலிருந்தே தப்பிட
பற்பல உபாயங்களை சிந்தித்துப் பார்த்திடினும்
சிந்தனையிற் சிறந்தவன் இவ்விதம் எண்ணிட்டான்;
படைக்கும் பிரமனைப் பிரார்த்தனை செய்திடுவதென 10

மலிவக்பிரமன் என்னும் மூவுலகத் தலைவனாம்
தேவர்களின் முதல் தேவனாக, இருப்பவன் அவன்
மலீவமன்னன் என்னும் பிறிதொரு பெயர்கொண்டோன்
நடுநிலை தாங்கித் தீர்ப்பளிப்பதில் கீர்த்தி கொண்டவன்! 11

உண்மையில் எந்நாட்டின் மீது படையெடுத்து வந்து
உயிர்களை ராமன் கொல்வதும் நியாயமோ எனப்
படைக்கும் கடவுள் பிரம்மதேவனிடம் தெரிவித்தால்
சமநிலை காக்கும் கடவுள் உண்மையறிவதும் உறுதியே! 12

நடுநிலைமையை முற்றிலும் விரும்பிக் காக்கும்
அமரர்பாட்டனார் சினங்கொண்டு சபிப்பர் இராமனையே
நியாய வழியினின்றும் இம்மியளவும் பிறழ்ந்து
செல்வதை விரும்பாதவர், இதைப் பொறுப்ரோ 13

இராகவனுக்கு இத்தருணம் சாபம் அளிப்பாராகில், அவனும்
தன் வீரமும் திறனும் அழிந்தே நாசமடைவான்
இராமன் இறந்தால், அப்பெரிய சைனியம் நாற்புறமும்
தலைவனற்றே சிதறிடும், ஆட்டங்கொண்ட படகொப்ப! 14

இவ்வண்ணமே நிகழ்ந்திடில் என் மனவிருப்பங்கள் யாவும்
முற்றிலும் நிறைவேறிடும், அதில் ஐயமேதும் இல்லையே!
அவ்விதமே தீவழி செல்வோன் தீயவாதமிடுவதை
மகிழ்ந்திட்டான் மனதில் வலையாகப் பின்னியே 15

இவ்வாறு ஏதோ ஒரு உபாயத்தைத் தன் கருத்தில்
இயல்பாகவே பின்னிப் பிணைத்து மகிழ்ச்சி மிகக்கொண்டே
நான்யவிக் வாயுவேகன் என்னும் பணியில் சிறந்த
தன் தூதர்கள் இருவரை உடனழைத்து உரைத்தனனே: 16

''இப்பொழுதே நான்முகனின் இருப்பிடம் நீங்களிருவரும்,
இவ்வுலக நிலைமையைத் தெரிவித்திடுவீர் சென்றடைந்தே;
இப்படி உலகையே அழிக்கும் தீர்மானம் செய்துள்ள
இத்துராத்மா இராமனைத் தண்டிக்க வேண்டும் எனவும்; 17

இந்த நம் வேண்டுகொளை நன்கு செவிமடுத்தே
கல்வி கேள்விகளில் சிறந்த தேவர்புடைசூழத் தன்னுலகிருந்து
இப்பூவுலகம் உடனே இறங்கி எழுந்தருளுவர் பிரும்ம
தேவன்;'' தன் சக்தியின் எழும்பிய ஒளிப்பிழம்பை பரப்பியே 18

பிரும்மதேவனோ இருபக்கத்தில் எந்த ஒரு சேனையையும்
ஆத்ரித்துக் கீழே இவ்வுலகின்கண் இறங்கிவரவில்லையே;
பாரபட்சமின்றி சமநிலைமையை ஏற்றிடும் எம்பெருமானோ
இங்கும் சமநிலையில் இருந்து நன்கு ஆதரித்தாரே 19

ஒரு பக்கம் பத்துத்தலை இராவணனின் சேனை முழங்க,
பிறிதொருபக்கம் ரகுவம்சக் கொழுந்தின் சேனை முழங்கிட,
இரு சேனைகளின் இடையே நடுவில் அமைந்திடும்
ஓர் தனி இடத்தில் வந்தே இறங்கினன் பிரமதேவனும்! 20

ராமனுக்கு அபராத மளிக்கவேண்டுமென்ற
பத்துத்தலையோன் வேண்டுகோளைக் கேட்டே,
ரகுமைந்தன் வேண்டுகோளையும் நடப்பையும் கேட்டே
சனககுமாரி சீதையின் வேண்டுகொளையும் செவிமடுத்தனன் 21

''இங்கு வெள்ளமெனத் திரண்டுகூடியுள்ள அமரர்களையும்,
எதிரில் கொண்டே அவர்கள் முன்னிலையிலேயே
பாரபட்சமின்றி நடுநிலையறிய ஈண்டு வந்தோம், யாம்
இல்லையெனில் முடிவை இங்கு உரைக்க வல்லேனல்லன்; 22

பிரும்மதேவனின் கட்டளையை நிறைவேற்றிடவே
வானரவீரர்களும் இராக்கதவீரர்களும் இணைந்தே
அவளது விருப்ப வேண்டுகாளையும் விவரமாக அறியவே
தேவியாம் சீதையை இங்கு அழைத்து வந்திட்டனரே 23

விதேகமன்னன் மகள் சீதையவள் வார்த்தையையும்
இராமனின் வார்த்தையையும் தேவர்கள் நன்கு செவிமடுத்தே,
இச்சொற்சான்றின் மூலம் மலீவமன்னன் நன்காலோசித்து,
'இராவணனே குற்றம் செய்தவன்' என்றனனே 24

கடுஞ்சினங்கொண்டு அவன் கொடுத்தனனே சாபமும்;
''இராமனின் பாணங்களுக்கிரையாவாய் நீ'' எனத்
தேவர் தலைவன் சாபமிதனை விரைவில் ஈந்திட்டே
தேவர்களுடன் கூடத் தன்னிருப்பிடம் சென்றனனே! 25

தன் வார்த்தைகளின் முறணான வேண்டுகொளை
நினைத்து நாணம் மிக அடைந்த நிசாசரன் இராவணன்,
கவலையால் ஒளியிழந்து ராகுபிடித்த ஆதவனோப்ப
தன் ஊழ்த்தீயாம் கவலை சூழ்மனங்கொண்டனனே! 26

தகாத எண்ணங்கொண்டவர்களுடையவும்
பிறன் மனைவியை அபகரிப்பவர்களுடையவும்
மனவிருப்பங்கள் யாவும் நிறைவேறாததால் அன்றோ,
உலகமும் தழைத்தோங்கி வளர்கிறது உறுதியிது 27

# 17

# இராவணனின் ஆன்மாவின் கதை

இராவணன் இராமனுடன் போரிட சக்தியற்றிடினும்,
தன் பிரயத்தனங்கள் யாவும் பலனற்றதாக உணர்ந்திடினும்,
தன் திடபுத்தியை பயனற்ற தீர்மானம் சிறிதளவும்
அசைக்கவொண்ணாமல், நேரே போர்க்களம் வந்தனனே 1

ஏற்பட்டது, இப்படி மிகக்கோரமான அச்சந்தரும் போரன்றோ?
நடந்தது, இதுவோ மூவுலகிலுமே முன்பின் கண்டிராதபடி;
மூண்டது; இராமனுக்கும் பத்துத் தலையோனுக்குமிடையே
அப்போர் முன் கேட்டதுமில்லை; கண்டதுமில்லையே! 2

சித்தர் யக்ஷ முனிவர் நாகர் அமரர் என எல்லா
தேவகணங்களும் மற்று பூதகணங்கள் யாவையுமே
அவ்வற்புதமான அப்போரைப் பார்க்கும் ஆவல்
வந்திட, சடுதியில் ஓடோடியும் வந்தனரே 3

போர்க்களத்தில் தீரத்தைக் காட்டுவதில் விஞ்சவில்லையே
ரகுவம்சதிலகமும், இராக்கதனும்; ஒருவரையொருவர்
கூர்மையான அம்பு ஆயுதங்களைப் பயன்படுத்தியே
இராவணனும் இராமனும் சளைக்காமலே போரிட்டனரே 4

இவ்வாறே கடுமையாகவும் கொடுமையாகவும் பலகருவிக்
கூராயுதங்கள் கொண்டு போரிடினும், விந்தையிது காண்
அவரது உடலுறுப்புகள் ஊனமுற்றோ, காயப்பட்டோ,
அவதிப்படவில்லை; அதன் காரணமும் அறியவில்லையே! 5

மலையிலிருந்து பெருகி ஓடும் ஆற்று வெள்ளம் போல்,
விசைகொண்ட அம்புகள் தாரையாய் பெருகி நிறைத்தது;
இராவணனை இராமன் நாராசங்கள் ஒன்றும் தைக்கவில்லை;
இராக்கதமன்னனும் வேதனை சிறிதும் அடையவில்லையே; 6

வெட்டுண்ட அங்கமாயினும், மீண்டும் அவ்வாறே ஒருசேர
வியப்பளிப்பதன்றோ? உகந்தவகையில் சேர்ந்து அமைந்ததும்,
கண்டு அதை எல்லாமறிந்த இராவணன் தம்பி விபீடணன்,
உகந்த காரணத்தை உறுதியுடன் உரைத்திட்டனனே: 7

இராவணன் அரக்கர்களில் தலைசிறந்தோன் அவன்
அண்ணலே! ஆன்மாவோ கூண்டில் கட்டுண்டு கிடக்கின்றதே;
அக்கூண்டோ, அவன் தன் ஆசானாம் மாமுனிவர்
கோபுத்திரன் என்பவரின் உறைவிடத்திலுள்ளதே!. 8

ஆங்கு குடிகொண்டுள்ள அவனது ஆன்மாவைக்
கொல்லாதவரை, இவனைக் கொல்வதும் தான் இயலுமோ?
அதனால் நற்குலப் பிறப்போய்! முதலில் அங்குள்ள அவன்
ஆன்மாவை கொன்றிடின், இவன் உயிர் பறித்தல் திண்ணமே'' 9

விசையுடன் விபீடணன் வசனங்களைச் செவிமடுத்தே
வானரன் அனுமனும் உடனே அவ்விடம் செல்ல முயன்றான்;
அவ்வாத்மாவைக் கொன்றிட நிச்சியத்தே நொடியில்
அம்மாமுனிவரின் இருப்பிடம்நோக்கி புறப்பட்டனனே! 10

''மாபெரும் வீரங்கொண்ட, வானரன் ராமபத்திரனைக் கண்டு,
வெற்றியுடன் முடிப்பேன் இப்பணியை நான் என்றே கூறி
சடுதியில் இப்பணியாம் அவன் ஆத்மாவைக் கொன்றே
உன் கவலையை வேருடன் நீக்கிக் களைந்திடுவேன்; 11

பணியொன்றை ஏற்றிடுவேனாகில் தந்திரமதைக் கையாண்டே
அப்பணியை வெற்றி கொண்டே திரும்பிடுவேன் அன்றோ?
என் பணி முடியுமோ என்ற சங்கை வேண்டாம் மனதில்
வெற்றியுடன் எளிதில் முடித்திடுவேன், திண்ணமிது''என்றான்! 12

''ஆம் அப்படியே'' எனப் பெருந்தகை இராமனும், தன்
சம்மதத்தை முழுவதுமாகத் தெளிவுடன் தெரிவித்திடவே,
வானரனாம் அனுமன், வாலிமைந்தனையும் அழைத்திட்டே,
விரைந்தனனே; கோபுத்திரன் முனிவரின் குடிலடைய, 13

அடைந்தே துறவிமாடத்தை அனுமன், முனிவரிடம் கூறினன்;
''மாண்புடையீர்! உன்னைப் புகல் புகுந்தேன்; நானின்று
மாமுனிவரே! இதுகாறும் இராமன் என்பவனின் சேவை
அயறாது செய்தும் அணு அளவும் பலனும் கிட்டவில்லையே 14

ஆதலின் மதிப்பிற்குரியோனே! நான் வழி தவறிவிட்டேன்;
நீசனாகிவிட்டேன்; நிந்தனைக் குறியவனுமானேன்;
நொடிப்பொழுதும் ஒய்வும் கிட்டுவதில்லை; தாமதமின்றி
புகல்புகுந்தவரைக் காக்கும் உம்மைச் சரணடைந்தேன்; 15

நன்றி மறந்தவனை அணுகி நெருங்கியிருப்பதை
நேர்மை உள்ளங் கொண்டநான் விரும்பவில்லை;
அண்டியவனைக் காவா ஒருவன் சிறந்தவனாயினும்
அவன் சிறப்பின் பயன் என்ன? கைவிடுதலே மேல்! 16

இராவணனை அண்டிப் பணிவிடை செய்யும் விருப்பமும்
என்மனதில் எழுந்ததால், இங்கு வந்து சேர்ந்திட்டேன்
உடன் உள்ளான் அங்கதன். உயர்ந்தோன் இராவணன்
உயர்ந்தவனாகவே என்னிடமும் நடப்பான் அன்றோ? 17

அண்டியவர் குணமுணர்ந்து காக்கும் குணமுடையோன்;
என்னை திண்ணமேற்றுக் காப்பான் என்றெண்ணுகிறேன்;
அவன் மலரடித் துகளே எனக்கு மணம் பரப்பும் வாசனை
துகள்கள் என்றெண்ணி அன்புகொண்டேன் அவனிடம்; 18

தாமதமின்றி என் மனவிருப்பத்தை நிறைவேற்றி
துறவிக்கோனே! உடனே அவனைக் காட்டிடுவீராக!
உயர்ந்த உள்ளம் படைத்த மகான்கள் உலகில்
வேண்டுவோரின் வேண்டுகொளை ஏமாற்றுவதில்லையே!? 19

ஆதலின் அதிவிரைவில் அரக்கன் இராவணனிடம் என்னை
அழைத்துச் செல்லுங்கள்; நன்மை உண்டாகட்டும்; உமக்கு
அக்குணக்கடலுக்கு சேவை செய்யும் வாய்ப்பும் நல்வினை
பயனாலன்றோ? நானும் செய்நன்றி அறிந்தவனாவேன்;'' 20

''ஹே! அனுமனே! வானரனே! நீ நல்வினை செய்தவனே!
இது திண்ணம். அதுவே காரணம், நன்மதி உதித்தமைக்கு;
அரக்கர் தலைவனாம் ராவணனுக்குகந்த சேவை
செய்து வீரனே! பிறவிப்பயன் பெற்றிடுவாய்! 21

கந்தலை உடுப்பாய் உடுத்துக் காட்டில் அலைந்து கொண்டு,
இராச்சியமிழந்து பிரிவினையில் வருந்தும் இராமன் எங்கே?
ஆரவார ஒப்பனைகளும் அழகிய வடிவழகும் அமைந்தே
திக்குயாவும் வெற்றிகொண்ட தசகண்டன் எங்கே? 22

எவனது பெயரைக் கேட்ட மாத்திரத்திலேயே
மனது அச்சத்தினால் நடுங்கி எதிரிகள் ஒடுங்குகின்றனரோ-
தரணி முழுவதும் அவன் தன்னாதிக்கத்தில் கொண்டு
பொங்கு புகழ் பெற்று ஆதிக்கம் செலுத்துகிறவன் 23

மனம் மொழி மெய்ச்செயல் என்னும் மூன்றையும்
ஒருங்கிணைத்தே விதிமுறைப்படி பணிவிடை செய்,
அனுமனே! தன்னை அண்டியவர்களிடம் கருணை கொண்ட
உள்ளத்துடன் இராவணன் உன்னை ஏற்றிடுவான் திண்ணம்; 24

இது நாள் வரை நீ சேவை செய்த ராமனோ,
இளவயதினிலியே துறவி வேடம் பூண்டவன்!
இராமசந்திரன் என்னும் புகழ் கொண்டவன்; ஆனால்,
அவனோ காசியாண்டி; சிறுமதி கொண்டோன் 25

அளவிடமுடியா ஆற்றல் படைத்த அரக்க மன்னன்
இராவணனுக்குப் பணிவிடை செய். வேறுபாடு உணர்வாய்;
உலகில் உயர்ந்த இரத்தினமாய்த் திகழும் இராவணன்
உன்னை இரத்தினக் குவியலில் மூழ்கடிப்பானன்றோ? 26

தன்னை அண்டியவர்களையும், அடியார்களையும், மதித்துக்
கௌரவம் அறிந்து நடத்துபவன் அவனன்றோ ஆவான்?
இராமனிடம் தன்கௌரவம் இழந்தே குன்றியது
உனக்குக் கிட்டும் கௌரவமும் இங்கு காண்பாய். 27

ஆதலால் இப்பொழுதே இராவணனிடம் சென்றடைந்து,
அண்டியவரைக் காப்பவனைச் சரணம் என்றடைந்துவிடு;
இது திண்ணம்; அவன் இணையடி மலர்களை அன்புடன்
பேணிக்காத்து மதிக்கும் உனக்கு நற்பயன் கிட்டிடுமே!" 28

மனத்திற்கு வந்த சொற்களைப் பரிவுடன் உரைத்திட
மிக்க அன்புடன் இராவணனின் இராக்கத ஆசானிடம்,
காற்றின் மைந்தனாம் அனுமன் ஆதரவு மிக்க
வார்த்தைகளை வேகமாக வடிதிட்டனனே: 29

''உங்கள் உரைப்படி துறவியே! நடக்க விரும்புகிறேன்;
ஐயிருகண்டனின் அருகாமை அணுகுவேன், நொடியிலே;
ஆனால் எதிரியின் பக்கமிருந்து வந்தவன் என்பதறிந்தே
என்னை ஏற்க மறுத்துவிடின், எல்லாம் வீணாகிவிடுமே! 30

அனுமதிக்கமாட்டான், ஒருக்காலும், என்னை அணுகிட;
அறிந்துள்ளான் அவனுக்கு எதிரியாக நான் செய்த பணி;
கொள்வான் கடுங்கோபம் என்னைக் கண்டதுமே திண்ணம்;
ஐயமில்லை ஏதுமிதில் இதுவே எனக்கு அச்சமளிக்கிறது; 31

உள்ளத்தில் சினத்தீ கொழுந்து விட்டெரிய
என்னைக் காண்பதையே சிறிதும் பொறுக்கமாட்டான்;
நான் சரண் அடைவதை அறிய முயற்சிக்காமல்,
என்னைக் கொன்றாலும் கொன்றிடுவான் அன்றோ? 32

என்னுடன்வரும் என்னருமை மகனுக்கொப்பான
அங்கதனைக் கத்தி வீச்சினால் கொன்றிடுவானே!
அவன் வாள் வீச்சோ வச்சிரத்தின் வீச்சொப்பதே
அவனைக் கண்டதுண்டமாகச் செய்திடும் முனிவரே! 33

மதியிற் சிறந்தோனும் விவேகமுடையோன் ஆயினும்;
சாத்திரங்களை நன்கு கற்றறிந்து ஓதுபவனேயாகிலும்,
சினத்திற்காளாகி அவ்வழியே செல்பவன் எவனாகிலும்,
தக்கதிது தகாதிதென பகுத்தறியும் திறனை இழக்கிறான்; 34

எந்தை! இவ்வாறே நடக்கும் என எண்ணுகிறேன் நான்;
என் மனதிலும் இவ்வையப்பாடே நிறைந்துள்ளது;
எதிர்பாரா முறையில் இவ்வாறே நிகழ்ந்திடில்,
விரும்பத்தகா அல்லலும் வேதனையுமே விஞ்சிடுமே! 35

இத்தகாத செயல்களைத் தடுப்பதே எங்கள் விருப்பமும்;
இதையே நமக்கு நன்மைபயப்பதாகவும் கருதுகிறேன்;
ஆதலின் உங்கள் வருகையை விரும்புகிறோம்
உடனேயே உங்கள் விருப்பமும் அதுவேயாகில் 36

''ஆகட்டும் அப்படியே'' என முனி உரைத்த காலையில்,
கபிவரர்களுடன் தவசீலரும் சேர்ந்து செல்லுகையில்,
மாருதி ராவணனைக் காண விரைந்தே சென்றிட
அங்கதனையும் உடன் வரும்படி ஆணையிட்டனனே! 37

போகும் முன்னரே வானரவீரன் பெரும் தவசியின்
கோபுத்திர முனிவரிடம் இங்ஙனம் உரைத்திட்டனனே:
''முனிவரே! தாமதமின்றி கூட்டினையும் உடனெடுத்துவாரும்
அல்லது ரகுவம்சத்தவர் இதனைக் களவாடிச் செல்லலாமே! 38

இக்கூண்டினுள் புலஸ்த்திய வம்சத்தில் வந்தோன்-
இராவணனின் மகிழ்ச்சிலாழ்த்தும் ஆன்மா உள்ளதே!
அதை மிகவும் கவனத்துடன் காத்தல் இன்றியமையாததே;
அதனால் காக்கும் விதியை ஒருமித்த மனதுடன் கேள்: 39

தவச்செல்வர் முனிவர் குடிலை விட்டு வெளிவந்ததைக்
கபடம் நிறைந்த ரகுவம்சக் கொழுந்து அறிந்து
தானே வந்திதனை அபகரித்துச் செல்லக் கூடுமன்றோ?
வசியக்காரன் நடத்தை இன்னதென்று கூற இயலுமோ! 40

அதனால் தங்களுடனேயே கூட்டை எடுத்துச் செல்லுங்கள்;
நம் எதிரிகள் கையில் கிட்டாமல் கவனமாய் இருத்திட;
இல்லையாகில் பெரும் அனர்த்தம் நிகழும் நமக்கு;
இந்த என்வார்த்தையை நன்கறிந்து கொள்வீர்! 41

முனிவரோ தூய்மையுள்ளம் படைத்தவர்; வெகுளியானவர்;
நற்சுபாவம் கொண்டதால் மாருதி மனம் அறியவில்லை;
வானரவீரனின் வார்த்தைகளைக் கேட்டுணர்ந்தே
தன்னுடன் கூடவே அக்கூண்டை எடுத்து வந்தனரே 42

காற்றின் மைந்தனுடனும் கபிவரன் அங்கதனுடன்
தவச்செல்வர் இலங்கையை வந்தடைந்த தருணமே
முன்பின் கேட்டிராததும் சிந்திக்கவெண்ணாததுமான
கொடிய பெரும் சிக்கலொன்று ஏற்பட்டதன்றோ? 43

தவச்செல்வர் அவ்வழி பிரதேச எல்லை கடந்து
இராவணன் தலைநகர் இலங்கை நெருங்கி வந்திட
கூண்டிலிருந்த அவ்வான்மா கூண்டை விட்டு வெளிவந்து
அவரைப் பின்தொடர்ந்து அவருட்புக முனைந்ததே! 44

இச்சூழலில் அவ்வான்மாவைக் கொல்வதும் எளிதேயாம்
ஆனால் தவச்செல்வர் மனமும் அப்பணி செய்ய இயையுமோ?
இனி என் செய்வதறியாமல் மனம் மிக நோகப்
பெரும் சிக்கலும் கவலையும் அவர் மனதில் குடிகொண்டதே! 45

இவ்வாறு சிந்தனையிலாழ்ந்து மௌனமாகவே
மனக்கவலை மிக, செய்வதொன்றும் அறியாமலே
இங்கிருந்து செல்ல மனமிசையாமல் சிந்தனையிலாழ்ந்த
முனிவரிடம் பணிவானவார்த்தை பகர்ந்தனன் அனுமன்: 46

''தவக்கோனே! இவ்விரு சேவர்கள் உங்களது ஆணைக்கு
அடிபணியக் காத்துள்ளோம்; ஏனோ மனக்கவலை?
உங்கள் மனதை ஆட்கொண்ட கவலையைக் கூறுமின்
இப்படி மனக்கலக்கத்துடன் இருத்தலும் ஞாயமோ?'' 47

அவ்விருவரின் உரைகேட்டு மன அமைதி பெற எண்ணி,
தவச்செல்வர் தன் மனக்கவலைக்கான காரணத்தைக் கூறிட,
செவிமடுத்த காற்றின் மைந்தனும் கற்றறிந்த நிபுணனும்
உறுதியான வார்த்தைகளை உசிதமாகவே உரைத்தனனே: 48

''இல்லையே இதில் மனக்கவலை கொள்ள ஏது ஏதும்
இவ்விதம் நீங்கள் தன் மனம் தளரவிடுவதும் நியாயமோ?
இங்கே வானரன் அங்கதன் வளாகத்தில் நின்றிருக்கட்டும்;
பின் தொடர்ந்து வருவேன், உங்களுடன் நான் ஒருவனே! 49

அங்கதன் வானரன் கையில் கூண்டிருக்குமேயாகில்,
அவசியமில்லையே அதிலிருந்து ஒருவரும் வெளிவர!
ஆதலின் அங்கதன் இங்கெல்லையில் இருக்கட்டும்;
நாம் இருவரும் பத்துத்தலையோனைச் சந்திப்போமே!'' 50

''அப்படியே ஆகட்டும்'' எனத் தவசீலர் உரைத்திடவும்;
கூண்டோ அங்கதன் கையினில் அடைக்கப்பட்டதே;
அனுமனும் முனிவருமே அங்கு அந்நேரத்தில்
இராவணன் இருப்பிடம் இயைந்து சென்றனரே! 51

அப்பாதையில் சிறிது தூரம் சென்றடைந்த நேரம், காற்றின்
மைந்தன் கோபுத்திர முனிவரிடம் கூறினான் அன்றோ: 52

''முனிவரே! மறந்து விட்டேனே செய்தி ஒன்றுரைத்திட
அங்கதனிடம் நொடியினில் திரும்பிடுவேன், காத்திடுவீர்;'' 53

முனிவரும் சம்மதிக்க, காற்றின் மைந்தன் காற்று வேகத்தில்
நகர்ந்து சென்று நொடியில் அங்கதனை அடைந்து கூறினன்; 54

''குழந்தாய்! கூண்டை என்னிடம் கொடு நான் செய்யவேண்டிய
நம் எல்லோர் விருப்பத்தையும் பூர்த்திசெய்பணி ஏற்பனே; 55

கூண்டிவிருந்து இராவணனின் ஆன்மாவை வெளியில் எடுத்தே
வேறொரு புதிய ஆன்மாவை உடன் பதிலுக்கதில் இட்டனனே;56

அனுமனாணை அனுசரித்து அங்கதன் ஆங்கே அதுசமயம்
கடற்கரையில் குழித்தோண்டி வெளிவராமல் புதைத்தனனே; 57

இவ்வாறு அங்கதனால் ஆழமாக மண்ணிலிடப்பட்டதால்
இவ்வான்மா இராவணனைப் அடையும் வழியிற்றழிந்ததே 58

வில்வீரனாயினும் இராவணன் ஆன்மாவிழந்ததால்
இராமர் எய்திய கூரம்புகளுக்கு இரையானனே 59

இராவணன் மாண்டான்; இராமனின் பக்தன் அனுமனின்
தகுந்த யுக்தி பத்துத் தலையோனின் விதியென ஆயிற்றே 60

தலைவனின் நன்மைகோறி ஒன்றாகக் குவிந்த மனதுடன்
தங்கள் உயிரையும் பணயம் வைக்கின்றனர் சேவர்கள் 61

நம்பத்தகாதவனை நம்புதல், நம்பிக்கைக்குரியவனை முழுதும்,
நம்புதலும் கூடாது. தத்துவமிதை உணர்த்துவது தாயீ ராமகதை!62

நேர்மை வெகுளி சுபாவங்கொண்ட கோபுத்திரன் தீதடைந்தான்;
அனுமனிடம் வைத்த அசைக்கமுடியா நம்பிக்கையினாலே 63

மிக்க வல்லமை கொண்டவன், அழிவிற்குக் காரமணமாயினன்.
தன்னன்பிற்குப் பாத்திர சீடனைப் பகைவனை நம்பியதாலன்றோ
64

# 18

# அரக்கன்

# மஹீபாலதேவனின் கதை

இராவணன் காலனின் உலகை அடைந்ததும்
இராமனும் தன்னைச் சார்ந்தோருடன் திரும்பியதும்;
நடந்த நிகழ்ச்சிகள் ஒன்றையும் அறியாதவனாகவே
இலங்கை நகரை அடைந்தனன்; மஹீபாலதேவன் 1

பிரதாபம் மிகக் கொண்டவன்; இராவணின் நண்பன்;
பிரதேசமாம் சக்ரவாலத்தை ஆண்டு வந்தனனே!
நண்பனைக் கண்டு காலம் மிக ஆயிற்றே எனக் காணும்
ஆவல் மனதில் மிகக் கொண்டே வந்தடைந்தனனே. 2

இவ்வெண்ணத்துடன் இலங்கைநகர் அடைந்தவுடன்,
நடந்த விவரங்கள் கேட்டே நொந்து மனம் மிக
கோபக்கனலின் தீப்பொறிகள் பற்றி எரிந்திட
அறிந்து கொண்டான், அங்கு நடந்த விருத்தாந்தங்களை. 3

'என் நண்பன் உலகநாதன் இராவணன் அந்தோ உடன்
பிறந்தோன் துணைகொண்ட இராமனால் கொல்லப்பட்டான்.
அவன் இறப்பிற்கு பழிக்குப் பழி வாங்கியே தீருவேன்
உற்றாரிடம் அன்பு கொண்ட நன்றி தெரிவித்தே. 4

துர்மதிகொண்டோன் என் நண்பனைக்கொன்று விட்டு,
அவன் இராச்சியத்தை ஏற்று புகழ் நாட்டுகின்றான்.
உடன் பிறந்தோன் ஆட்சியைத் தான் ஏற்று அனுபவிக்கும்
சுயநலம் கொண்டவன் கொல்லத்தகுந்தவனே, திண்ணம் 5

கொடும் பணிபுரிவோன் இவ்வாறு மனதில் சிந்தித்தே உடன்
வீரர்களால் மறைத்து காக்கப்பட்ட இலங்கையைத் தகர்த்தான்;
கலக்கம் மிக்க அடைந்தனனே; எதிர்பாரா எதிர்ப்பைக் கண்டே
இராவணன் தம்பி, நாட்டை ஆள்பவன் திடீரெனவே 6

இராச்சியாபிஷேகம் செய்து அரசாட்சியை ஏற்கும் நேரம்
தன் பெயர் மாற்றி வைப்பது பாரம்பரிய முறையன்றோ?
இங்கும் அதுபோல் அரசை ஏற்றுக் கொண்ட மன்னன்
தசகிரீவாம்சம் என்னும் நூதனப் பெயரையும் ஏற்றானன்றோ? 7

இராவணனைப் போன்ற தளரா சக்தியும் பெற்றானில்லையே;
அவனைப் போல் ஆளும் திறமையும் பெற்றானில்லையே.
அதுவே காரணம், அவன் மனதில் கவலையும் குழப்பமும்
மேலிடச் சிந்தை பெருக்கெடுத்து ஓடியதன்றோ 8

இனி செய்ய வேண்டியது எது என்னும் கவலையே
மனதில் பரந்து நிரம்பிட ஒவ்வொரு நொடியும் கழித்தனனே;
திடீரென கவலைமிகப் படர்ந்து சோர்ந்த அவன் நினைவில்
இராமனின் இனிய மொழிகள் மனதில் ஆங்கே உதித்தனவே! 9

இலங்கையை வெற்றிகொண்டு தன் தேசம் திரும்பிட நினைத்த
இராமன் அது சமயம் அவனைக் கண்டு உரைத்தனனே;
இராவணனின் உடன் பிறந்தோனின் திறன் குறையறிந்த
இனி, அவனைப் காக்கும் வழியினையும் உத்தேசித்தே 10

''ஆருயிர் நண்பனே! எந்நேரம் ஆபத்து நேரிடுமாகில்
உடனே அது குறித்து எனக்குத் தகவல் தெரிவித்திடு
அந்நிலையில் அச்சிக்கலை நீக்கிட தக்கதொரு உபாயம்
உனக்கு நல்கிடுவேன் நானே கவலை விட்டொழி'' என்றனன் 11

''இன்று முதல் வாரம் ஒரு முறை தவறாமல் கூர்மையான
அம்பொன்று நானுனக்கு அனுப்பி வைத்திடுவேன்;
உனக்கு ஏதாகிலும் விபத்து நேரிடின், அது சமயம்
அவ்வம்பில் கடிதம் வரைந்து விவரம் அனுப்பிவிடு;'' 12

இராமனின் அன்புகலந்த சொற்களை நினைவு கூர்ந்தே;
இராவணின் தம்பி அச்சம் மிக ஆட்கொண்டகாலை
அம்பில் கடிதம் ஒன்றை கட்டியே அனுப்பிவைத்திட
அதுவும் ரகுபதியை விரைவில் வந்தடைந்ததே. 13

ஆபத்துக்கடலில் மூழ்கி தத்தளிக்கும் அவனையறிந்து,
தான் முன்பு கூறிய வார்த்தைகளை நினைவுகூர்ந்தே,
அனுமனை அழைத்திட்டே ஒப்பற்ற தன் பக்தனான
பக்தியில் சிறந்தோனை தலைவனும் ஆணையிட்டனனே 14

''ஹே! அனுமனே! நம் உயிரொத்த நண்பன் திடீரென
கொடும் விபத்தில் மூழ்கியே தவித்துத் தத்தளிக்கிறான்;
பத்து தலையோன் நண்பன் மஹீபாலன் என்னும்
அரசன், அவன் தலைநகரை முற்றுகையிட்டனனே. 15

இதர கவலைகளை விடுத்து நேரே இலங்கை செல்;
நம்முற்ற நண்பனுக்கு உதவி செய்து, இடுக்கண் களை;
ஆபத்து வந்தடைந்து அல்லலுற்று உயிர் வாழ்வோருக்கு
உடன் உதவி செய்வது இன்றியமையாததாகும்.' 16

இராமனின் ஆணையை உடனே ஏற்றிட்டே,
ப்யானுஜம் என்னும் புதியதொரு பெயரும் ஏற்றே,
நவ என்னும் நகரத்தை ஆளும் பொறுப்பும் ஏற்றே,
இராவணன் தம்பியின் நகரை சடுதியில் விரைந்தனனே. 17

குறுகிய காலத்திலேயே வீரன் அந்நகரம் அடைந்து,
மஹீபாலன் என்னும் வீர அரக்கனைச் சந்தித்து
மல்யுத்தத்திற்கு அவனைத் தயாராக இருக்கச் செய்து,
கூறினன் 'நானிதோ உன் காலன் வந்துள்ளேன்' 18

சூரிய சூலமொத்த கர்ணகடூரமான வார்த்தை செவியில் விழ,
சினத்தினால் கண் சிவக்க சிங்க கர்ஜனை செய்துகொண்டே,
காற்று வேகத்தில் பாய்ந்தனன், காற்றின் மைந்தன்மேல்
இருவருக்கும் அந்நொடியே கடும் போர் மூண்டதம்மா 19

மாபெரும் வீரர்கள் இருவரும் துவந்துவப் போரில் முனைந்தே
தம்தம் மானமும் மரியாதையும் காக்கும் மனங்கொண்டே
தங்கள் தங்கள் சக்தியையும் ஆயுதங்களையுமே நம்பி,
எடுத்து வந்தனர் பகைவர் ஒருவரையொருவர் நோக்கியே; 20

மாவீரனாம் வானரனைத் தம்முன் நோக்கியே;
புல்போல் வலிவற்றவனாகக் கருதிக் கூறினனே;
இங்கிருந்து போய்விடு உன்னிடம் போரிட விருப்பமில்லை;
குரங்கின் குணம் உன்னால் நன்கு காட்டப்பட்டதே 21

'சக்ரவால தேசமாளும் மாமன்னன் நான் அன்றோ?
எட்டுத்திக்கிலும் புகழ் ஓங்கிப் பரவிய தலைவன்
இருக்கையில் இன்று ஒரு குரங்கிடம் போரிட
உண்மையில் ஏளனம் செய்வார்கள் யாவருமே என்னை 22

துவந்துவ போர் சமவீரர்களிடம் நடப்பதாகில்
புகழத் தகுந்ததாகும். மற்றவரிடம் இல்லையே
ஆஹா! இது விந்தையல்லவோ? கூறிடுவர் ஒரு பக்கம்
அரக்க அரசனும் பிறிதொன்றில் ஓர் வானரனும்!'' 23

''உள்ளக்கருணை மிகக்கொண்டே விடுவிக்கிறேன் உன்னை;
கிளையில் தாவும் மிருகமே ஓடித் தன்னை காப்பாற்றிக்கொள்;
என் கைகளினால் அழுத்தி உன்னங்கங்களை நொறுக்கிடின் விதி,
உன்னை இட்டுச் செல்லும் உன்வினைக்கேற்ற இடம்!' 24

அரக்கனின் அவலமொழிகளைக் கேட்டு நன்காராய்ந்தே
இடிமுழக்கம் போன்ற கம்பீரக் குரலில் கபி கூறினனே;
'வலிமையற்றவன் என்பதும் வலிமை கொண்டவன் என்பதும்
பிறப்பிலமைவதில்லை; இதை முதற்கண் அறிந்துகொள்.'' 25

''குரங்கென்று என் வலிமைக்கு குற்றங்குறை ஏதுமில்லை;
அரக்கனாதலால் உனக்கு வலிமை பெருக்கெடுப்பதன்று;
அதைச் சோதனை செய்தே பார்ப்போம் மற்போரிட்டே
வலிமை காண வாய்ச் சொற்கள் பயன்பட மாட்டா.'' 26

வானரனின் இவ்வசனங்களை நன்கு செவி மடுத்தவன்
தன்னை அடக்க முடியாமல் உடனே பாய்ந்தே குதித்தான்;
வானரனும் அடிமேல் அடி கொடுத்து நொறுக்கினனே!
முன்காணா கடும் போர் ஆங்கு நடந்ததன்றோ? 27

இருவீரர்களும் மல்யுத்தத்தில் தத்தம் திறனை மார்பில்
கைகள் தோள்கள் உள்ளங்கைகள் என அடித்துக்குத்த;
ஒருவரையொருவர் தாக்க அங்கங்கள் சிதறி காயமேறிட;
செம்மலைதோன்றி பெருகி ஓடும் நதிநீரொளி ஒத்ததம்மா. 28

தன் செயலை தாமதமின்றி முடிக்க விரும்பும் வானரன்,
காற்று வேகத்தில் அவ்வரக்கனை தூக்கியெழுப்பியே;
தைரியம் மிகக் கொண்ட வீரன் மேலே சுழற்றி சுழற்றி
ஆகாயத்தில் மேலிரு துண்டுகளாகக் கிழித்து எறிந்தனனே! 29

இரு துண்டுகளாய் வீழ்ந்த அவன், அக்கணமே
ஒன்று சேர எழுந்தான். வியப்பை அளித்தான் வானரனுக்கு!
இவ்வரக்கனை கொல்லும் வழி தான் என்ன என்னும்
கவலையிலாழ்ந்தனன்; உடன் உபாயத்தையும் அறிந்தனனே 30

நோக்கி வானரனை உரைத்தனன் விபீடணன்
'அவனுடைய மார்பை கிழிக்காதவரை
பரந்த உலகில் எவராலும் இக்கொடிய
அரக்கனைக் கொல்லுதல் இயலாததே. 31

'இனி கவலையை விடு. அவனது மார்பைக் கிழி;
கெட்ட அரக்கனின் மார்பு விநோதமானது.
இவ்வார்த்தைகளைக் கேட்ட அனுமன்
கிழித்தனன் மார்பை நொடிப்பொழுதினிலே 32

மார்பைக் கிழித்ததும் உயிர்பிரிந்தே
மண்ணில் வீழ்ந்தான் தசகண்டனின் தோழன்;
செய்ய வேண்டிய செயலைச் சாதித்தே வீரன்
அனுமன் தன்னிருப்பிடம் திரும்பிச் சென்றனனே! 33

இவ்வாறு முன்கொடுத்த ராமவசனம் கேட்டே அனுமன்
கொடும் அல்லல்களிலிருந்து காத்தான் விடணனை! 34

# 19

# இலங்கையில் குழப்பக் கதை

இராவணன் காலன் வசப்பட்டு உயிரிழந்திட
இளையவன் விபீடணன் இலங்கையைக் காக்கவும்,
பத்துத்தலை இராவணனின் பட்ட மஹிஷி பெருந்தேவி
மந்தோதரி என்னும் பெயர்கொண்டவள் இருந்தனளே 1

தன் சகோதரன் மனைவியை, மன்னன் இப்பொழுது
தன் மனைவியாகக் கொண்டானே, விபீடணன்.
தன் வயிற்றில் தாங்கியே இராவணனின் வீரியத்தைக்
காலப்போக்கில் மகன் ஒருவனை பெற்றெடுத்தாளே 2

வைணாசுரன் என்னும் பெயர்கொண்ட அக்குழந்தையும்
வளர்ந்து நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாய்
வரணீசுரன் என்னும் சேவகனை இளைஞனாகவே தன்
ஆதிக்கத்தில் கொள்ள அவனும் நற்பணிவிடை செய்தான் 3

அவன் தன் தகப்பன் அரக்கர்தலைவன் இராவணேச்வரனின்
நற்குணங்களையும் தீய குணங்களையும் எடுத்துக் கூறியதோடு
அவன் தம்பி விபீடணன் செய்த பெருஞ்செயலாலன்றோ
எதிரியையாதரித்து உதவிய அனுபவமும் தெரிவித்தனனே 4

தந்தை எதிர்கொண்ட நியாயமற்ற இன்னல்களை அவன்
தம்பி மூலம் ஏற்பட்ட பல இடுக்கண்களையும் கேட்டிடச்
சூலமொப்ப அது தன் செவிகளைக் குத்தி புண்படுத்த
மனம்நொந்து, தந்தையை பரிந்து பழிவாங்க எண்ணினனே 5

அரக்கர் குலத்திலேயே பிறந்து வளர்ந்து ஆளாகியவன்,
எதிரியின் பக்கம் சேர்ந்து எந்தை மரணத்திற்கு ஏதுவானவன்
எல்லோரையும் எதிர்த்து வெல்லும் திறங்கொண்டோன்
உறவினர் பகைமை உலகில் எதைத்தான் சாதிப்பதில்லை? 6

'உண்மையிலேயே நான் தசகண்டனின் மைந்தனாகில்
அவனுக்கேற்பட்ட அவமானத்தைத் துடைப்பதும் என்கடனே;
மைந்தன் என்பவன் உண்மையில் அவனே, எவன் தன் தந்தைக்கு
பிறரிழைத்த தீவினையழித்து, உலகில் வாழ்கின்றவனோ 7

இச்சிந்தனையிலாழ்ந்த மனமுடையோன் சென்று கண்டான்;
தந்தை நண்பன் மலிவான் தேச மன்னனிடம் கூறினான்
ஸ்ரீசக்ரவர்த்தி என்னும் பெயருக்குப் பொருந்தியவனிடம்
தன்னுள்ளக் குமுறலையும் தனக்கெழுந்த எண்ணங்களையும் 8

தன் நண்பன் இராவுணனின் மைந்தனாயினும் ஏற்றே
தன் மகனைப் போல் அன்புடன் பேணிக் காத்தவன்
கோறிய அவனது வசனங்களை ஆராய்ந்து விளித்திட்டான்;
"மகனே! உன் விருப்பம் எதுவோ, முயல்வேனது ஈடேற 9

பத்துத்தலை இராவணன் பராக்கிரமம் பொருந்தியவன்;
திசைகளையெல்லாம் வென்ற வீரன் ஆருயிர் நண்பனாவான்;
அரணியவாசம் செய்யும் இராமன், அவன் உயிர் பறித்தான்;
ஆனால் இராமனின் குறிப்பிட்ட வீரம் அதிலேதுமில்லையே! 10

'தன் உடன்பிறந்த பந்துவான விபீடணனே, தன்னுடன்
பிறந்தோனின் எதிரியைச் சரணடைந்தே வெற்றிக்கொண்டான்;
பகைவனின் செயலிலுள்ள குற்றங்குறைகளையும் ஏற்றத்
தாழ்வுகளையும் பகைவனுக்குப் பறைந்திட்டான் அவன் 11

'உலகில் தண்டனைக்குரியவன் உண்டென்றால் அவன்
தன் உறவினர்களுக்கு தீங்கிழைப்பவனே ஆவான் அன்றோ?
புறப்படு, பெரும் சேனையுடன் இலங்கையை நோக்கி
நொடியில் அவனைக் காலனிடம் அனுப்பிவைப்போம்!" 12

உரைத்தகாலை மலிவன் மன்னன் இராவணனின் மகன்
வைணாசுரனுடன் பெரும் சைனியமும் சூழ்ந்திட்டே
படையெடுக்க நிச்சயித்து தொல்லிலங்கையின் மீதே
முற்றுகையிட்டனனே, தன் முடிவைத் தீர்மானமானித்தே 13

பேஞ்ஜகயீ என்னும் அசுரத்தலைவனின் மகள் வழி
வந்தவனும் அனுமனின் புதல்வனுமாக அவதரித்தவன்
அசுரபத் என்னும் பெயர் கொண்டவன், வீராதிவீரன்,
விபீடணனின் அருகிலேயே உடன் வாழ்ந்து வந்தனனே! 14

இலங்கை நகரத்தை இவ்விதம் மலிவன் மன்னன்
முற்றுகையிட, எதிர்க்கும் திறன் அற்றவனாய்
வெளிச் சென்றனனே ஆழ்ந்த கவலையுடன் தன் தந்தைக்கு
அல்லலாபத்து அதனை அறிவிக்கும் ஆவல் கொண்டே. 15

அச்சந்தரும் வெல்லுதற்கரிய வீரம் கொண்ட பகைவனை
எதிர்த்துப் போரிட உதவியும் தேவை என எண்ணியே
கவலையில் மனங்கவிய அரக்கனிற் சிறந்தோன் உடன்
கால தாமதமின்றியே முயற்சியில் ஈடுபட முயன்றனன். 16

ஏதோ ஒரு மலையினில் தவத்தில் ஆழ்ந்துள்ளார் தந்தை
என்னும் குறிப்பை அறிந்தே கல்விகேள்விகளில் சிறந்தோன்
மலையினின்றும் மலையென ஒவ்வொன்றாகத் தாவிச் சென்றே
தன் தகப்பனைத் தேடும் பணியை செயல்படுத்தினன் 17

ஆங்கோர் மலையுச்சியில் கண்டான் மாவீரன்,
தவத்தில் ஆழ்ந்திருக்கும் தவக்கோன் ஒருவரை
அத்தவசி தன் தந்தையாக இருக்கவும் முடியுமோ
என்னும் ஐயமே மனதினுள் முதலில் தோன்றியதம்மா. 18

வனத்தில் தன்னிச்சைபோல் வளையவரும் வானரத்தலைவன்
அனுமனோ ரசம் நிறை சிறந்த சுவையான மாங்கனிகளைப்
பழுத்துக்குலுங்கும் சோலையில் கண்டு, தன்மனங்கவர,
அவை புசிக்க விரும்பியே அதன் அருகில் அணுகினன் 19

காம்பினின்றும் பிறிதாக பறிக்கப்பட்ட அம்மாங்கனிகளை
உண்ண சுவை மிகுதியால் நாவில் சுரந்த நீரோ
வழிந்து பெருகி தன்னுடல் மேல் வீழ்ந்திட, அனுமனும்
பனியினால் மூடியதொப்ப வெண்ணொளி கொண்டனனே. 20

தன்னிரு கரங்களினால் அச்சுவை நீர்ப்பெருக்கை
துடைத்திட எண்ணினன், வானரத்தின் குணம் கொண்டே
கைகளினால் துடைக்கப் பரிகசிக்கும் பொருளானானே
அவனைக் கண்ட அங்கு குழுமியிருந்த மங்கையர்களின் 21

வனிதைகள் தன்னைப் பார்த்துப் பரிகசித்ததைக் கண்டு
வெட்கம் மிகக் கொண்டே, அவமானமும் அடைந்தனனே;
இந்த அவமரியாதையைத் துடைத்திட தகுந்த உபாயம்
தவம் மேற்கொள்வதே என மனதில் எண்ணினன் அன்றோ?
22

தவம் மேற்கொள்ள எண்ணி திஷ்பைல் என்னும் பெயராம்
தவச்சீலரை வானரோத்தமன் கண்டு அணுகினனே;
ஆனால் வானரம் ஒன்று கடுந்தவம் செய்வதும் தான் எப்படி?
என்ற பெருங்கவலையைக் கருத்திற் கொண்டார் முனிவர்! 23

சிந்தனையிலாழ்ந்த அத்தவசீலர், அந்நொடியில் வானரனை
நரனாக்குவதே உசித உபாயம் என்றெண்ணியே
சிந்தித்தும் மற்றுமோருகந்த உபாயத்தைச் காணாதவராய்,
அவனை மானுட உருவத்தில் மாற்றி அமைத்தனரே. 24

மானுட உருவங்கொண்ட அனுமனும் மலைச்சிகரத்தில்,
மேற்கொண்டான் கடுந்தவம், நிட்டையில் அமர்ந்தே;
அந்நேரத்தில் அசுரபத் என்னும் அவன் தன் மகனே;
அவ்விடம் வந்தனனே தேடும் பணியில் அலைந்தலைந்தே; 25

கண்டனன்; கேட்டனன்; அவனை இவ்வாறே நல்லோனே!
''கண்டதுண்டோ இங்கு அலைந்து திரியும் நீ அனுமனை?''
அனுமனோ அவனை நோக்கி 'அப்பனே! நீ தேடும்
அவ்வனுமன் நானே நீ தேடும் காரணம் தான் என்னவோ?' 26

வார்த்தை கேட்டே கோபம் மேலிட்ட அவனும் மிகக்
கடுமையான வார்த்தைகளை இரைந்தே உரைத்தனனே:
'பொய் புகல்வதும் உனக்கழகாகுமோ? இவ்வாறு
பொய்யுரைக்க நாணமும் கொள்ளாயோ நீ?'' என்றனன்; 27

''என் தந்தை வானரன் அனுமன் எனப்படுபவர்;
நீயோ தவச்செல்வம் மிகப்படைத்த துறவி, நரனாவாய்
தன்னை அனுமன் என உண்மையற்ற வார்த்தைகளைப்
புகல்கிறாயே. அனுமன் நரனாவதும் எப்படியோ?'' 28

'தவசீலரே! மேலும் உலகில் மிகச்சிறந்தோனும் எனது
தகப்பனுமான அனுமனின் சக்தியை அறிவாயோ நீ?
பண்டு ஆதவமதிவிண்மீன்களை கனிகள் என்றெண்ணி
விண்ணிலிருந்து எடுத்து உண்டவன் அல்லவோ அவன்?'' 29

தன்மகன் வாயினாலேயே தன்புகழ் பெருமை கேட்டே
அனுமன் மீண்டும் அவனை நோக்கிக்கூறினனே:
'ஆகாயவீதியில் அமைந்துள்ள சூரியமதிதாரகைகளை
எல்லாம் உண்டு களித்தவன் நானே; உண்மை இதுவே'' 30

'நான் தவம் செய்ய விருப்பங்கொண்டே, தற்சமயம்
மனித உருவங்கொண்டேன் என்பதை அறிந்திடு;
என் வார்த்தையில் நம்பிக்கை இல்லையாகில்அந்தோ
சற்றே பொறுத்திடு; உனக்கு நம்பிக்கை யூட்டுகிறேன்!'' 31

கூறியே தன் உண்மை உருவை ஏற்றுக் கொண்ட
அனுமனோ தாரை சந்திரன் பரிதி யாவற்றையும்
ஒரே நொடியொன்றில் விழுங்கியும் விட்டானன்றோ? மகனோ,
ஆச்சரியத்தில் ஆழ்ந்தே வியப்புடன் கண்டானதை! 32

அவனது அப்புத்திரனோ அவனடிகளில் வீழ்ந்து வணங்கியே
அடிமலர்கள் இரண்டையும் பற்றிக் கொண்டான் பயத்துடனே
பின் தன் குற்றத்தை உணர்ந்து அதைப் பொருட்படுத்தாமலே
மன்னிக்கக் கோறியே, வேண்டினன் அசுரபத், வானரனிடம் 33

அனுமனும் தன் மகனைத் தன்னிரு பருத்த கைகளால்
பிடித்து எழுப்பி, அரவணைத்தனன், கண்ணீர் மல்கியே
தன் மகனை மீண்டும் கண்டதால் மிக்க மகிழ்ச்சியடைந்தே
திடீரென அவனிடம் வார்த்தைகள் சில உதிர்த்தானன்றோ? 34

'கண்டதில்லையே நான் உன்னை முன்பு மகனே!
உன்னாலும் பார்க்கப்படவில்லையே நான் இதுகாறும்;
இப்படி ஒருவரையொருவர் காணாமல் இருக்கையில்;
தந்தைமகன் அடையாளம் அறிவதும் தான் எப்படியோ!'' 35

''காணக்கிடைக்காத அரியதோர் இரத்தினம் உயர்ந்த
புத்திரரத்தினம் இம்மலையுச்சியில் கிடைக்கப்பெற்றதே!
தவத்தின் பயன் உடனே கிட்டியது என்றெண்ணியே,
பொங்கும் மகிழ்ச்சி என் மனதில் அடங்குவதில்லையே.'' 36

இவ்வார்த்தை கேட்டு அதிக ஆனந்தம் அடைந்த அசுரபத்
தன் தந்தை மொழிந்த சொல்லமிழ்த்தின் பதிலுரைத்தனனே:
''அந்தோ! கண் பெற்றதன் உண்மைப் பயனை நான்
காலம் கடந்திடினும் இன்று உன்னைக் கண்டடைந்தனனே'' 37

'செய்த வேள்விகளின் பலன் எல்லாம் இன்று கிட்டியதே
பூமிதேவராம் அந்தணர்களின் ஆசிகளும் அடைந்தனனே
பல காலமாகக் காணக் காத்துக் கிடந்த பொருளே
இன்று என் முன்னிலையில் எழுந்தருளியுள்ளதே அம்மா!' 38

'யான் விரும்பும் தேவதையே நீங்கள் அன்றோ அப்பா!
மனவிருப்பங்களுக்குக் கரைகாணா நீர்வீழ்ச்சி ஆவாய்;
உன்னைக் கண்டு பிறவிப்பயனை அடைந்தவன் ஆனேன்;
இப்பொழுது பெரும் பணியொன்றை எடுத்துரைப்பேன்'' 39

என்று கூறியதை நன்கறிந்த பின்னர், அவ்வரக்கனும்
இலங்கையில் முன் நடந்த விருத்தாந்தங்கள் யாவையுமே
கேட்டு மனம் அமைதியிழந்து வேதனையில் மூழ்கிடவே
சோகக் கடலில் ஆழ்ந்தான் வானரோத்தமன், ஆங்கே! 40

தவம் செய்யும் எண்ணம் விடுத்துத் தன்மகன் பின் தொடர
அடைந்தான் கித்கின்[1] நகரை அதிவிரைவிலேயே.
அங்கிருந்து படை திரட்டி சூழ்ந்திடவே அதனுடன்
அயோத்தி நகரைச் சடுதியில் சென்றடைந்தனனே. . 41

அவ்வயோத்தி நகரில் ரகுவம்சக் கொழுந்துகளான
பரதனையும் சத்ருக்குனனையும் அழைத்து ஒரு சேர்த்தே
இலங்கை நகரை பகைவனிடமிருந்து விடுவிக்கவே
காலதாமதமின்றி சென்றிட சடுதியில் புறப்பட்டனனே. 42

கடற்கரையினை யடைந்து, கடல்கடந்து சென்றிட
நீலவண்ணத் தன்னுடலை அனுமன் நீட்டியே அணையாக்கிட
சைனியங்களும் எளிதில் நன்கு கடந்து சென்றே
ஆழ்கடலின் அக்கரையை அடைந்தனர் அன்றோ? 43

---

[1] கித்கின்-தாய்லாந்தவர்கள் கிஷ்கிந்தைக்கு இட்ட பெயர்.

இலங்கை நகரின் அருகிலமைந்த கரையொட்டிய
மலைப்பாறையில் சைனியங்கள் எல்லாம் தங்கினவே;
சைனியங்களின் சேனாபதிகளும் முக்கிய வீரர்களும்,
அங்கிருந்தே போருக்கான வார்த்தைகளை உரையாடினர் 44

சமாதானப் பேச்சு வார்த்தைகள் பலனற்றுப் போகவே
அழிவேற்படுத்தும் பெரும் போர் துவங்கியதம்மா!
இருதரப்பினரும் போரில் தம்தம் திறமையை
எல்லையில்லாமல் செயலில் போரிட்டே காட்டினர். 45

தம்தம் தலைவர்களின் ஆணைக்கு அடிபணிந்தே
நாசம் விளைவிக்கும் ஆயதங்களை உபயோகிக்கவும்
கத்திகளாலும், பாறைகளினாலும், பெரும் மரங்களாலும்,
கணைகளாலும், கைமுட்டியினாலும், கடும்போர் மூண்டதே! 46

இக்கொடிய போரில் வைணாசுரன் தன் உயிரிழக்கவே
விபீடணன் யுத்தத்தில் வெற்றிகொண்டு விடுபட்டனனே!
வெற்றிகொண்ட அச்சேனைகளை அங்கிருந்து அணிவகுத்து,
மலிவன் மன்னனிருக்கும் பிரதேசத்தை அடைந்தனன் 47

அங்கும் அச்சந்தரும் கொடிய போர் மூண்டதம்மா!
மன்னன் மலிவன் வெற்றிவாகை சூடவில்லையே;
அவன் நிலைமையும் அவன்தன் நெருங்கிய நண்பன்
இராவணனின் நிலையைப் பொருந்துவதாயிற்றன்றோ? 48

ஒருவன் பின் ஒருவனாக அவனது மகன்கள் மூவரும்
மாவீரர்களாயினும் அடைந்தனரே காலனின் இல்லம்
அம்மன்னனின் உயிர் நண்பன் வேதாலன் என்பவனும்
அப்போரில் நீலனால் கொல்லப்பட்டான் அன்றோ? 49

வெல்லுதற்கரிய மாவீரனாம் மன்னன் மலிவனை
பிரும்மாஸ்திரம் பிரயோகம் செய்தே நல்லறிவுடையோன்
இறுதியில் மகாவீரனாம் பரதன் இன்னல்களுக்கெல்லாம்
முற்றுப்புள்ளிவைத்தவனைக் கொன்று மகிழ்ந்தனனே! 50

அனுமனின் மைந்தனும், பிரதாபம் மிகக் கொண்டவனும்,
சிறந்த மகனுமான மச்சானுவை அங்கேயே முடிசூட்டி
இராமனின் தம்பி, அவ்வீரனிடம் கூறினன்: 'மலிவத் தேசத்தை
நீதியும் அறமும் காத்துப் போற்றியே ஆண்டிடுவாய்.'' 51

''அன்புமகளாம் மன்னன் சக்ரவர்த்தியின்
இரத்தினமாம் இரத்தினமாலையை இப்பொழுது
உன் மனைவியாகவும் பட்ட மஹிஷியாகவும் ஏற்று
அரியணையில் ஏறி அவளுடன் அலங்கரித்திடுவாய்.'' 52

# 20

# சீதையைக் காட்டிற்கனுப்பிய கதை

பத்துத்தலை அரக்கர்தலைவன் யமநிலையம் அடையவே
ராமனும் அயோத்தி அடைந்து, மக்கள் மனமாற போற்றிட
உயர்ந்த முறையில் உலகமே காத்திருந்த முடிசூட்டலும்
மக்கள் மனமகிழ்ச்சி நிறையும்படி நிகழ்ச்சிகளும் நடந்தனவே 1

மாளிகையில் ஒத்த மனமுடை மூன்று சகோதரர்களுமிருக்க,
மென்மன சானகி உடனிருக்க அளவில் ஆனந்தத்துடன்
மக்கள் மனங்கொண்ட மோகமெனும் கங்குலை அழித்தே,
எங்கும் உவகை பொங்க காலத்தைக் கழித்தனன் சுகமாக 2

சனகனின் மகள் சீதையும் அந்நாட்களை மிக்க மகிழ்ச்சியுடனே
கழித்தனள் சொல்லொண்ணா அல்லல் முன்னனுபவித்தே,
இவ்வுலகில் மிக்க களிப்புடன் வாழ்ந்திடினும் விந்தையன்றோ?
மக்கள் நொடியில் சொல்லொணா துக்கம் எதிர்கொள்கின்றனர்? 3

அடர்ந்த காடுகளில் அலைந்து பல அல்லல்கள் ஏற்றே,பின்
அயோத்தியில் இன்று மட்டற்ற மகிழ்ச்சியுடன் வாழ்ந்திருக்க,
அச்சமொன்றின்றி புவியில் மன்னவரின் பெருந்தேவியாகி
மனம்நிறை நாட்களை சுகமாக கழித்தனள் அன்றோ? 4

இப்பெருமையும் சுகமும் நெடுங்காலம் நீடிக்கவில்லையே?
காசினில் அறிந்தவரும் உண்டோ விதியின் களியை
அதிவிரைவு வேகத்தில் உலகில் நடக்கும் விதிகள் யாவுமே
இன்பதுன்பம் நொடியில் மாறி அமைவதே இயல்பன்றோ? 5

நெடுங்காலம் அல்லல் பட்ட நான் இப்பொழுதன்றோ
நீராழிக் கடலொன்றை நீந்திக் கடந்தேன் என்ன விந்தையிது?
ரகுகுலபதி என் கணவர் என் பாக்கியமன்றோ?
என் வயிற்றில் அவர் வீரியமானது வித்திட்டு விளங்குகிறதே! 6

மகிழ்ச்சிக் கடலில் மூழ்கி அபலையாம் மன்னன் பட்டராணி
மறுமலர்ச்சியை மெச்சியே ஒப்பற்ற கர்வத்துடன் அனுபவிக்க,
பெரும் பேய்க்காற்று விசையுடன் வெகு தீவிரமாக வீசிட
வச்சிரவீழ்ச்சியொப்ப கொடும் விதி விளையாடியதே? 7

இராமனோ ஒரு சில நாள் காடு சென்றிருக்கையில்
பிரிவு சானகிக்குத் தாங்கவொண்ணா வேதனை அளித்திட
பிரிவு வெப்பத்தைத் தணித்துத் தீர்த்திட எண்ணியே அந்தோ
நீராடவே நதிக்கரையினுக்கு எவ்வாறோ சென்றிட்டனளே 8

சூர்ப்பம்நகம் என்றிருசொல்லிணைந்த பெயருடையாள்;
இராக்கதி கொடிய உருப்பூனம் செய்யப்பட்டாள்;
சுமித்திரை மைந்தனின் வீரியத்தினால் சினம் மிகக்கொண்டே
தன்தமையன் இல்லம் அடைந்தாள், அழுதவண்ணம்! 9

தன் சோதரியின் அவமானத்திற்குப் பழி வாங்க எண்ணியே,
பத்துத்தலையோன், துர்மதியோன், சீதையை அபகரித்திட,
மூண்ட போரில் அழிக்கப்பட்டாள் அவள் ரகுகுலதிலகனால்
எழில்நிறை இலங்கை வைபவங்கள் யாவையும் இழந்தே! 10

அவளுக்கிருந்தனளே அதுலை என்னும் பெயர்கொண்ட மகள்;
இணையற்றவள் சிக்கலை எளிதில் செய்யும் திறன் கொண்டவள்;
தாய்க்கு நேர்ந்த கொடும்வினை நினைந்து மனம் நொந்தே
நொடிப்பொழுதும் வீணாக்க விரும்பாமல் அவ்விடம் வந்தனளே 11

அவர்களைப் பழிக்குப்பழி வாங்குவதும் எப்படி? என்றெண்ணம்
மதியற்ற அவள் கலங்கிய மனதில் எழுந்ததே
எப்படியோ சனகன் மகளையும் ரகுகுலக் கொழுந்தையும்
பிரித்தால் தன் எண்ணம் பலிக்குமென எண்ணினளே 12

இதற்கான உரிய நேரத்தைக் காத்துக்கிடந்தாள், துர்மதியாள்!
தசரதமைந்தன் இராமனும் சென்றிட்டான் கானகத்திற்கே
தேவி சீதையும் ஆற்றங்கரையினில் நீராட வந்திட்டனளே;
படைப்போன் தீயோர்க்கு சகாயம் செய்யும் நேரமுமிதுவோ!? 13

தன் விருப்பப்படி உருவெடுக்கவல்ல அவ்வரக்கி, அந்தோ,
சானகியின் பணியாள் போல் மாறி அணுகினளே, அவளை!
குற்றமறியா சீதை, நாட்கள் பல அவளைப் பணியிலேற்க,
இரவும் பகலும் அவள் சேவையில் மனம் மிக மகிழ்ந்தே 14

தொடர்ந்தவள் செய்த சேவையில், சீதை மனம் மிக மகிழ்ந்தே,
மனநிறைவுடன், அவளை அந்தரங்கத் தோழியாய்க் கொண்டிட
மனதில் விபரீத எண்ணங்கொண்ட சேவகரோ, உண்மையில்
தம் பணிகளில் குறியுடனிருப்பது திண்ணமே 15

நலிந்த சேவகி போக்கிரி அவள் வினவினள் வைதேகியை
''தேவீ! தசகண்டன் இல்லத்திருந்தவள் நீ அல்லவோ?
எங்ஙனம் அவனுருவம் என்றுன்னால் விவரிக்கவும் இயலுமோ?
காண விரும்புகிறேன் எனக்குச் சித்திரத்தில் வரைந்து காட்டிடுக''
16

தன் தோழியின் இடத்தைப் பெற்றவளும்,
என்றும் சீராகப் பணிவிடை செய்பவளும்,
சேவகியின் விருப்பத்தையும் நினைந்தே,
நிறைவேற்றல் நன்றெனை நினைத்தவளாய், 17

இயற்கையில் தூயஉள்ளம் படைத்தவள்;
அசுரப்பெண்ணின் துர்மதி அறியாமலே,
கல்லொன்றின்மேல், அரக்கனின் உருவை
விரைவிலேயே தெளிவாக எழுதினளே! 18

இராவணனின் சித்திரத்தை வரைந்தே
விதேகன் மகள் முடித்து நிறைவு செய்யவும்,
அதுலை என்னும் சீதையின் சேவகியோ
தன்பணி தீர்ந்ததென மறைந்து சென்றனளே 19

அதுநேரம் கண்டு கானகத்திற்கு சென்ற
இராமனும், அதுசமயமே திரும்பியும் ஏகிட
விதியும் விளையாடிற்றே, அந்நொடியில்
ஒருவன் நினைக்கவும் இயலாதவகையிலே 20

அறுவறுக்கத்தக்கவனின் ஓவியம் நான் வரைந்தது
என் கணவன் பார்வையில் பட்டிடின்,
ஐயம் ஏற்படின் அவர் மனதில், செய்வதும்
தான் என்ன என்று பயந்தனளே, அபலை! 21

இவ்விதச் சிந்தனையில் மனம் குழம்பிட,
மெல்லிடையாள் சனகன் மகளும்,
தான் வரைந்த அவ்வோவியத்தை
அழித்திட மிக்க முயற்சி எடுத்தனளே 22

அழித்தும் அழியா அவ்வோவியம்,
மிகத் தெளிவுடன் பளிச்சிட்டதே!
என்ன செய்வதென்று அறியாமலே
மனவேதனை கொண்டாள் மங்கை 23

'ஏனிது, அழித்தும் அழிவதில்லையே
புதிரே, இச்சித்திரத்தின் விந்தை!
துடைக்கத் துடைக்க மேன்மேலும்,
புத்தொளி கொண்டே ஒளிர்கிறதே!? 24

சிந்தனையில் ஆழ்ந்தே, சித்திரத்தின்
உண்மை அறியவில்லை சீதை
இராக்கதர்களின் மாயையை அந்தோ!
இயலுமோ! ஐயமுற அறிவதும் 25

வைதேகியின் கண் பார்வையிலிருந்து
வெகு தூரம் தப்பியே சென்ற அதுலை,
சித்திரத்தில் நுழைந்தே விட்டாளன்றோ,
தன்வசங்கொண்ட அசுர மாயையினால் 26

அரக்கன் உருவ ஓவியத்தை
அழிக்க இயலாத் அந்நேரம்
மறைத்திடத் தன் கணவனிடமிருந்து
பாயலடியினில் வைத்தனளே 27

உடனேயே ஓய்வெடுக்க விரும்பிய
இராமன், பள்ளியறையில் நுழைந்திட,
அவனும் உள் நுழைந்ததுமே ஆங்கே
வெப்ப மிகுதியை உணர்ந்தான் அந்தோ! 28

அமைதிகாப்பவனும், புலன் வென்றவனும்,
மனவலிசெல்வம் மிகக் கொண்டோனும்,
ஆங்கே மன தைரியம் இழந்தே அம்மா,
குழப்பம் மிகக் கொண்டான் ரகுநந்தனன். 29

காரணத்தை அறியவில்லையே நான்?
தன்னுடலில் எரிவது போன்ற தீக்கதிரின்
முன்புணரா வேதனை மிக உணர்ந்தே
அதன் காரணமறிய விழைந்தனனே 30

இலக்குவனை அழைத்துக் கூறினன்:
''சடுதியில் காரணத்தைக் கண்டுபிடி;
என்னை வாட்டும் இத்தீ ஏது?
என்னையே ஏன் இத்தீ வாட்டுகிறது?'' 31

பெரியோர் வார்த்தை மீறா
இலக்குவன், வசனம் கேட்ட நொடியே
பெரியோனின் அல்லலுக்குரிய
காரணத்தைத் தேடலுற்றனனே. 32

வெகுவாகத் தேடியும் காரணத்தை
அறிய முடியாமல், போகவே,
பாயல் உதறிப் பார்த்திடவே
தமையன் படுக்கை எடுத்தனனே 33

படுக்கையை உதறிடும் நேரம்
இராவணனின் சித்திரமும் விழுந்ததே.
அதே சமயம் வைதேகியின்
மனமும் துயரக்கடலில் மூழ்கியதே. 34

கண்ட நொடியே ரகுவரன் முகம்,
பொலிவு மிக இழந்து வாடியதே
பனி படர்ந்த மரம் போலவும்,
ஒளி மங்கிய முழுமதி போலவும், 35

''என்ன இது! யார் தீட்டியதீது?'' என
கேட்ட ராகவனைக் கண்டுரைத்தனள்
சீதை நானே வரைந்தேன். ஈடேற
பணிப்பெண் மனவிருப்பம்'' என்றனள். 36

செவிமடுத்த அந்நொடியிலேயே
தன் நினைவிழந்தான் இராமன்! 'ஆ!
அரக்கனிடம் மனம் பறிகொடுத்தவளா
என் மனைவி? பெண்கள் கல்நெஞ்சர்களே!' 37

நாட்கள் பல விதிவசத்தினால்
இராவணன் இல்லம் இருந்தாளன்றோ?
அரக்கனிடம் மனம் பறி கொடுக்கும்
வாய்ப்பும் இருந்ததே அம்மா! 38

சீதையைக் காட்டிற்கனுப்பிய கதை

'உலகில் பெண் பிழைசெய்பவளே
என்றறிந்தே கற்றறிந்தோர்கள்
நம்பிக்கை உடன் கொள்வதில்லையே
விவேகம் கொண்ட ஆடவர்கள் 39

'எவளைக் குறித்து இவ்வளவு காலமும்
அல்லல்களைத் தொடர்ந்து போராடினேனோ
பிறனிடம் மனங்கொண்டாள் அப்பெண்ணே!
பெருந்துயரம் இதனிலும் உண்டோ உலகில்? 40

நொடிப் பொழுதும் அந்நீசப்பெண்
என்னில்லம் இருக்க ஒவ்வாதவள்;
கடுங்கோபத்துடன் கூறினன் காகுத்தன்
''தம்பீ! கொலையே அவளுக்குரிய தண்டனை.'' 41

''என் அன்புக்குப் பாத்திரமில்லாதவளை,
உடனேயே காட்டில் விட்டு விடு;
கொன்று விடு; உயிர் எதற்கு அவளுக்கு?
தவறியபெண் உயிர் வாழ்வது உசிதமன்று'' 42

ஊழிமேகத்தில் தோன்றிடும் மின்னலென,
இராமனின் வாயினின்றும் வெளிவந்த
சொற்கள் கொடும்வேதனை அளித்ததே
குற்றம் ஒன்றறியா பேதை சீதைக்கே! 43

சினமடைந்தோனைச் சாந்தப்படுத்த வேண்டியே,
ஏற்ற முயற்சிகள் பலனளிக்க வில்லையே
கோபம் பொங்கி மன அமைதியிழந்தோனை
ஒப்புரவிணக்கம், சினம் தணிப்பதில்லையே! 44

''அரக்கனிடம் மனம் ஈடுபடவில்லை ஐயா!
அவனிடம் நான் மனம் இழப்பதும் தான் எப்படி?
துர்மதிகொண்ட அவ்வரக்கன் எங்கே?
என் முழு உடந்தை எந்நாதன் எங்கே?'' 45

''நின் மலரடி சரணம் அடைந்தேனே;
என் மனத்தில் உன்னை என்றும் இருத்தினேனே;
உன் மனம் உண்மையறியாமல் பேதலித்ததே
விவேகம் கொண்டு எண்ணமதைக் கைவிடு'' 46

மனம் நம்பி, ஏற்கவில்லையே இராமன்
மங்கை சானகியின் வார்த்தைகளையே
மேலும் கடுஞ்சினங் கொண்டனன்;
மரண தண்டனை விதித்தனனே! 47

''வைதேகியை உடனே வதம் செய்தே,
உள்ளத்தினை உடலிலிருந்து பிரித்தெடு
கொடுத்திடு, அதை என்னிடம் அறிவேன் நான்;
என் ஆணை நிறைவேற்றினாய் என்று 48

செவிமடுத்தே இவ்வசனம் இருவரும்
வந்து சேர்ந்தனர் வனத்திற்கே!
ஆங்கொரு பரந்த வேருடன் கூடிய
மரத்தின் அடியை அடைந்தனரே! 49

மனம் மிக நொந்த சீதையோ,
இலக்குவனைக் கண்டு விளித்தனன்;
''குழந்தாய்! மூத்தவன் இட்ட பணியைச்
சடுதியில் இங்கிதோ நிறைவேற்றிடு!'' 50

''கணவனையன்றி வேறொருவனை
மனதினாலும் நினையா, குற்றமொன்றறியா
எனக்கு, என்நாதன் இட்ட தண்டனையோ,
இது. காரணமும் இதற்கு ஏதோ!'' 51

''கணவரோ உலகின் நாதன்;
தந்தையோ முனிவரில் சிறந்தவர்;
மகன்களோ குலம் தழைக்க
என் வயிற்றிலிருந்தும், போகிறேன்.'' 52

''விதி வசத்தினால் மேலுலகமே என்
வழி அன்றோ, ஊழ்வினைப்படியாகும்;
யானிழைத்த தீவினைப் பயனே,
எனக்குக் கொடுமையாய் வாய்த்ததே!'' 53

''ஏ! இலக்குவனே! என்னை உந்தனின்
உடன் பிறந்தவளாகவே கண்டாயன்றோ?
உன் கையினால் எனக்கு மரணம்
ஏற்படின், அதைச் சுகமாக ஏற்கிறேன்!'' 54

கொடு, எனக்குப் பலம் கொண்ட அடியை;
அனுப்பு மனதிற்கிசைந்த யமனில்லம் என்னை;
காத்திடு, உன் மூத்தவனின் ஆணையை;
செய்திடு தாமதமின்றியே நீ குழந்தாய்!'' 55

இச்சொற்களைத் திடமாகவே உதிர்த்தே
சீதையும் மௌனம் காத்தனளே;
இலக்குவனோ ரம்பம் போல் அறுத்திட,
மனவேதனை மிகக் கொண்டானன்றோ? 56

'என் உடன்பிறந்தவள் ஒத்த வைதேகியைப்
பசுவைப் போலல்லவோ கொல்கிறேன்!
கொடிய வெறுக்கும் பணியன்றோ இது
இவளைக் கொல்லும் துணிவுமில்லையே! 57

சிந்தனையில் மூழ்கிய இளையவனைக் கண்டே
சனகன் புதல்வி பகர்ந்தனள் அன்றோ?
''என்னைக் கொல்வது சாகசமில்லையே;
உனக்கு ஒவ்வாத கொடுமையுமில்லையே!'' 58

பலவித கொடிய வசனங்களினால்
அவனை வெறுப்பேற்றிட்டாள் சீதை;
செவிமடுத்தே கடுஞ்சினங்கொண்டு தன்னைக்
கொலையும் செய்திடுவான் என்றேண்ணியே, 59

''ஏ! இலக்குவனே! என்னைக் கொல்லவில்லையா?
உன் மனதில் கொண்ட எண்ணமென்ன?
பெண்ணைத் தனிமையில் கண்டால்
கட்டுப்பாடு கொண்டவனும் வசமிழக்கிறான்!'' 60

''உன் திடமனதில் சலனமேதும் ஏற்படில்,
வெறுக்கத்தக்கவனே! விட்டெறிந்துவிடு அதனை;
உன் கையில் விழவில்லையே நான்
என்னை பலாத்காரமாக அடையமுடியாதே!'' 61

சினத்தினால் வெகுண்டு பெருமூச்செறிந்தே,
வெளிவந்த வசனங்கேட்ட இளையனோ
மனதில் குழம்பி செய்வதறியாமல்
எண்ணத்தாழியில் மூழ்கியே நினைத்தனன்! 62

''என்னொருவனுடனேயே இவ்வனத்திற்கு
வந்தவள் அன்றோ சனகன் மகள்
நானிவளைக் கொல்லாவிடில் என்னைப்
பெரும் அபவாதமன்றோ ஆட்கொள்ளும்'' 63

தலைதாங்கியே தந்தமையன் ஆணையை
நிறைவேற்றியே இவளைக் கொன்றிடின்,
நிந்தனைக் குரியவன் அல்லேன் நான்
என்றேத்துவர் இப்பூவுலகிலுள்ளோர் 64

சடுதியில் அவளைக் கொன்றிடவே
தனது மென்மனதை திடமாக்கிக் கொண்டே
தன்முன் மகிழ்ச்சியுடன் மாய்த்துக்கொள்ள
தயாராகியிருக்கும் தையலைக் கண்டான். 65

பலவந்தமாக உறைவாளை எடுத்து
வீசியே, அபலையின் மீதெறிந்தான்;
அந்தோ! அவளை அணுகாமலே
பலனற்று பூமியில் விழுந்ததே! 66

மறுபடியும் தன்மனதைத் திடப்படுத்தியே
மீண்டும் ஒருமுறை முயன்றிடினும்
மனதின் இலக்கை அடையாமலே
பெரும் வியப்பிலாழ்த்தியது கீழே வீழ்ந்தே! 67

'என்ன ஆயிற்று? என் குறி தப்பியதை
ஒரு பொழுதும் நான் கண்டதில்லையே!
காரணமறிய மிக ஆவல் கொண்டே
மனதை எண்ணத்திடலில் ஓடவிட்டனனே! 68

வாள் வீசுவதில் முனைந்திடினும்
கண்ணில்பட்ட அவளைக் கண்டு
மனதில் கருணை பிறந்திட்டதே,
இலக்கு தவறிய காரணமுமாகுமோ?' 69

இதே காரணம் என சிந்தையிற்கொண்டு,
கண்களை இறுக மூடிப் பார்க்காமலே
மீண்டும் வேகத்துடன் வாளை எடுத்தே
வீசினன் அவள்மேல் இலக்குவன். 70

மிகப்பலங்கொண்டு வீசியெறிந்தும், வாள்
அவள் மீது பட்டும், ஒன்றுமே ஆகவில்லையே!
தண்டனை அளித்து முடித்த இலக்குவனே
பூமியில் நினைவற்று வீழ்ந்தனனே 71

ஒருக்கால் குற்றமற்றவர்களை கொல்வதில்லை
என்பதை நிரூபித்ததோ அவ்வாள்?
பெருந்திறனோடு வீழ்த்தியும் பாக்கியமற்ற
சனகநந்தினியை கொல்லவில்லையே அது? 72

சனகன் மகளின் கற்பே கவசமாய்
அவளைக் காக்கும் கடுந்தோல் ஆயிற்றோ?
இப்படி கொடூரமாக வீழ்த்தியும்
சிறு புண்ணுமின்றி அவளைக் காத்ததே; 73

மனவேதனை கொண்ட மங்கை அந்தோ!
பூமியில் நினைவிழந்த இலக்குவனைக் கண்டு,
கண்ணீர் நிறை கண்ணினள் குரல் தழுதழுக்க
தன்னியல்பான திடமும் கைவிட்டுக் கதறினள்: 74

'பிள்ளாய் பயமற்ற வீரன் நீயும் சாதாரண
மானுடன் ஒப்ப மண்ணில் கிடக்கிறாயே
நல்வினைக் குறைவே நானிறக்கவில்லை;
நீயும் பூமியில் புரள்வதும் ஏனோ கூறிடுக. 75

மிக முயற்சி செய்தே அவள் அவனை
மீண்டும் தன்னிலை பெறச் செய்தாள்
மனக் கவலையினால் தந்நிலைபெற்றும்
வாய் திறந்து பேசவில்லையே ஒன்றும்! 76

குனிந்த தலையன் நாணமடைந்தே
நன்மதியோன் தன்னுள் புக்கியே
இருட்டினால் மலினமடைந்த மலைபோல்
கெட்ட பார்வை கொண்டவனை ஒத்தான். 77

மேல் ஒன்றும் பேசாமலே இலக்குவன்,
மெல்ல மெல்ல அடியெடுத்து வைத்தே,
செய்யத் தகாத செயலைச் செய்தமன
வேதனை நிறைந்து தந்நகரம் எய்தினனே! 78

வழியில் உயிரிழந்த மானொன்றைக் கண்டே,
நன்றியுள்ளோன் அதைக் கையிலெடுத்தே,
இதயத்தை அதனின்றும் பிரித்தெடுத்தே,
இராமனுக்கு வெகுமதியாக அளித்தனனே! 79

''சீதை இறந்தனள்; கொன்றிட்டேன் அவளை
இவ்வுலகில் இப்பொழுது உயிருடன் இல்லை;
சான்றிதோ அவள் இதயம் ஐயா!'' என்று
எடுத்து வந்தனனே உனக்குக் காட்டவே 80

காட்டினன் எடுத்து என்று கூறியே
விளித்தனன் 'புலனடக்கியவனே' என
'முடித்தேன் அண்ணனின் ஆணையை,
'செய்தேன் நிறைவு நீ இட்ட பணியை 81

திடமனங்கொண்டோன் தம்பி எடுத்துவந்த
வைதேகியின் இதயம் கண்டே கூறினன் இராமன்;
''வெறுப்பு மிகக் கொண்டே அவள் இதயமோ
விலங்கினைப்போல் கொல்லத் தகுந்ததே!'' 82

வார்த்தைகள் சில கூறியே அமைதியானான்;
அரசுப்பணிகளில் மனதைச் செலுத்தினனே;
சீதையைப் பற்றிய எண்ணம் சிறிதும்
மாறா அவன் மனம் விசித்திரமானதே! 83

# 21

## லவன் பிறந்த கதை

விதேகமகளை தனியளாகக் காட்டில் விட்டுவிட்டே,
சுமித்திரையின் மைந்தன் அயோத்தி திரும்பிடவும்
தனிமையில் தாளா துக்கம் கொண்டாளன்றோ
குரரீ*யைப் போல் பயந்து கதறினாள் சீதை அம்மா! 1

தாரையாய் பெருகிய கண்ணீர் ஓரளவு
தன் துக்கபாரத்தை வெளியில் வடியச் செய்ய
திக்குகளை வெற்றிடமாகக் காணுகின்றவளாய் தன்
தீவினைப்பயனே ஈதென பழித்தாள் தன்னையே! 2

'இது திண்ணமாகும் முன் பிறவியில் யானிழைத்த
மிகக் கொடுமையான தீவினைகளையே சுட்டுகின்றன;
அதன் விளைவுகளையே இப்பிறவியில் கண்முன்
கொடும் அல்லலும் துன்பமுமாய் துய்த்துணர்கிறேன்!' 3

---

* குரரீ என்பது மீன் கொத்தித் தின்னும் கழுகுபோன்ற ஒரு கடல் பறவை.

'ஜயங்கொண்ட என் கணவனால் பாம்பைப் போல்
கைவிடப்பட்டேனே! கருப்பம் தரித்த காலையில்-
ஒரு குற்றமும் அறியா நான் எல்லாவிதத்திலுமே,
கைவிடப்பட்டேனன்றோ! விதி வலியதே அம்மா' 4

'வெகுகாலம் இராவணனின் இல்லத்தில் இருந்திடினும்
மனதில் அவனை நினைத்தும் பார்த்ததில்லையே;
கீழோன் இராக்கதனிடம் என் மனம் பறிகொடுத்தேன்,
என்ற பழிச் சொல்லை ஏற்க வேண்டியுள்ளதே!' 5

என்பதி என்னைக் கைவிட்டது அவ்வளவு பாதிக்கவில்லை;
இப்பொய் மருவன்றோ என்னை மிகவும் வாட்டுகிறது!
உயிர் வாழ்ந்திடும் விருப்பமும் எனக்கில்லையே, அந்தோ
என்னுயிர் தியாகம் செய்வதே சிறந்ததெனக் கருதுகிறேன். 6

ஒரு பாவமறியா நான் களங்கமேற்க விரும்பாமல்
உயிரைவிடத் தயாராக இருப்பினும் கூட, இடையில்
என் வயிற்றில் வளரும் என் கணவனின் வம்சம்
வளர்கரு வந்து என் மனத்தை வாட்டுகிறதே. 7

திக்குகள் யாவையுமே வெற்றிடமாகத் தோன்றிட
மக்களற்ற இங்கு எனக்கு உதவவும் யாரே உள்?
என் செய்வேன் நான்? எங்கு செல்வேன் நான்?
என்னை அழைக்கவும் தான் யார் உள்ளனர் இங்கே? 8

பாரே புகழும் ரகுவம்சத்தோரின் மருமகள் நான்;
பிரும்மருஷி அரசத்துறவியாம் விதேக மன்னன் மகள்,
இருந்தும் விதிவசத்தால் அல்லவோ இப்படி அல்லலுற்றே
வருந்தும் நிலையடைந்து தவிக்கிறேன் அநாதையாய். 9

கண்ணீர் பெருகி ஓடிட சீதை கதறியழும் புலம்பலோ
காட்டு விலங்குகளே நிறைந்து வசிக்கும் அக்கானகத்தில்
மாபெரும் மலையையும் பிளந்தே பொடியாக்குமன்றோ?
இரும்பையும் கரையச்செய்திடும் புலம்பலாகுமே அது? 10

கதறும் இவ்வழுகைக் குரலைக் கேட்டே இந்திரனும்
வந்தடைந்தனன் வனமதனை எருமை உருவெடுத்தே
எம்மரத்தின் கீழ் மணல் திட்டில் விதேகமன்னன் மகள்
அமர்ந்திருந்தாளோ அவ்விடம் அவனும் வந்தனனே! 11

எருமையின் இரு கண்களில் வீசும் ஒளி கண்டே
இழுக்கப்பட்டாள் சீதையும் அதன் அருகிலேயே ஆங்கு!
கடந்து செல்ல அவ்வெருமையும் தன்னிச்சைப்படியே
கருணைக்குரிய அவளும் அதனைத் தொடர்ந்தனளே 12

வைதேகி தொடர்ந்து வர சுயேச்சையாகவே அவ்வெருமை
ஒரு குறையுமின்றி காட்டில் சுற்றித்திரிந்துகொண்டு
கருணைக்கடல் பெருகி அன்புருவெடுத்தாற் போன்ற
வஜ்ரமிருக் மாமுனியின் குடில் முன் நின்றதம்மா! 13

அவ்வெருமையைத் தொடர்ந்தே கதறிப் புலம்பியே
பின்தொடர்ந்தே வரும் சீதையைக் கண்டனரே
பறவை மார்பில் தைத்த அம்பு கண்டே உருகியதொப்ப
முனிவரின் மனம் அன்பும் வலியும் கசிந்து உருகியதே 14

'குற்றமொன்றில்லா விடினும் கணவன் கைவிட்டானே
என்ற கவலையை விடு பெண்ணே! நீ விரும்பும் வரை
என் துறவி மாடத்தில் வசி. இங்கு இக்குடிலில்
ஒருவித இன்னலோ இடரோ உனக்கு ஏற்படாதம்மா!'' 15

மக்களிடம் கருணைகொள்ளும் அத்துறவியோ
இங்ஙனம் அழைத்து வர அவளைத் தம் குடிலுக்கே
தவச்செல்வர் வஜ்ரமிருக் என்னும் அம்முனிவரோ
சீதையைக் குடிலுக்கு வழிகாட்டி அழைத்து வந்தனரே! 16

முனிவரின் துறவிமாடத்தில் தன் காலம் கடத்தியே
கீழ்த்திசையில் கதிரவன் நேரத்தில் உதிப்பது போலவே-
அவளும் குறித்த நேரம் ரகுவம்ச இரத்தினமாம் தன்மகவை
ஈன்றனள் அவனல்லவோ அவள் அமைதியின் ஒரே வித்து?! 17

சிசுவை ஈன்றெடுத்த போழ்து மகேந்திரனின் மனைவியே
செவிலித்தாயாக வந்து பணிவிடை செய்தனள் அன்றோ?!
இல்லையெனில் மக்கள் நடமாட்டமற்ற அரணியத்தில் அந்தோ
அவளுக்குக் கோறிய பணி செய்தற்கும் யாரே உள்? 18

மகன் பிறந்ததும், சிசுவின் பிறந்ததற்குரிய சடங்குகளை,
முனிவர் தானே முறைப்படி செய்து முடித்தனர் அன்றோ?
பெயரிடும் சடங்கும் செய்து மங்குடன் என்னும் பெயரிட்டு
நல்லாசி வழங்கியே நன்கு வளர்த்தாரம்மா தவக்கோன்! 19

இவ்வண்ணம் ரகுவம்சம் வளர்கொழுந்து பிறந்தே
அழகும் நற்பொலிவும் கொண்ட இராமனின் மகன்
அன்புடனும் ஆதரவுடனும் பேணிக் காக்கப்பட்டான்
வஜ்ரமிருக் முனிவரின் ஆசிரமத்தில் ஆசிகள் பெற்றே; 20

சனகன் மகளிற்கு ஒரே ஆதரவாய் இருந்தானம்மா;
அக்குழந்தை அவ்விடமே நன்கு வளர்ந்தானம்மா
அவனது தாமரை மலர்போன்ற மகப்பொலிவு கண்டே
ஆங்கே சீதையும் தன் காலத்தை கடத்தினாளம்மா! 21

குழந்தை நன்கு வளர்ந்திடவும் கணவனின் முகம்
பிரதிபலிப்பதொப்ப அம்முகவடிவு கண்டே, மேலும்
தன் கணவனின் நினைவு வளர்ந்திட பிரிவுத்துன்பம்
தாங்கவொண்ணா உயிர் மர்மங்களை பாதித்ததே! 22

உலகில் தன் எதிரிகளை எல்லாம் ஒடுக்கும் சக்திகொண்டு
தரணி முழுவதும் தன்னாதிக்கத்திலே ஆளும் திறமைகொண்ட
இராமசந்திரனின் மகன் பிறந்து வளர்ந்ததோ காட்டில்
இயற்கையின் போக்கை இன்னதென்றுரைத்திடவும் இயலுமோ? 23

அக்குழந்தையை தம்மடியிலிருத்தி அன்பு சொறிந்தே
அரவணைக்க தந்தை அங்கு இல்லையே அம்மா!
இக்காட்டிலே அவனை வளர்த்திட செவிலித்தாயுமில்லை;
மங்கள இசை எழுப்பும் ஒலியும் இசைக்கவில்லையே. 24

குயிலின் குரலொத்த குரல் வளம் படைத்த
மாதர்களின் இனிய ஒலியும் அங்கு கேட்கவில்லையே!
ஆடலரங்குகளில் ஆனந்தமாய் மனதைக் கவர்ந்தே
ஆடிக்களிக்கும் மங்கையர்கள் நடனமும் அங்கில்லையே! 25

அக்குடிலில் கேட்கக் கிடைத்தது எல்லாம்
மறையோதும் ஒலியும் பறவைகளின் கூவலுமே
வீசும் காற்றின் விசையினால் அசையும் மரங்களிலிருந்து
விழும் பழங்கள் இலைகளின் ஓசைகளே ஆகுமன்றோ?! 26

உத்தர கோசலத்தை ஆளப்பிறந்த வருங்கால
மன்னன், தன்னிரு மலர்க் கண்களை திறந்ததோ
விதியின் முறைப்படி அநாதையாய் தனித்திருக்கும்
தன் தாய் மடியில் முதன்முறையாக அப்புவியிலே 27

பரிதவிக்கும் சனகன்மகள் அசையாமல் அப்படியே
பெருமூச்செறிந்து எப்படியோ தன்னைச் சுதாரித்தே
தன் குழவியின் முகத்தாமரையைக் கண்டு களிப்புடன்
தன் கைவிரலினின்றும் மோதிரத்தை அவிழ்த்தெடுத்தனளே 28

பரிதாபத்திற்குரியவள் கண்ணீர்கறை படிந்தமுகத்தினள்
விழித்த கண் வைத்தபடியே வெகுநேரம் மோதிரம் கண்டே
வெளுத்த முகத்தினள், தன் ஒரே அணிகலனாம் அதையே
தன் குழந்தையின் விரலில் அப்பொழுது அணிவித்தாளம்மா 29

பிறகு மாமுனியின் இருப்பிடமாம் குடிலை நோக்கியே
வஜ்ரமிருக் என்னும் முனியின் ஆசிரமத்தை அடைந்திட்டே
பெரும் தியானத்தில் அமர்ந்து, கண்மூடி ஓடையில்
உறக்கங்கொள்ளும் மீனொத்த முனிவரைக் கண்டாள்! 30

அவர் அருகாமையில் அக்குழந்தையை வைத்திட்டே
ஓடும் நதியில் அவள் நீராடச் சென்றனளே;
வழி நடுவில் மரத்தின்மேல் தாவிக்குதித்தோடும்
வானரங்கள் பலவற்றைக் கண்டாளன்றோ? 31

தங்கள் மார்பதனில் தங்கள் குழவிகளைக் கட்டியே
தாவிச்செல்லும் மந்திகளைக் கண்டு இயற்கையிலேயே
கருணைகொண்ட உள்ளத்தினள், அன்பு பூண்டே
தயை நிறைந்த இவ்வசனங்களை விளித்துக் கூறினளே! 32

''தன் குட்டிகளை இவ்வாறு மார்பில் அணைத்தே
தாவிக் குதித்துச் செல்கிறீர்களே இங்குமங்கும்,
சிந்தனை சிறிதும் செய்து பார்ப்பதே இல்லையோ நீங்கள்?
சற்றே நழுவினாலும் கீழே பூமியில் விழுந்துவிடுமே? 33

கேட்ட அவள் வார்த்தையை சிரித்தே பதிலுரைத்தனவே
நாங்களோ உன்னைவிட அதிக கவனத்துடன் உள்ளோம்;
குட்டிகளை மார்பிலேயே கட்டியுள்ளோம்; அரவணைத்தே
உன்னைப்போல் மாமுனிவரின் அருகில் விடவில்லையே?! 34

முழுவதும் தன் கண்களை மூடியே நிட்டையில் அமரும்
முனிவர் குழந்தை அருகில் இருப்பதையும் அறிவாரோ?''
இப்படி புத்திபூர்வமான வசனங்கள் கேட்ட அவளோ
நாணம் மேலிட்டவளாய் ஆனாள், சனகன்மகள் 35

இம்மந்திப் பெண்களின் புத்தியில் தோன்றியது கூட
என் புத்தியில் எட்டவில்லையே அந்தோ பரிதாபம்!
அறிவீலியான செயலன்றோ செய்துள்ளேன் நான்?
இக்குரங்குளின் நகைப்பிற்கு பாத்திரமானேனே? 36

உண்மையில் நான் இப்படி நடந்து கொள்வதும் தகுமா?
காட்டில் பல அபாயங்கள் நிகழ்கின்றன அன்றோ?
இவ்வித சிந்தை மனதை ஆட்கொள்ள தாமதமின்றி
முனிவரின் ஆசிரமத்தை விரைந்தடைந்தனளே. 37

தன் குழந்தையை எடுத்துக் கொண்டு தன்னுடனேயே
நதிக்கரைக்குத் தானே எடுத்து வந்தனளே.
வானரப்பெண்களும் அவள் செயலை ஆமோதிக்கவே,
சீதையும் தன் நன்றியைத் தெரிவித்தனளே. 38

கண்திறக்கவே இதற்கிடையில், சமாதி மீண்டு முனிவர்
காணாமல் திடுக்கிட்டே, அருகினலே குழந்தையை
சிசுவிற்கு ஆனதும் ஏதோ என்றறிய இயலாமலே
பெரும் சிந்தனை எழ கவலையில் ஆழ்ந்தாரம்மா! 39

நீராடி சனகன் புதல்வி திரும்பி வந்ததுமே
என்னருகாமையிலிட்ட குழவியைக் காணாமல்
சோகமென்னும் அடர் இருட்சுழலில் மூழ்கிட்டவளாய்
என் செய்வாள் என்பதையும் யாரே அறிவர்? 40

'அந்தோ! அவள் இழிஊழ் மேன்மேலும் தொடர்கிறதே;
விசனத்திற்கும் மேல் விசனமாக அடுத்து வருகிறதே
துன்பமொன்று முடிவிற்கு வரும்முன் பிறிதொன்று
பெருந்துன்பமாகவே வந்து எதிர் நிற்கின்றதே. 41

உண்மையிலேயே இது தாங்கவொண்ணாத் துயரமன்றோ
சீதையின் உள்ளமோ துகள்துகளாகி சிதறிடுமே!
இதைப் பொறுக்கும் சக்தியும் ஏது அவளிடம் இன்று'
என்றே மனதில் வேதனை மிக்கொண்டு எண்ணினரே பல. 42

முன் குழந்தையைப் போன்ற அங்கவடிவுகள் அனைத்துமே
பொருந்தியதொரு குழவியை படைத்திட்டேனாகில் என்ற
எண்ணம் மனதில் எழவே அருகினிலிருந்த பாறை ஒன்றில்

முன் சிசுவின் வடிவத்தை அழகாகவே வரைந்தாரன்றோ? 43

மதியிற்சிறந்த முனிவர் எண்ணலுற்றார் இவ்விதமே;
இக்குழந்தைக்கு உயிர் கொடுத்தே, உண்மையாக்குவேன்;
இடையில் குழந்தையைக் கையிலேந்தியே திரும்பிவரும்
விதேகமன்னன் மகளைத் திடுக்கிடக் கண்டாறன்றோ?' 44

'நீ என்னருகில் விட்டுச் சென்ற இப்பச்சிளங் குழந்தை
உன்கையில் வந்ததும் எப்படி? அறியேன் நானிதை''
இவ்வார்த்தைகளைக் கேட்ட சீதை, உடனேயே
கீழ்க்கூறும் வசனங்களைக் கூறவும் துவங்கினளே: 45

'உண்மையே, நான் உங்கள் அருகாமையில் என்
குழந்தையை விட்டது ஆயினும் இம்மந்திகளோ
என்னைக் கண்டு வழியில் கடமை உணர்வற்றவள் என
எள்ளிநகையாட நானும்என் கருத்தை மாற்றிவிட்டேன்'' 46

'மந்திக்குரங்குகள் கூறிய எல்லாவற்றையும் அந்தோ
விலாவரியாக எடுத்துக் கூறினாள் வைதேகி, முனியிடம்
அவரிடம் தன் கருத்தை உள்ளபடி உரைத்திட்டே
நானே குழவியை இங்கிருந்து எடுத்துச் சென்றேன்' என்றனளே
47

'போகட்டும் இங்குருவாக்கிய இதைப் படைத்ததும் யாரோ
இதை செய்யும் உத்தேசமும் தான் என்னே? எடுத்துரைப்பீர்!''
என உரைத்த உரை கேட்டு பதிலுரைத்தனரே முனிவர்-
நெடுநாள் தவமேற்றே உயரிய பலன் பெற்றவர். 48

'என்னருகாமையில் குழந்தையைக் காணக்கிடைக்காமல்
அதன் காரணத்தையும் அறியும் ஆற்றல் அற்றதனாலே,
புதிதொரு குழந்தையைப் படைத்தேன் நான், அந்தோ!''
உன் நன்மைக்கோறியே சிந்தித்துச் செயல்பட்டேனே!'' 49

கணவனால் கைவிடப்பட்டு துயருற்ற நீயோ மகளே!
இன்று ஈந்த பச்சிளங்குழவியையும் பிரிந்து விட்டாலோ
திடீரென ஏற்பட்ட மிகவும் வேதனைக்குரிய இந்நிகழ்ச்சியோ
புண்ணிலிட்ட உப்பொப்ப தாங்கொண்ணா துயரளிக்குமே!'' 50

'இவ்வாறு சிந்தனையிற்கொண்டே மகளே! ஈண்டு
குன்றின் துகளில் நான் எழுதி சித்தரித்தேனம்மா
இதை எழுதியது மாத்திரமின்றி இதோ இதற்கு
உயிர் கொடுத்து எழுப்பிடவும் முயன்றேனே! 51

'இதற்கிடையில் குழந்தையை நீயே தாங்கி அன்புடன்
ஏந்தி வரக்கண்டேனே. அம்மையே! எண்ணிப் பார்த்திடில்
இனி உயிர் கொடுக்கும் அவசியம் என்? தேவையில்லை
எனபணிவிடுத்து இருந்தேனம்மா, உண்மையிதே'' 52

'தாங்கள் இவ்வாறு எண்ணுவதும் உசிதமில்லையே
உயிர் கொடுத்தே இக்குழந்தையை எழுப்பிடுவீர்;
பிறிதொரு குழந்தையும் இருத்தல் சகாயமல்லவோ
என் மகனுக்கும் விளையாடும் தோழனாவான் அன்றோ? 53

வார்த்தை கேட்டே தான் எழுதிய உருவத்தினில்
உயிரையும் விதிப்படியே ஏற்றிட்டார் அன்றோ முனிவர்
மந்திர சக்தியுடன் விதிகள் யாவும் முடிந்திடவும்
ஆங்கொர் அழகிய குமாரன் உயிர் பெற்றெழுந்தனனே! 54

தன் தவவலிமையால் படைத்த அக்குழவிக்கு
லவன் என்னும் பெயர் சூட்டினரே முனிவரும்
அக்குழந்தையைப் பெற்று சீதையும் சென்றிட்டாள்-
முனிவரின் தாளடிமலர்களை வணங்கிப் போற்றியே!. 55

இவ்விரு குழந்தைகளையும் அன்புடன் பேணிக் காத்தனளே
மாமுனிவரின் ஆசிரமத்தில் இருந்து பரிவுடன் காத்தனளே 56

# 22

# மங்குட லவ இராமனின் சேர்க்கை

குழந்தைகள் இருவரும் சுகமாய் களித்திருந்திட
வஜ்ரமிருக் குடிலில் ஆண்டுகள் பத்தும் கழிந்தனவே 1

பிள்ளைப் பிராயத்திலே தங்களது வீரியத்தினால்
வலிமை கொண்டே வீராதிவீரர்களை வென்றனரே. 2

இருவரும் ஒரு நேரம் தாயின் அனுமதிபெற்றுச் சென்றிடவே
ஆங்கு வானைத்தொடும் உயர் மரமொன்று கண்டனரே! 3

அவ்வரணியத்தில் இவ்வளவு உயர்ந்து வளர்ந்த
பிறிதொரு மரமும் காணக் கிடைக்கவில்லையே; 4

தன் வில்லாற்றலின் திறமை சோதிக்க எண்ணியே
அம்மரத்தின் மீது அம்பொன்று விட்டானே, மங்குடன் 5

வேகம் மிக்க விசையுடன் விடப்பட்ட அம்பு
மரத்தில் படவும் இரு துண்டுகளாய் வெடித்ததே. 6

அம்பு துளைக்க மரம் வெடித்து துண்டுகளாக
இப்பூமியே அதிரும்படி பேரொலி எழுந்ததம்மா! 7

மிருகங்கள் யாவும் அச்சத்தால் இங்குமங்கும் ஓடினவே;
சில தங்கள் மலை குகைக்குள் ஓடி ஒளிந்தனவே! 8

ஊழிகால காற்றொப்ப எழுந்த மரம் பிளந்த பேரொலி
பூமியில் வாழ்ந்தவர்கள் யாவருமே கேட்டு பீதியடைந்தனரே 9

அயோத்தி வாழ் இராமன் செவியிலும் வீழந்ததே அவ்வொலி
கேட்டு மிகக்கவலைகொண்ட மனதுடையரானானன்றோ? 10

'நாராயணன் நானிருக்க நாராசொலி எழுப்பியதும் யாரோ?
இப்பூவுலகில் அவனைத் திண்ணம் தேடிக்காண விழைகிறேன் 11

அறிய எண்ணியே அசுவமேத வேள்வி காத்திட
எண்ணினான் இராமன் ஒலி எழுப்பியவரை காண 12

அச்சந்தரும் அப்பேரொலியோ, படைப்பை அழிப்பதாகவும்
திடீரென வெளித்தோன்றி அமையும் எரிமலை ஒத்திருந்ததே 13

தீர்மானித்தே இவ்விதம் உயர்ந்த சாதிக் குதிரை ஒன்றைப்
பனிபொல் வெண்ணிற உடலும் செம்பாதங்களும் 14

கும்மிருட்டொத்த கரிய முகமும் காற்றின் விசையுங் கொண்ட
உலகில் உயர்ந்த பரியை வேள்வி பொருட்டனுப்பினனே 15

நினைவு மீண்டும் பெற்ற வானரன் பாலகன் உருவெடுத்தே
அவ்விரு சகோதரர்களைக் கொன்றிடவே துரத்திச் சென்றனனே. 32

மீண்டும் வானரனுக்கே கேடு முன்போல் ஏற்பட்டதே!
மங்குட வீரனால் அடிபட்டு உயிரிழந்தவன் போலானான்! 33

அச்சமயம் லவனின் பார்வை கபி மேல் படவே, அந்தோ
கண்டான் கபியை நல்லுடுப்புகள் உடுத்திட்டே அல்லவோ? 34

'ஆஹா! வானரம் நல்லாடை உடுத்துவதா? என்ன விந்தையிது!
எனத்திகைத்தவன் சோதரன் மங்குடனுடன் கண்டு வியந்தானே 35

குரங்கைக் கொல்வதா? என்னும் மதியைப் பெற்றே
இருவீரசிகாமணிகள் அவனை நன்கு கட்டிவிட்டனரே! 36

அவன் தலைவனன்றி வேறொருவரும் விடுவித்தல் கூடாது
என்றொரு திண்ணமான தீர்மானத்தை இருவரும் ஏற்றனரே! 37

வானரனைக் கட்டும் சமயம் அவன் நினைவில் இல்லையே!
நினைவு மீள பொறுமையின்றி புலம்பினனே! 38

'எல்லோரும் கண்டதோ அளவற்ற என் பராக்கிரமம் ஆனால்,
என்னிழிஊழ் குழந்தைகள் வீரமிழக்கச்வ செய்தனரே 39

'காற்றின் மைந்தன் காற்றுவேகம் கொண்டோன்;
வச்சிரங்கன் எனபோற்றிட தோற்றேனே பாலகனிடம்! 40

சாதாரண குரங்கு போல் கட்டுண்டது கவலையில்லையே,
பிரும்மதேவன் கொடுத்த பதிலடியும் பயனில்லாமலாயிற்றே. 41

குறும்புத்தனம் கொண்ட குழந்தைகள் கயிறினால் கட்டினார்கள்
பரத சத்ருக்னர்களாவது என் கட்டவிழ்த்திருக்கக்கூடாதா? 42

இவ்வாறே துக்கமும் வேதனையும் மனதில் கொண்ட கபிவரன்
வெட்கங்கொண்டவனாய் பரத சத்ருக்னனை அணுகினனே! 43

தன் கட்டவிழ்க்க பலமுறை வேண்டிக்கொண்டானன்றோ?
ஆனால் முயற்சி மிகச் செய்தும் முடியவில்லையே அப்பணி? 44

நாம் இருவரும் மகாரதர்கள், குழந்தைகள் கட்டிய கயிற்றை
பிரித்திடும் திறன் நம்மிடம் இல்லையே! அந்தோ! 45

அவர்கள் முயற்சியும் பலனற்றதாகவே கண்டு, அந்தோ
சக்தியிழந்த தன்னிலைமையும் கண்டு மனம் சோர்ந்தனனே. 46

'இனி என் செய்வேன்? எப்படி நடந்துகொள்ளவேண்டும்?
அறியேன் ஆபத்தில் மூழ்கித்தவிக்கும் எனக்கு படகு யாரோ? 47

'இந்நிலையில் எனக்குப் புகலிடம் உலகநாயகன் இராமனே'
அடிபணிந்தோரைக் காக்குமவனை புகலடைகிறேன்!' 48

'ஆனால் இந்நிலையுடன் இந்நேரத்தில் செல்வதும் தான் எப்படி?
எவ்வழி ஏற்பேன் நான் அந்தோ! விதி கருணையற்றதே!''
49

'விண்வழியே விரைந்து செல்வதும் சரியே எனினும்
தேவர்கள் என்சக்தியற்ற நிலைகண்டு நகைப்பரன்றோ? 50

'அல்லலுற்று அவதிப்பட்டே கயிற்றால் கட்டப்பட்டே
அயோத்தி செல்வதன்றி அறியேனே பிறிதொரு வழியும்? 51

'வாழ்நாள் முழுவதும் இப்படியே கழிக்க வேண்டுமன்றோ?
இந்நிலையில் போக நிச்சயிப்பதும் கூட கடினமாயிற்றே' 52

இப்படி எண்ணி எண்ணியே வேறு உபாயம் அறியாமலே
அயோத்தி செல்வதெனத் தீர்மானித்தான் கபிவரனும் ஆங்கே!
53

ஆகாய வழி மூலம் நொடிகள் சில கடந்தே, ̀பிரபுவை
வந்தடைந்தே, வருணித்தான் வரியாய் விவரமதை! 54

கேட்டும் கண்டும் கடுங்கோபங்கொண்டனனே பிரபுவும்
தன்னடியார் சிதவுப் பொறுப்பாரோ அடியார்க்கு
நல்லான்? 55

எல்லாப் பணியும் உடன் நீத்தே வீரன் கபியுடன் கூடவே
அந்நொடியே அரண்யத்தை அடைந்திட தீர்மானித்தனனே 56

நொடிப் பொழுதும் தாமதியாமல் வந்தனரே வனமதனிற்கே;
மகிழ்ச்சிபொங்கி பாலகர்கள் களித்திடும் அவ்விடம்! 57

விஷமம் வேண்டாம் என்றே பாலகர்களை அச்சுறுத்தினரே
தண்டனைக்குரியவர்கள் என நினைத்து கொடுஞ்சொற்களாலே! 58

அவர்கள் அச்சுறுத்தலோ அப்பாலகர்களின் மனதினுள்-
கோபத்தீயை நெய் தாரை வீழ்ந்ததுபோல் எழுப்பியது. 59

மதயானை கண்டு கர்ஜித்தெழும் சிங்கநாதம் போல்
சிங்கக் குட்டிகள் எழுப்பின ராஜசிங்கத்தை கண்டே 60

தன் வில்லிழுத்து நாணொலியை மீண்டும் மங்குடன் எழுப்பியே
காலால் மிதிபட்ட பாம்பைப் போல் ஹூங்காரம் எழுப்பியே 61

சினத்தால் எரியும் சிவந்த கண்கள் இளஞ்சூரியனொப்பவே
மிக வலிவுமிக்க வார்த்தைகளை ஆண்டு உரைத்தனனே 62

''உங்கள் குதிரையை பிடித்திழுத்தது எங்கள் குற்றமில்லையே,
காட்டில் அலையும் குதிரை வேறு வனம் நடத்திச் சென்றோம்'' 63

'இதில் எழுதிய சொற்களில் உள்ளது குற்றம்! அந்தோ
அதிலுள்ள வீரவசனம் என் போன்றோர் பொறுப்பரோ?'' 64

'சராசரப் பொருள் நிறைந்த பூமியில் அரசனே இல்லையோ?
நானும் அரசவம்சத்தைச் சேர்ந்தவன், உங்களை எதிர்த்திட தயார் 65

'சக்தியிருக்குமாகில் நீங்கள் போரிடுங்கள் என்னுடன்
சக்தியற்றவர்களாகில் தந்தேசம் திரும்பிச் சென்றிடுங்கள் 66

'சரபங்கள் மேகக்குமுறலை ஒரு பொழுதும் சகிப்பதில்லையே;
நான் சரபக்குட்டி மன்னனே! என்னுடன் போரிடுங்களேன்.'' 67

என்றுரைத்தே அச்சந்தரும் அம்பொன்றை ராமனிடம் விட்டனனே
தகிக்கும் சினத்துடன் அம்பொன்றை அவனும் எய்திட்டனனே 68

இரண்டம்புகளுமே இலக்கை தவிர்த்தே சென்றனவே
ஒன்றையொன்று மோதியே விழுந்தன மண்ணிலம்மா! 69

ராமன் எய்திய அம்பு, மகனின் குருதியை ருசிக்கவில்லையே!
மங்குடனம்பும் தந்தையின் குருதியை ருசி பார்க்கவில்லையே!
70

இந்நிலையில் இங்கு நடந்த இதுவே விந்தையல்லவோ?
பிறிதொரு பெரும்வியப்பில் ஆழ்த்தியதும் ஒன்றுண்டே! 71

பெரும் வீரன் மங்குடன் இலக்கில் ஏற்றிய அம்பு நொடியிலே
சுற்றிவந்து மலர்க்குவியலாய் இராமடிமலரைப் பூசித்ததே! 72

கண்ட அதை வியந்து இராமன் மயிர்க்கூச்சல் எடுத்தவராய்
பாலனைப் பற்றிய விவரமறிய அவா மிகக் கொண்டனனே! 73

அப்பாலகனை அழைத்தே 'நீ யார் மகன்? கூறிடப்பா!
சாதாரண பாலகனல்ல, தனிக்குணம் கொண்டவன்?'' நீ 74

மங்குடனோ, 'சீதையின் மகன் நான் அல்லவோ?'' என்றனனே!
'வஜ்ரமிருக்' முனிவரின் குடிலில் அவருடன் வாழ்கிறவன் நான்''
75

அதுகேட்ட இராமன்மனம் எல்லையில் மகிழ்ச்சி கொண்டதே!
எதிர்பாரா ஆனந்தம் எவரைத்தான் உவகைக் கடலில் வீழ்த்தாது?
76

தன் மகனே என்றெண்ணி, அருகில் வந்தான் விரைவிலேயே
பொங்கும் மகழ்ச்சியுடன் மீண்டும் அரவணைத்தனனே! 77

ஆழ்ந்து கண்டிடின் தன்னுருவை அவனிடம் கண்டனனே!
ஆழ்மனது புல்லரிப்புடன் மகிழ்ச்சி பெறச் செய்ததே! 78

ஆனந்த கண்ணீர் நிறை கண்ணுடன் உச்சிமுகந்தனனே;
தன் மனவிருப்பமே உருவெடுத்த பாலகனைக் கண்டனனே! 79

சீதை உயிருடன் இருப்பதேமிக்க மகிழ்ச்சி அளிக்கிறதே!
நன்மை வருகையில் மேலும் நன்மைகளே பயப்பதாகுமோ? 80

மகனைப் பெற்ற மகிழ்ச்சியுடன் மனைவிபெறும் லாபமுமாக
ஒரே நேரத்தில் கடவுள் அமிர்தமென இரு பழங்கள் ஈந்தனனே!
81

'இதனிலும் விரும்புவதும், மகிழ்ச்சி அளிப்பதும் தான் என்?
என் அல்லலுகெல்லாம் முற்றுப்புள்ளியாய் நிற்கிறானே பாலகன்?
82

சீதை இறந்துவிட்டாள் என்றல்லவோ உரைத்தான் தம்பி?
அவள் உயிருடன் இருப்பதும் எப்படி இயலும்? 83

நிலைமை தெளிவு பெற வினவினனே இலக்குவனை

உண்மை உரை, நீ சீதையைக் கொன்றிட்டாயா? 84

இலக்குவனும் இறந்த காலம் நினைவு கூர்ந்து விவரிக்கவே
இராமனும் செவிமடுத்து மேலான மகிழ்ச்சி அடைந்தனனே 85

'நீ செய்ததும் சரியே. பொங்கும் மகிழ்ச்சிக்குக் காரணம் நீயே
உரைத்திட்டே மீண்டும் அரவணைத்தனனே இளையவனை 86

உளம் கனிந்த அன்புடன் மங்குடனைப் பார்த்துக்கூறினனே:
'குழந்தாய் உன் தாயைக்காண விழைகிறேன் அப்பா!'' 87

'ஆகட்டும் அப்படியே அப்பா' என்றுரைத்து லவனுடன்
வஜ்ரமிருக் முனிவரின் குடிலை நோக்கி புறப்பட்டனனே 88

தாமதமின்றி உடனேயே ஆசிரமத்தை அடைந்தனரே
மங்குட லவனுடன் இருந்த சீதையைக் கண்டனரே. 89

நடந்த விருத்தாந்தங்களை அவளுக்கெடுத்துரைத்தே
இராமனுடன் ஏற்பட்ட யுத்தம் சேர்க்கை அனைத்துமே! 90

விவரங்கள் யாவற்றையும் நன்கெடுத்துனரத்தனர்
தன் தாய்க்கு லவனும் மங்குடனும் ஆங்கே!
இராமனுடன் நடந்த யுத்தமும் சமாதானமுமே
புண்ணிய குடிலுக்கு காட்டிலிருந்து வந்ததையுமே!

# 23

# சீதை பாதாளத்தில் புகுந்த கதை

தன்னிருப்பிடமாம் குடிலில் தன்பதியான இராமன்,
வந்திருப்பதைக் கண்ணுற்ற சனகன் மகளோ
திரும்பிச் செல்ல மனமின்றி அங்கிருக்கவும் மனமிசையாமல்
பேரலைகளின் நடுவில் சிக்கிய ராஜ அன்னம் போலானாளே.
1

பலகாலமாகக் காணாத இராமனைத் திடீரென அங்குகண்டு,
விரதம் மேற்கொண்டதொத்தே ஏங்கும் தன்னிருகண்களினால்
பருகினாள்; பருகினாள்; மன திருப்தியும் கொள்ளவில்லையே!
ஆனால் நொடியில் அவள் சிந்தனையும் சிறிது கலைந்ததே 2

அந்தோ! தீவினைகள் நெருங்கிய எனக்கு அவனல்லவோ
அளித்தனன் முன்பு மரணதண்டனையே உசிதமென்று
அம்மா கடந்தது, காலமும் பத்து பருவங்கள் பெயர்ந்தே
அல்லலுற்றே. காலத்தை கழித்தேனே நானும் காட்டிலேயே 3

ஐயப்பாடாம் இரும்புமுள்தைக்க கடுஞ்சினங் கொண்டே
உண்மை நிலைமையை சிறிதும் பொறுத்தறியாமலே
நான் நெறி தவறியவள் என்ற எண்ணம் கொண்டே
மரண தண்டனை தீர்மானமாக விதித்தான் அன்றோ? 4

அவனுடன் நான் செய்வதற்குள்ள பணிதான் இனிஉண்டோ?
கொடியவன் குரூரமான ஐயம் கொண்டவன் அன்றோ?
என்னிடம் கடுமையாய் நடந்து கொண்டவனன்றோ?
அவரிடம் நான் கடுமையாய் இருத்தலும் பொருந்துமன்றோ? 5

சுடுகாட்டிலிருப்பது போன்ற வாழ்க்கை கிட்டியதே எனக்கு!
மகிழ்ச்சி சிறிதளவும் கிட்டவில்லையே எனக்கு
அல்லல்கள் பல அனுபவித்தே முனிவரின் குடிலில் அந்தோ
பரிதாபத்திற்குரியவளாய் தவம் மேற்கொண்டு வாழ்கிறேன் 6

மனைவிக்கு மரண தண்டனை கணவன் அளித்திடிலோ,
அப்பெண் உயிர் வாழாதிருப்பதே உகந்தது; திண்ணம்;
ஆனால் குற்றமொன்றில்லாமலேயே தண்டனை அளித்திடின்,
அம்மன்னன் குலத்திற்கு இந்நேர்மை ஒவ்வுமோ? 7

அல்லல்களுக்கும் இன்னல்களுக்கும் என்னை ஆளாக்கியே
இன்பம் இவர் கொண்டதும் போதாதோ, அந்தோ!
என்னின்பக் கொழுந்துகளையும் தவிக்கவிட எண்ணியே
என்னாசிரமம் தேடி இங்கே வந்தனரோ அம்மா! 8

இப்படி பற்பல சிந்தனைகளாம் பேரலைகளால்
மேலும் கிழும் நன்கு உந்தப்படும் சபரீ மீன்கள் ஒப்ப
சிறிது நேரம் சீதையின் மனதும் ஆட்டங்கொண்டதே
நொடிப்பொழுதில் அமைதியில் அமர்ந்தாள் அவ்வணங்கோ.. 9

அழகிய இராமனும் கடுந்துன்பங்களாம் பெரும்முகில்
மறைத்திட்ட முழுமதி போன்ற முகக்கமல சீதையை
தாகம் பீடித்தவன் குளிர்ந்த ருசியான நீரை பருகுவதொப்ப
கண்ணிமைக்காமல் பார்த்தும் மனநிறைவடையவில்லையே! 10

துன்பம் படர்ந்த காந்தி கொண்டிடினும் அவளது
முகத்தின் பொலிவோ அழகு நிறைந்த சோபையுடன்
கண்களுக்கு அரியவிருந்து படைப்பதில் குறைவின்றியே
உள் மனதில் உவகை பொங்க வைக்கிறதன்றோ? 11

பார்த்துப் பார்த்தே மனவேதனை மிக அடைந்தவளாய்
விதேக மன்னன் மகளிடம் மன்னிப்புக் கோரியே
தன்னை மீண்டும் மீண்டும் பலவாறு அந்தோ
விதி விளையாடிட மதி பேதலித்ததனாலேயே! 12

'முன்னர் தீக்குளியினால் பரிசுத்தமானவளே
என அறிந்தும் ஓவியம் பார்த்ததைக் கண்டு தண்டித்தனனே;
தண்டிக்கத் தகாதவளை ஆராய்ந்தறியாமல் மரணதண்டனை
அளித்ததைக் குறித்து வெட்கம் மிக அதிகம் அடைகிறேன்!" 13

'அழகிய முகத்தோய்! என் குற்றத்தை மன்னித்திடு;
பொறுமைச் செல்வம் படைத்தவள் நீ. பொறுமையில் பூமி நீ;
இவ்வுலகில் குற்றம் செய்யாதவரும் தான் உண்டோ அந்தோ!
இயற்கையிலேயே குற்றங்கள் தானே வெளிவருகின்றனவே! 14

இப்படிப் பல கூறியே மிக்க வெட்கமும் கொண்டே
தன்னங்கங்கள் நாணத்தினால் குறுகித் தவிக்கின்றவனாய்
சனகன் மகள் மனம் சாந்தப்படுத்த எண்ணியவனாய்
சாந்தமாய் சினங்கொண்டவளின் பாதம் தொட்டனனே 15

'பயந்த சுபாவம் கொண்டவளே!' விளித்தான் இராமனும்
குற்றத்திற்கு பயந்தவன் உன்னிடம் மன்னிப்புக் கோறுகிறான்
குற்றம் செய்தவன் நான். கண்டே சினங்கொண்டாய் நீ
நீ கோபங்கொண்டதிலும் தவறேதும் இல்லையே! 16

உன்னை அழைத்துச் செல்லவே காத்திருக்கிறேன்;
என்னுடன் அயோத்தி நகரம் திரும்பி வந்துவிடு
என் மாளிகையின் பொலிவாய்த் திகழ்வாய் மீண்டும்;
எனக்கும் மனஉவகை அளித்திடுவாயே அம்மா!' 17

'பத்து வருடங்களும் நானும் எப்படியோ கழித்தனனே;
அரண்மனையில் அரணியவாசம் ஒத்தே காலமன்றோ?
அம்மாளிகை தளத்தில் அழகிய அணங்கு சீதை நீயின்றி
பல யுகங்களாகவே என் பொழுதைப் போக்கினேனே! 18

'உன்னிடம் ஒன்றியமனதுடையோன்; இதில் ஐயமில்லையே
அரசவைபவங்களிலும் சிறிதும் ஈடுபாடில்லையே, அம்மா!
திக்குகளும் சூனியமாயின; உலகமே வெற்றிடமாயிற்றே!
சூனியமான எனக்கு எல்லாமே பொருளற்றதாயிற்றே!'' 19

வார்த்தைகள் இவை கூறி நரேசனும் நிறைவுற்றிடவே
கோபத்தினாலும் துக்கத்தினாலும் எரிக்கப்பட்ட சீதை-
எவ்வாறோ தன்னை ஒரு விதமாகத் தாங்கியே அந்தோ,
மன உறுதி கொண்டவள், பகர்ந்திட்டாள் இவ்வாறே: 20

'பயமளிக்கும் கொடிய ஐயத்தினால் கடிக்கப்பட்டதுமே
உயிர்ப்பறிக்க தகுந்த தண்டனை நீ விதித்தனையே!
தன் வாழ்க்கையில் எல்லாமே வெறுமையாகிவிடுமே
என்ற இவ்வெண்ணமே உனக்குத் தோன்றவில்லையோ! 21

'இப்பொழுது விதிவசத்தினால் உயிருடன் உள்ளேன் நான்!
இறந்தவள் ஆனேன் அன்றே மன்னனே! உனக்கு நான்
இறந்து போன எனக்கு இப்பொழுது உன்னுடன் இணைந்திட
இனியுண்டோ நமக்கு இணைந்தாற்றும் பணியும்? 22

'சொல்லினால் விளக்கவொண்ணா பொறுக்க முடியா
தொடர் இடர்களை துணையின்றி அனாதை நான் தவித்தேனே
அரண்மனையின் பல சுகங்களை அனுபவித்து வாழ்ந்தாய் நீ!
நானோ அரணியத்தில் அநேகம் அல்லல்கள் பலவுற்றே'' 23

'இப்பொழுது உன்னுடன் என்னை அயோத்தி நகருக்கு
அழைத்துச் செல்வதாகவே நீ கூறுகிறாய் அன்றோ?
அவ்விசித்திரமான சொல் எனக்கு விந்தையளிக்கிறதே!
ஆண்களின் மனப்போக்குப் புதிராக உள்ளதன்றோ?'' 24

பத்துதலைகொண்ட இராவணனின் மாளிகையில், முன் நானோ
பல காவல்காரர்கள் சூழ நன்கு காக்கப்பட்டே வந்தேனன்றோ?
ஆனால் அது சமயமே என் கற்புக் காக்கப்பட்டதில் அந்தோ
உனக்கு மனதில் மிகக்கோர ஐயப்பாடு எழுந்ததே ஐயா!''
25

'ஆனால் இங்கு இவ்வனத்தில் வெகு காலம் சகாயமின்றி
நான் ஒருவளாகவே பத்து பருவங்கள் வசித்து வந்தேனே;
உனக்கு ஏன் சந்தேகம் ஏற்படவில்லை என் கற்பில்?
உள்ளதே என்னை அழைத்துச் செல்லும் எண்ணம் 26

'கண்டதோ எழுதப்பட்ட இராவணன் சித்திரத்தையே!
கொண்டதோ உன் மனம் ஐயப்பாடு மறைந்த அசூயை
எண்ணுவதோ உன் மனம் மிகக் குறுகியதென்றே, நான்
கலங்கியதோ, உன்மனம் சினம் மிகுந்தாட்டங்கொண்டே! 27

'நொடியும் உன்னை விட்டு அகல விருப்பமின்றியே நான்
வனவாசத்திலும் உன்பின்னே சுற்றி வந்திட்டனே அந்தோ!
பல வருடங்கள் காடுகளின் மத்தியில் கழித்திட்டனே நான்;
பின்னரும் உன் மனதில் எழுந்ததும் இச்சந்தேகம் தானோ? 28

இப்பத்து பருவங்கள் எப்படி இங்கு காட்டில்
தனிமையாகவே நான் கழித்து வந்தேனோ,
அது போலவே மீதமுள்ள என் வாழ்நாள் முழுவதும்
எவ்வாறோ இங்கேயே கழிக்க விரும்புகிறேன்.'' 29

'திரும்பிச்செல் தலைநகர்; மங்களம் உண்டாகட்டும் உனக்கு,
காப்பாய் நியாய வழியில் மக்கள் யாவரையுமே நீ,
இருப்பேன், மனைவியாகவே நான் எப்பொழுதுமே உனக்கு,
வேண்டுவேன் இங்கிருந்தே சதா உன் நன்மையையே. 30

இப்படி பலகூறி தன் பேச்சை நிறைவு பெறச் செய்தே,
கண்ணீர் வெள்ளத்தை இடைவிடாமல் பெருக்கியே,
தன்னுள் வெகுகாலமாக அடக்கிவைத்த துக்கவெள்ளத்தை
தன்கண்ணீர் பெருக்குமூலம் வெளிக் கொட்டினளே 31

இனவம்சத்தோனும் மௌனமே சாதித்தான் அன்றோ?
இடையறாக் கண்ணீர்தாரையை ஆறாய் பெருக்கியே
கணவன் மனைவியாம் இவர்களின் சந்திப்பு அந்தோ!
கரை காணாத் துக்கத்தையே பெருக்கியதன்றோ? 32

கண்ணீர் பெருக்கினால் கலங்கிய கண்ணினன் இராமன்
எவ்வாறோ தன்மனதை ஒருவாறு நிலை நிறுத்தியே
சீதையை கண்டே விளித்தான் அன்றோ வார்த்தை இதையே
'என்னுடன் வா; இணங்காவிடில் கொன்றுவிடு என்னை'! 33

'நீயின்றி நொடிப் பொழுதும் வாழ விரும்பேன்;
நீயின்றி இவ்வுலகில் வாழ்வதும் எப்படியோ?
எனக்கு எல்லாமும் நீயே தேவீ! நான் செய்த குற்றம்
மன்னித்தே அருள்வாய். ஏழையிடம் தயை புரிந்திடம்மா!' 34

'தகுமோ இது நடக்கவும்? நடக்காது ஒரு பொழுதும் இது!
கடுமையான இவ்வார்த்தையை உரைத்திட்டாள் சீதையும்
மனைவியைக் கொல்லும் அரக்கனிடம் வாழ்வதா?
அப்படி உயிர்வாழும் அவசியமும் தான் என்னே? 35

'உன் முடிவும் இதுவே ஆகிடில் குற்றம் புரிந்த
துர்பாக்கியன் நான் இனிச் செய்யக் கடவதும் என்னே!
மகனிருவரையும் அவர்களின் நன்மை குறித்தே
என்னுடன் அனுப்ப அனுமதி கோறுகிறேன் அம்மா! 36

செவிமடுத்தே இச்சொற்களைச் சீதா தேவியின் மன
சிந்தனைகளும் முன்பின் அசைந்தே அலைபாய்ந்திட
இவ்விரு பாலகர்களையும் அனுப்புவதா இல்லையா என்றே
மனதில் தீர்மானம் திடமாய்க் கொள்ள இயலாதவளானாளே! 37

தனிமையிலிருந்தே, அல்லலுறும் எனக்கு ஒரே உறுதுணையாய்
இருந்தவர்கள் அன்றோ இவர்கள் ஆ'! அந்தோ!
வயது முதிர்ந்த நான் எஞ்சியுள்ள என் நாட்களைத்
தனிமையில் கழிப்பதும் தான் எப்படியோ அறியேனே? 38

இவ்வண்ட சராசரமே எனக்கு இருள் சூழ்ந்ததாயிற்றே!
இவ்வுலகமே வெற்றிடமென்பதைக் கூறவும் வேண்டுமோ?
இந்நிலையில் குழந்தைகளின் முகத்தாமரை கண்டல்லவோ
இவ்வாழ்நாட்களை ஒருவாறு கழித்து வருகிறேன். 39

தனக்கென ஒன்றிலா தரித்திரனாய் தவமேற்கொண்டே,
விரும்பத்தகா துக்கங்களினால் சூழ்ந்திருக்கும் நான்
இந்த சீர் குலைந்து நைந்த தவசியின் குடிலெங்கே?
சாகேத நகரிலிருக்கும் வசதிமிக்க மாளிகை எங்கே? 40

சுயநலனைக் கருதி தன் குழந்தைகளுக்கு ஒரு பொழுதுமே
கெடுதலை செய்ய நினைப்பேனோ? தாய் நானன்றோ?
அயோத்தியில் வாழும் இக்குழந்தைகளோ எல்லா
வித்தைகளையும் கற்றறிந்து தேர்ச்சியடைவது திண்ணமே!' 41

அவர்களின் தந்தையும் உயர்குல அரசகுலத்திற்கேற்ப
சகலகலா வல்லுனர்களாக உதவிடுவர் அன்றோ? என்
குழந்தைகளிடம் அன்பும் பரிவும் உண்மையில் கொண்டே
அவர்களின் நன்மைக்காகவே அனுப்பி வைக்கிறேன், இன்று! 42

பலகாலமாக கணவனின் பிரிவு பழக்கப்பட்டே, அந்தோ!
கானகத்தில் குடிலில் வாழ்க்கை நடத்தும் நான்
குழந்தைகளின் நீண்ட பிரிவையும் உடன் ஏற்றிடுவேன்
ஏனெனில் சீதை நான் எதையும் பொறுப்பவளன்றோ? 43

இவ்வித எண்ண அலைகள் மனதில் பெருக்கெடுத்திடவே
கண்ணீர் நிறைந்த கண்ணுடையாள் அனுப்பிவைத்தனளே
பர்ணசாலையின் வாயிலில் நின்றுகொண்டே அவள்
தந்தை பின்தொடரும் குமாரர்களைக் கண்டனளே 44

கண்ணில் படும் தூரம் வரைப் பார்த்துக் கொண்டே அந்தோ!
நின்றிருந்தாள் அங்கேயே அவர்களை நோக்கிய வண்ணமே;
பின் பர்ணசாலையின் படி தாண்டியே உள் நுழைந்தவள்,
வாழைக் கன்றைப் போலவே மனம் இடிந்து வீழ்ந்தனளே. 45

அவ்வனப்பிரதேசத்தில் ஆதரவாய் இருந்த இரு சேய்களும்
முனிவரின் குடிலிலிருந்து அவளை விட்டு நீங்கினரே 46

# 24

# சீதை பாதாளம் புகுந்த கதை

## [தொடர்ச்சி]

தம் தந்தையுடன் இரு குமாரர்களும்
புறப்பட்டு அயோத்தியை அடைந்தனரே;
மதிகிரணமொத்த வெண்ணிறமுடையோர்
மக்களது மனங் கவர்ந்தனரே! 1

அலர்ந்த தாமரையொத்த எழில்மிக்க
யானையைத் தொடரும் யானைகுட்டியொப்ப
ரகுகுலத்தின் புதுக் கொழுந்துகளோ
முனிவேடந்தரித்தே வில்லேந்தியவர்களாய், 2

கண்ணிற்கு மகிழ்ச்சி அளிப்போரைக் கண்டு
அயோத்தி மக்கள் மனம் நிறைவு பெறவில்லை;
உண்மையில் இவ்விரு குமாரர்களும் எப்பொழுதும்
மக்களின் மனங்களில் மகிழ்ச்சியளித்தனரே! 3

அரசனுக்குரிய கொண்டாட்டங்களின்
மகிழ்ச்சியால் உவகை பொங்கிவரவே;
நாட்கள் நகர்ந்தன முதற்படியாக
நொடிப்பொழுது ஒவ்வொன்றும் அனுபவித்தே! 4

அன்னையின் நினைவு பின்னர் மனம்வாட்டிட
இருவரும் கவலைக்கடலில் ஆழ்ந்தனர்;
அன்பும் பரிவும் நிறை தாயிடம் செல்ல
விருப்பங் கொண்டவர் ஆயினரே 5

அழகு பொருந்திய சுகுமாரர்களின்
உள்ளுணர்ச்சியைத் தடுக்கவில்லை தந்தை
பிரிவினை துக்கம் பீடிக்கவும்
இவர்கள் செல்வதை அனுமதித்தாரே 6

சீதைக்கும் தகவல் தந்தனுப்பியே
அக்குழந்தைகள் மூலம் மன்னன்
"அயோத்திநகர் நீ வராவிடிலோ
கண்ணீர்கடலில் என்னுயிர் துய்த்திடும் 7

சனகனின் மகளது குடிலடைந்தே
மிகவும் மெலிந்தவளைக் கண்டனர்;
கண்களில் தாரையாய் பெருக்கெடுக்க
கண்ணீருடன் குழந்தைகளைக் கண்டனளே 8

மீண்டும் குழந்தைகளை உச்சி முகர்ந்தே
அயோத்தியின் விருத்தாந்தங்களை வினவிட,
அவர்களும் அங்கு நடந்த செய்திகளை
இனிய மொழிகளில் இவளுக்குரைத்தனர்! 9

அவர்களின் வாய்மொழிவழியே இராமனது
தகவலைத் தெரிந்து கொண்டாளன்றோ
வச்சிரமொத்த கடுமையான வார்த்தை கேட்டுமே
சீதை மனம் நீராய்க் கரையவில்லையே? 10

''நான் கூறியதாகவே எடுத்துக் கூறுங்கள்
கூறியது முற்றிலும் உண்மையானால்
அவனது கடைசி பார்வைக்கு வந்து விடுவேன்
அயோத்திக்கு இதுவே என் வாக்குறுதி என்றாள்!'' 11

இப்படியே சிலகாலம் கழித்திட்டே
மீண்டும் தந்தையிடம் வந்து சேர்ந்தே
தன்தாயின் உறுதிமொழியைத் தெரிவிக்கவே
இராமனோ மர்மத்தில் அடிபட்டவன் போலானான்! 12

உறக்கமின்றியே பல இரவுகள் கடந்தனவே!
கண் விழித்தே மிகவும் வாடி இளைத்திட்டே,
அழகின் பொலிவோ குன்றாதிருந்திடவே
இன்னமும் உலக அழகனாகவே இருந்தனனே! 13

வெகு நேரம் சிந்தனைக் கடலிலாழ்ந்து
வைதேகியைச் சந்திக்க உபாயமொன்றை.
அவளது வார்த்தையையும் மனதிற்கொண்டு
ஏற்ற அவன் வழி எளிதாய் அமைந்ததே. 14

தன் அந்தரங்க பக்தனான அனுமனை
தன் பணியில் ஈடுபட்டோனை, அழைத்தே
அன்புடன் விளித்தே கூறினன் 'அனுமனே!
என் பணியொன்று நிறைவேற்றிடுவாயாக!'' 15

'மிகவும் தூய்மையான வஜ்ரமிருக்
முனிவரின் குடில் செல் குரங்கே!
அப்பர்ணசாலையில் வசித்து வரும்
வைதேகியிடம் மென்மையாகக் கூறு!' 16

''இதயம் நைந்தே உன் பிரிவினால்
இராகவேந்திரன் உயிர் நீத்தானம்மா
இத்துக்க செய்தியை உனக்களிக்கவே
இவ்வளவு தூரம் ஓடோடியும் வந்தனனே!'' 17

'கூறியபடியே சீக்கிரம் பணியைச் செய்;
நண்பா! மிகவும் கவனத்துடன் இரு
உள்ளுணர்ச்சிகளை உள்ளடக்கிக் காத்திடு;
பேச்சிலும் உள்ளடக்கி மறைத்தே வைத்திரு'' 18

'அன்பான நீ ஆற்றவேண்டும் இப்பணி
நண்ப! என் துயரஉள்ளந் தெளிவுறச் செய்;
நம்பிக்கை கொண்டேன் உன்னிடமே சதா
நீயே என் பக்தர்களில் சிறந்தவன் ஆவாய்!'' 19

'ஆகட்டும் அப்படியே' என தலைவணங்கி
வாயுமைந்தன் குதித்தான் ஆகாயத்தினில்
காற்றினிலும் அதிவேகங்கொண்டே சடுதியில்
வைதேகியிருக்கும் குடில் அடைந்தனனே! 20

கண்ணீரினால் குரல் கம்மியவளைக் கண்டே
கோர செய்தியதனை தெரிவித்தனனே;
இடியொத்த செய்தியைக் கேட்ட
அதே நொடியில் நினைவிழந்தவள் ஆயினளே! 21

அலைஅலையாய் வந்த அல்லல்களால்
இரும்பு போல் கனத்த அவள் மனமோ
இச்செய்தி கேட்ட அக்கணமே அந்தோ!
கரைந்தே உள்ளம் உருகியதம்மா! 22

விரும்பத்தகாத இன்னல்கள் இவ்வுலகில்
பெண்ணொருவள் ஏற்று சகிக்கலாம்;
ஆனால் தாங்கவொண்ணா துக்கமான
கணவனிழப்பை சகிப்பதும் எப்படியோ? 23

இடிபோன்று தாக்கிய மனதுடன்
அயோத்தி நகரக்குப் புறப்பட்டனளே;
கால தாமதமின்றியே அனுமன் கூடவே
அடைந்தனளே மன்னனின் அரண்மனையை! 24

அடைந்தவள் வெம்பிப் புலம்பினள்;
தைரியமிழந்து கண்ணீர் ததும்பியே,
'எங்கு சென்றாய் கண்மணியே! நீ என்னையும்
ஏன் உன்னுடன் அழைத்துச் செல்லவில்லை?'' 25

'அப்பா! வாழ்நாளில் என் கண்மணி நீ
பிரிவையே வெகு நாள் கொடுத்தாய்
உயிர் பிரியும் காலத்திலும் என்னைக்
காண உனக்கு விருப்பம் இல்லையோ! 26

'தனிமையில் என்னை இங்கு விட்டுவிட்டே
சுவர்க்கத்திற்கு நீ சென்றனையோ?
படைத்தவனே இந்நீதி சமைத்தானன்றோ?
மனைவி கணவனை அனுசரித்தல் வேண்டும்!' 27

''கணவனை யிழந்த பெண் படும்
துக்கத்தினும் பிறிதொரு துயரமுமுண்டோ?
என்னாருயிர் தேவனே! அநாதை எனக்கு
இனி வாழ்வும் எதற்கு அறியேனே, அந்தோ! 28

'நான் உயிர் வாழ்ந்திடினும் இறந்திடினும்
என் கர்மவினையை அனுபவித்தே வாழ்கிறேன்;
எப்படியோ ஏதோ ஒரு வகையினில்
துயரத்துடனேயே காலம் கழித்திடுவேனே!'' 29

இவ்வாறு சீதை புலம்பி அழுதிடவே
அங்கேயே இருந்துவந்த இராமன்
சீலையின் பின்னே மறைந்தொளிந்தே
திடீரென தோன்றினான் ஆங்கே 30

கண்டு அவனை வியப்பிலாழ்ந்தே
தன் கண்ணையே நம்ப முடியாதவளாய்
நொடிப்பொழுது செய்வதேதும் அறியாமலே
'மதிமயங்கினேனோ? என ஐயம் கொண்டனளே! 31

'ஆஹா! ஏமாற்றப்பட்டேனே, என் கணவரால்!
தன்னிறந்த செய்தி சொல்லி வஞ்சித்தனனே!
அவன் எண்ணங்கள் வெறுக்கத்தக்கதன்றியே
செய்கைகளும் மிகக் கீழ்த்தரமாயுள்ளதே!'' 32

'என் குழந்தைகள் மூலம் கண்ணீருடனே
உயிர்பிரியும் நேரம் திண்ணமாகவே
அயோத்தி நகரம் நான் வருவேனென்று
கண்ணீருடன் கதறிக் கூறினேன் அந்தோ!'' 33

''அவ்வார்த்தைகளை முற்றிலும் ஏற்றே அன்றோ
என்னை இத்தலைநகரம் அழைத்திடவே
அம்மாயைச் செயலானது கொடியவனும்
மாயாவியுமான என் கணவரால் ஏற்கப்பட்டதே 34

'தூய்மையான உள்ளத்தை வஞ்சித்தலை
பெரியோர்கள் நிந்திப்பாரகள்; இது திண்ணம்!
என கணவரும் ஏமாற்றியே துன்புறுத்துகிறார்
என்னை உயிர்நாடியிலடித்தே அன்றோ!'' 35

'இங்கினி நொடிப்பொழுதும் இருக்க விரும்பேன்;
முனிவரின் ஆசிரமத்தை விரைந்தடைவேன்;
இனி இக்கீழ்மகனில் முதல்வனான இவன்
வார்த்தையிலொரு பொழுதும் நம்பிக்கை கொள்ளேன்'' 36

கூறி இதை இனிச் செல்ல விரும்பியே
விதேகனின் மகள் சீதையும் எழுந்திடவே
அவள் செல்வதைத் தடுத்து நிறுத்த விரும்பியே
இராமனும் அமைதியான வசனங்கள் புகன்றிட்டான்; 37

'நற்பெண்ணே! உன்னை அடைய வேண்டியே
மேற்கொண்ட உபாயம் இது சீதையே!
கோபம் கொள்ளாதே. துக்கமடைந்தவர்களிடம்
கருணை காட்டுவதும் உனக்கழகல்லவா?'' 38

'என் தவறான நடத்தையை கண்டித்து
கருணைக்குரிய இத்துஷ்டனை மன்னித்து விடு!
நல்ல பத்தினிப் பெண்ணைப் பிரிந்தவர்-
மன அமைதியிழப்பதும் இயற்கையன்றோ? 39

சினம் மேலிட பெருமூச்செறிந்தே
சீதையும் அவன் கூறியதைக் கேட்டே
'வஞ்சனை செய்பவருடன் எனக்கென்ன பணி'' என
மீண்டும் மீண்டும் இதையே உரைத்தனளன்றோ? 40

'மனைவியைக் கொன்றவன் நீ நீசன்;
ஏமாற்றுபவன். தவறியவன் துர்மதியோன்;
நான் என் குடிலை நோக்கிச் செல்கிறேன்;
எனக்குச் சிறிது அமைதி கிட்டுவதும் அங்குதான்!'' 41

இவ்வாறு கூறியே கடுஞ்சினத்துடன்
வெளிச்செல்ல அவளும் முயலுகையில்
இராமனும் அவளிடம் கூறினனே:
'இங்கிருந்து செய்வதியலாதே!'' 42

'நுழைவாயில் எல்லாம் மூடியுள்ளனவே
வெளிசசெல்லும் வழியும் உனக்கேது?
உன்னைப் போன்றவர்களை வினயமான
சமாதான பேச்சுக்கள் வசப்படுத்த முடியாதே!'' 43

அக்கொடிய வார்த்தை கேட்டே
மிக்க வியப்படைந்தாள் சீதை
தன்னிஷ்ட கடவுளை கைகூப்பி
கண் மூடி பிரார்த்தித்தனளே! 44

ஆச்சரியம் அல்லவோ நடந்ததாங்கே!
பூமி தானே வெடித்துத் திறந்தம்மா
விதேக மன்னன் மகள் அதில் சென்றனளே
பலரும் போற்றிட பாதாள உலகம் 45

பாதாள உலக மன்னன் நாகவிரண் என்பவனும்
நியாய முறையில் பராக்கிரமத்துடன் ஆண்டனனே! 46

பூமி தானே வெடித்துக் கொள்ள அன்னை
சீதையோ அத்தலைநகருக்கே சென்றாளன்றோ?! 47

அவ்வற்புத நிகழ்ச்சி கண்டு உரோமம் சிலிர்த்து இராமன்
சீதையின் பிரிவைத் தாளாமல் உணர்விழந்து வீழ்ந்தனனே! 48

# 25

# இராமரும் சீதையும் ஒன்று சேர்ந்த கதை

காலம் கடந்திட இராமனும் தந்நினைவு மீண்டும் பெற்றே
தன்னை எவ்வாறோ தானே தேற்றிக் கொண்டவனாய்;
மக்களை காக்கும் பணியை மீண்டும் முற்றிலும் ஏற்றே
கடமையுடன் தன் பணியில் ஈடுபட்டனன் அன்றோ? 1

இதற்கிடையில் பரந்த பெரும் தேவ சபையில்
முக்கண்ணனின் ஆணையினால் கூட்டம் ஒன்று கூடியே
கைலாய மலையில் தேவர்கள் எல்லோரும் ஒருமிக்க
மேல் கீழ் உலகங்களிலிருந்து கூடினரே யாவரும்! 2

ஒவ்வொரு ஆண்டு நூறினுக்கும் ஒரு முறைக்கூட்டி
இவ்வாறே இமயமலையில் எல்லா உலகத்தவரையும்
தான் படைத்த உலகங்களில் நடக்கும் நிகழ்ச்சிகளை
அவரவர்கள் தேவதேவனுக்கு அளிப்பதும் விதியாயிற்று! 3

இம்முறையில் இப்பொழுது கூடிய இத்தேவ அரங்கில்
இந்திரன் முதலிய தேவர்கள் யாவரும் கூறினரே:
''பிரபோ! உலகில் எங்கும் தற்சமயம் அமைதியற்ற
நிலையோ, சண்டை சச்சரவுகளோ, ஏதும் இல்லையே! 4

இராமன் எல்லோரையும் வென்று தன்னாதிக்கத்திலிட
இராக்கதர்கள் மூஞ்சுறு போல் பொந்துகளில் ஒளிந்தனர்
ஆதவன் உதிக்கும் காலையில் இருட்டு அறவே நீங்கி
ஓடிஒளிவதைப் போல் எதிரிகளும் ஓடி ஒளிந்திட்டனரே 5

எவ்விதத்திலும் இடர்களும் இன்னல்களும் துன்பமும்
இருப்பதில்லையே! அச்சமும் இல்லை; அதனால் எங்கிருந்தும்
இராமனே புவி முழுவதையும் பொறுப்புடன் அரசாண்டிட
இராக்கதர்களின் குலத்திற்கு முற்றுப் புள்ளி வைத்தாயிற்று 6

எங்கும் பரந்து அமைதியே குடிகொண்டுள்ளது;
இராமன் இராச்சியம் ஆள வேறு எப்படி இருக்கவும் முடியும்?
கதிரவன் தன் கதிர்களை எல்லாம் உலகில் பரப்பிட
உலகமாந்தர் கண்களை இருட்டு மறைப்பதும் எப்படியோ! 7

ஆனால் செய்தியொன்றே மனதைப் புண்படுத்துகிறது
இராமனை வியந்து மக்கள் கண்ணொளியெனப் போற்றிடினும்
எந்நாளும் அல்லும் பகலும் சீதைப் பிரிவுத் துயரே
அவனை வாட்டுகிறது; அதை நீக்க உபாயம் ஒன்று தேவை. 8

இப்பிரிவினைத் துன்பம் நீக்கிட தீர்வொன்று கண்டிட்டே
உள்ளம் உயர்ந்தோனிடம் உரைத்திடுவோமாகில், சிறந்தது
இராமன் ஒருவன் படும் பிரிவுத்துன்பம் என்றில்லையே
மக்கள் யாவருமே பீடிக்கப்பட்டு அல்லல் படுகின்றனரே! 9

ஓம் அப்படியே ஆகுக என்று ஈச்வரன் உடனேயே
தன் சம்மதம் தெரிவித்தே இராமனை அங்கழைத்திட
ஓராணை பிறப்பித்தே தேவர்கள் மூலம் பாதாள உலகில்
வசித்து வரும் சீதையை அழைத்து வரவும் செய்தனரே! 10

அவ்விருவரையும் ஒருங்கிணைத்து சேர்த்து மகிழவைக்க
மனங்கொண்டே இவ்வாறு சிந்திக்கலுற்றான் அன்றோ
மிகவும் நுட்பமாகவும் குறிப்பறிந்தே பணியை கவனமாகக்
மேற்கொணடால் வெற்றி கிட்டும் எண்றெண்ணியே 11

சீற்றம் மிகக் கொண்டதை மனதிலிருத்தியே மகேசன்
சீதை இராமனை ஏற்பதில் ஐயம் மிகக் கொண்டே அந்தோ
அதற்கு ஒத்ததொரு முதல் உபாயத்தை வகுத்திடவே
இராமனிடம் சினத்துடன் மிரட்டவும் மனங்கொண்டனனே! 12

விவேக சீலனாயிருந்தும் பத்தினியாம் தன் மனைவியின்
உண்மை நிலைமையை சிறிதும் உணரும் பொறுமையின்றி
அவளுக்கு மரணமே அபராதமாய் அளித்தது நீ செய்திட்ட
நிந்தனைக்குரிய முதல் பெருங்குற்றமும் ஆகுமன்றோ!? 13

காற்றின் மைந்தன் மூலம் தன் மரணச் செய்தியை
சீதைக்கு நீ அனுப்பியது பெரிய வஞ்சனை செயலன்றோ?
நீதிநெறி முறைப்படி அரசாளும் அரசப் பெருமகன்
உண்மை மீறிச்செய்த இரண்டாம் பெருங்குற்றமன்றோ? 14

வானுலகம் எய்திட்டான் இராமன் என்னும்
வாய்மையற்ற வசனம் கேட்டு விசனித்தே
சீதை கடைசி முறையாக உன் முகம் காண விழைந்திட
வந்தவளை நீ தடுத்து நிறுத்தியது மூன்றாம் குற்றமாகும்! 15

விதேகனாம் சனகனின் மகளிடம் நீ செய்த
குற்றம் மூன்றினிற்கும் மன்னிப்புக் கோறிடு;
குற்றம் செய்தவனை அவளோ திண்ணமாகவே
சினம் அகற்றி மனமிசைய மன்னிப்பாள், உன்னை! 16

'நான் விதேகன் மகளிடம் நடந்து கொண்டது
நேர்மையல்ல. அபராதத்திற்குரியவன், நானே;
இங்கு குழுமியிருக்கும் தேவர்களின் இடையில்
நான் மன்னிப்பு கோரிடுவேன்'' என்றான் இராமன். 17

மகேசனாம் சிவனும் விதேகன் மகளை நோக்கி
வார்த்தைகள் இவைகளை உரைத்திட்டான் அன்றோ?
'சீதே! பொறுத்தருள்வாய் அம்மா! உன் பதியல்லவோ?
இராமன் அன்பை ஏற்காததும் உனக்கு முறையில்லையே?'' 18

பிரபு சம்புவின் வார்த்தைகளைச் செவிமடுத்தே சீதை
பகர்ந்திட்டாள் இதுவன்றோ! ''என் பதி மனதிடமற்றவன்;
ஒரு நேரம் சினங்கொள்வான் சில நேரம் அன்பு கொள்வான்;
ஈதல்லவோ என் அச்சத்திற்கும் மௌனத்திற்கும் காரணம்?'' 19

''காரணமிதனைக் கொண்டே நான் ஏற்க மறுக்கிறேன்
மீண்டும் இவ்வாறே அவன் நடத்தையுமிருக்கலாம்;
என்னிடம் நன்னடத்தை கொள்வாரோ வேறுவிதம் கொள்வாரோ
என்று கணித்திடும் திறனும் எனக்கில்லையே என் செய்வேன்?''
20

இவ்வண்ணம் மனச்சீரற்ற ஒருவன் அன்பு உண்மையில்
இவ்வுலகில் வேற்று வழியாய் அச்சுறுத்தலாமன்றோ?
இதுவே காரணம் இவனுடன் இல்வாழ்க்கை மேற்கொண்டிட
இச்சங்கல்பமும் நான் திடமாகவே ஏற்றிட்டேனன்றோ? 21

விதேக மன்னன் மகளின் திடபுத்தியை அறிந்துகொண்டே
முக்கண்ணன் மகேசனும் மீண்டும் முறையிட்டனனே;
''நற்குடிப் பெண்ணே! மனதை மாற்றிடு; இனி நடக்காதிது;
பெண்களுக்குப் பதியே பரமேச்வரன் ஆகிறானன்றோ?'' 22

''அருள் கூர்ந்தே இவனை உடன் ஏற்றுக் கொள்;
என் வார்த்தைக்கு அடிபணிந்ததாக நினைத்தே நீ
வேறு சிந்தனைகளை மனதிலிருந்து அகற்றியே
நான் கூறும் வார்த்தைகளை பரிவுடன் ஏற்றுக் கொள்!'' 23

''பிரபுவே! தங்களாணையைத் தலையால் தாங்குகிறேன்;
எப்பொழுதும் உங்கள் ஆணைக்கு அடிபணிகிறேன்;
எனக்கு மதியில் வேறுபாடு ஏதும் இல்லையே;
பெரியோர் இடும் ஆணை சிந்தனைக்கப்பாற்பட்டதே!'' 24

''அடிபணிந்தேன். ஆகவே உங்கள் ஆணையை
அங்கீகரிக்ககிறேன்; என் கணவரை இத்தேவசபையில்
வணங்குகிறேன்; வார்த்தைகள் சில கூறியே
உலக ஈசனாம் பிரபு மகேச்வரனையே!'' 25

கம்புவை வணங்கி விடை பெற்ற இராமன்
விதேக மன்னன்மகள் சங்கமத்தால் மனம் மகிழ்ந்திட
மனம்மாறி மகிழ்ச்சி கொண்டு விண்ணோர் விடைபெற,
சீதையுடன் அயோத்திநகருக்கு திரும்பிச் சென்றனனே! 26

அயோத்திநகர் அடைந்தே மிக்க மகிழ்ச்சியுடன்
சீதையுடன் தன் வாழ்நாட்களைக் கடத்தினனே;
இராமனின் மனமகிழ்ச்சி கண்ட மக்களும்
சிரித்துக் களித்து ஆடிப்பாடி அகமகிழ்ந்தனரே! 27

வாழ்க்கையில் இன்பரசம் பெருகி வளர்ந்திட
வாழ்க்கைத் துணைவியுடன் இல்வாழ்க்கை நடத்தியே
சீதையுடன் மகிழ்ச்சி வெள்ளத்தில் மூழ்கியே இராமன்
சீராக குற்றமொன்றின்றியே நாட்களைக் கழித்தனனே! 28

ஞாலம் முழுவதும் பரந்திட அவன்தன் கீர்த்தி
வெண்மதிபோன்றே கோதிலா மதிவொளியுடன்
ஒருபொழுதும் மதிமயக்கத்தை அடைந்தானின்றியே
தூயஉள்ளத்துடன் தெளிந்த வாழ்க்கை நடத்தினனே! 29

இவ்வாறே எஞ்சியுள்ள தன் வாழ்நாட்களை
அளவிலா ஆனந்தத்துடன் கழித்தே
நல்லோர்க்கு வாரிவழங்கும் கல்பதருவாய்
பகைவருக்குத் தாவாக்னியாய் விளங்கினனே! 30

தன்வாழ்க்கைத் துணைவியுடன் வேள்விகள் பல காத்தே
அந்தணர்களுக்கு வாரி வாரி வழங்கி வள்ளலாய்
மக்களின் மனநிறைவு பெறுமளவு பேணிக் காத்தே
மாசற்ற ஒளிபொருந்திய கீர்த்தியை நிலைநாட்டினனே! 31

# முற்றிற்று

ஸ்ரீ சத்யவிரத சாஸ்திரி அவர்கள் இயற்றிய காவியங்களில் ஸ்ரீராமகீர்த்தி மகாகாவ்யம் எனப்படும் அக்காவியம் நிறைவு பெற்றது. அக்காவியத்தைப் படிக்கிறவர்களும் படிக்கக் கற்றுக் கொடுக்கும் ஆசிரியர்களும் மேன்மேலும் நன்மை அடைவார்கள்.

ராமகதை என்பது பாரதப்பூமிக்கே உரியது என்று பலர் நினைத்திருக்க வெளிநாடுகளிலும் ராமகதை தொன்றுதொட்டு இருந்து வந்துள்ளது என்பதை நிருபிப்பது போல் அமைந்த காவியம் 'ராமகீயன்' என்னும் தாய்லாந்து நாட்டில் நிலவிடும் ராமகதையாகும். இன்றைக்கு பல நூற்றாண்டுகளுக்கும் முன்பே தாய்லாந்தில் ராமாயணம் நிலவிவந்ததென்பதை பல குகைகளில் காணப்படும் சித்திரங்களிலிருந்து அறியலாம். பலஅரிய நிகழ்ச்சிகளையும், கதைகளையும் தன்னுள் அடக்கிய இக்காவியம் பல புதிய பாத்திரங்களையும் ஏற்று ராமகதையை மீண்டும் பரிமளிக்கச் செய்கிறது.

பேராசிரியர் பத்மஸ்ரீ சத்ய விரத சாஸ்திரி 1930ஆம் ஆண்டு பிறந்தவர். இவர் சம்ஸ்கிருத மொழியில் சிறந்த வல்லுனராவார். நம் பாரத நாட்டிலுள்ள பல புகழ்பெற்ற பல்கலைக்கழகங்களிலும் பணியாற்றி வடமொழியை கற்பித்து பரப்பியது மாத்திர மின்றி பல நூல்களையும் இயற்றி வடமொழி இலக்கிய வரலாற்றில் ஒரு முக்கிய இடத்தைப் பெற்றுள்ளார். பிற நாட்டவர்களுக்கும் குறிப்பாக தாய்லாந்து மஹாராணியான சிரிந்தௌன்க்கு சம்ஸ்கிருத மொழியை கற்றுக்கொடுத்து மேதையாக்கிய சிறப்பு இவரைச்சாரும்.

இவர் பெற்றுள்ள விருதுகள் எண்ணிலடங்காதவை. 'சாகித்திய அகாதெமி விருது,' 'அகில இந்திய காளிதாச விருது' சில்பகோன் பல்கலைக்கழகம் இவருக்கு கௌரவ டாக்டர் பட்டம் அளித்தது ஆகியவை குறிப்பிடத் தகுந்ததாகும். இவர் இயற்றிய காவியங்களில் 'ஸ்ரீ போதிசத்வ சரிதம்,' 'இந்திரா காந்தி சரிதம்' 'ஸ்ரீ ராமகீர்தி மகா காவியம்' முதலியவை பெருங்காப்பியங்களாகும். 'பிருஹத்தரம் பாரதம்' என்னும் சதக நூலையும் இயற்றியுள்ளார். 'சர்மண்ய தேசம் சுதராம் விபாதி' 'தாயீ தேசவிலாசம்' என்னும் சிறு காப்பியங்களையும் படைத்துள்ளார். மொழியியலிலும் மிக்க வல்லுனராவார். தென்னாசிய நாடுகளிலுள்ள இராமகதைகளில் சம்ஸ்கிருதத்தில் முதன்முதலாக எழுதி வெளியிட்ட நூல் இது என்னும் பெருமையும் இவரைச்சாரும்.

ஓய்வு பெற்ற சம்ஸ்கிருத பேராசிரியர் திருமதி ராஜலக்ஷ்மி சீனிவாசன் அவர்கள் மொழியியலில் சென்னைப் பல்கலைக்கழகத்திலிருந்து முனைவர் பட்டம் பெற்றார். தமிழ், சம்ஸ்கிருதம் என்னும் இரு மொழியிலும் வல்லுனரான இவர் பல காவியங்களை மொழியாக்கம் செய்துள்ளார். பல ஆய்வுக் கூடங்களில் பங்கேற்று பல கட்டுரைகளை வழங்கியுள்ளார். பெங்களூரிலுள்ள 'பூர்ண பிரக்ஞா சம்சோதன மந்திரம்' என்னும் பிரபல ஆய்வுக்கூடத்தின் தலைவராக பணியாற்றியுள்ளார். தமிழில் கல்கி படைத்த சரித்திர காவியமான பொன்னியின் செல்வனை சம்ஸ்கிருதத்தில் மொழியாக்கம் செய்துள்ளார். இந்திய கலாசார மையத்தின் *(Senior Fellowship)* பெற்றவர். சிறந்த மொழிபெயர்ப்பாளர் என்ற விருதினைப் பெற்றவர். சம்ஸ்கிருத மொழி வல்லுனர் என்று தேர்ந்தெடுக்கப்பட்டு "சப்தரிஷி" விருதைப் பெற்றவர்.



Sree Ramakeerthi Mahakaviyam
(Tamil)
Rs.135.00

